# இப்புத்தகம்

கவிதையில் புதுக்குரல், கதையில் புதிய நோக்கு, கட்டுரையில் சொந்த நடை, முதலிய அம்சங்களைக் கையாண்டு தமிழில் இலக்கியப் படைப்புக்கள் அளிக்கும் எழுத்தாளர்கள் இன்று நூற்றுக்கணக்கில் இருக்கிருர்கள். அவர்களில் சிலருடைய முயற்சிகளும், சாதனைகளும் இந்த நூலில் தொகுக்கப் பட்டிருக்கின்றன. இன்றைய தமிழ் இலக்கியத் துறையில் காணும் பல்வேறு சோதனைகளுக்கும் இந்த நூல் ஒரு உதாரணமாகவேதான் இருக்கும். எல்லா எழுத்தாளர்களையும் பிரதி நிதித்வ முறையில் இந்தத் தொகுப்பில் சேர்ப்பது இயலாத காரியம். இந்த நூலில் சேர்க்கப்படாத எழுத்தாளர் கள் எத்தனையோ பேர் இருக்கிருர்கள்.

ஒரு கால வரையறைக்குள் நூலை வெளியிடவேண்டிய அவசியம், உரிமைகள் விஷயத்தில் தெளிவு பெற முடியாத சில சிக்கல்கள், எங்களுடைய வேண்டு கோளுக்கு இணங்கி ஆதரவு காட்டிய எழுத்தாளர்களில் சிலர் தொடர்ந்து தங்களுடைய சிருஷ்டிகளை அனுப்பி வைக்க இயலாமற்போனது — முதலிய நிர்ப்பந்தங்கள் இந்த நூலின் வடிவத்தை நிர்ணயித்திருக்கின்றன.

"வாசகர் வட்டம்" மேலும் தொடர்ந்து ஆண்டுதோறும் தொகுப்பு நூல்கள் வெளியிடும்.

சிறந்த எழுத்தாளர்கள் என்று அங்கீகரிக்கப்பட்ட சிலருடைய சிருஷ்டி கள் இந்த நூலில் இல்லை என்ற ஏமாற்றம் வாசகர்களிடையே தோன்றினுல், அந்த ஏமாற்றத்தை "வாசகர் வட்ட"மும் பகிர்ந்துகொள்ளும். அதே போல கையில் கிடைத்த தொகுப்பைக் கண்டு மகிழும் வாசகர்களுடனும் 'வட்டம்' சேர்ந்து கொள்ளும்.

வாசகர் வட்டப் பிரசுரம் - 4.

இப்பதிப்பு "வாசகர் வட்டம்" — சிறந்த தமிழ்ப் புத்தகச் சங்கத்தின்-அங்கத்தினர்களுக்கென, அதன் பதிப்பாளரான "புக்வெஞ்சர்" (*BOOKVENTURE*) நிறுவனத்தினரால் நெ. 14, தணிகாசலம் செட்டி ரோடு, தியாகராய நகர், சென்னை-17 — என்ற முகவரியில் வெளியிடப் பட்டது.

பத்து பாயின்ட் ரோமன் எழுத்துக்களில், சென்னை தியாகராயநகர், "சௌந்தரா பிரிண்டர்ஸில்" அச்சிடப் பட்டு, வீரபத்ரன் பைண்டிங் ஒர்க்ஸில் பைண்டு செய்யப் பட்டது.

மேலுறை, ஒரத்தாள் ஓவியம் :
கலாசாகரம் ராஜகோபால்

ஜூலை, 1965

# பொருளடக்கம்


| | | | |
|---|---|---|---|
| புதுமைப்பித்தன் | கதை | கயிற்றரவு | 9 |
| ச. து. சு யோகி | கவிதை | காலம் | 19 |
| மணிக்கொடி கு. ஸ்ரீநிவாசன | கட்டுரை | ராமன் ஸவபுத்தி வீரன் | 23 |
| சுந்தர ராமசாமி | கதை | அடைககலம் | 27 |
| தி. சோ. வேணுகோபாலன் | கவிதை | என்ன பொருள்? | 36 |
| மா. கிருஷ்ணன் | கட்டுரை | காட்டானை | 38 |
| தி. ஜ. ர. | கதை | நாகரத்தினம | 57 |
| திருலோக சீதாராம் | கவிதை | மூலப்பிரதி | 77 |
| சி. சு. செல்லப்பா | கட்டுரை | பாரதியின் அககினிக்குஞ்சு | 79 |
| சாலிவாஹனன் | கவிதை | பருவமழை | 90 |
| ந. பிச்சமூர்த்தி | கதை | ஞானப்பால் | 95 |
| என். எஸ். சிதம்பரம் | கவிதை | ஆதி கவிஞன் | 107 |
| பி ஸ்ரீ. | கட்டுரை | முத்து-முத்தம்-முக்தி | 109 |

| | | | |
|---|---|---|---|
| கம்பதாஸன் | கவிதை | வெண்முகில் | 116 |
| அ. சீனிவாச ராகவன் | நாடகம் | விசுவரூபம் | 118 |
| துறைவன் | கவிதை | வருகை | 156 |
| கு. அழகிரிசாமி | கதை | தரிசனம் | 158 |
| கா. மு. ஷெரீப் | கவிதை | காவேரிக்கரை | 170 |
| வ. ரா. | கட்டுரை | எது தமிழ் ? | 172 |
| சுரதா | கவிதை | காடு | 183 |
| ஆர். சூடாமணி | கதை | நிலவும் இருக்கிறது | 185 |
| கொத்தமங்கலம் சுப்பு | கவிதை | மாரியாத்தா | 198 |
| பி. எஸ். ராமையா | கதை | பணம் பிழைத்தது | 200 |
| கோமுகி வேலன் | கவிதை | சொத்தைக் கரும்பு | 213 |
| சுகி. சுப்ரமண்யம் | நாடகம் | பிரதிவாதி அன்னம்மாள் | 216 |
| கவிமணி தேசிக விநாயகம் பிள்ளை | கவிதை | வாழ்க்கைத் தத்துவங்கள் | 232 |

## புகைப்படங்கள்

(மா. கிருஷ்ணன்)

முதல் படம் — மதம் பிடித்த பெருங்களிறு காலிலுள் காயங்கள் துப்பாக்கிக் குண்டுபட்ட காயங்கள். கொம்பால பூமியை எதற்காகவோ தோண்டி, கொம்பில் களிமண் ஒட்டிக் கொண்டிருக்கிறது.

இரண்டாம் படம் — திருபுவனத்திலுள்ள யானைச்சிற்பம்

மூன்றாம படம — திருபுவனத்திலுள்ள யானைச்சிற்பம்.

நான்காம படம் — கோடைக் காலத்தில் காட்டானை சேற்றில் படுத்துப் புரளும் காட்சி.

" புதுமைப்பித்தன் "

# கயிற்றரவு

'கள்ளிப்பட்டியானால் என்ன? நாகரிக விலாசமிட்டுத் தொங்கும் கைலாசபுரம் ஆனால் என்ன? கங்கையின் வெள்ளம்போல, காலம் என்ற ஜீவநதி இடைவிடாமல் ஓடிக்கொண்டிருக்கிறது....... ...ஓடிக்கொண்டேயிருக்கும். தயிர்க்காரி சுவரில் புள்ளி போடுகிற மாதிரி, நாமாகக் கற்பனை பண்ணிச் சொல்லிக் கொள்ளும் ஞாயிறு, திங்கள், செவ்வாய்க் கிழமைகள் எல்லாம அடிப்படையில் ஒன்றுதானே. பிளவு–பின்னம் விழாமல் இழுக்கப்பட்டுவரும் ஒரே கம்பி இழையின் தன்மைதானே பெற்றிருக்கின்றது. இல்லை—இல்லை, சிலந்திப்பூச்சி தனது வயிற்றிலிருந்து விடும் இழைபோல நீண்டுகொண்டே வருகிறது இன்று—நேற்று—நாளை என்பது எல்லாம நம்மை ஒர் ஆதார எண்ணாக வைத்துக்கொண்டு கட்டிவைத்துப் பேசிக் கொள்ளும் சவுகரியக் கற்பனைதானே. நான் என்ற ஒரு கருத்து, அதனடியாகப் பிறந்த நானல்லாத பல என்ற பேத உணர்ச்சி, எனக்குமுன், எனக்குப்பின், என்று நாமாக வக்கணையிட்டுப் போட்டுக்கொண்ட வரிகள்...... இவை எல்லாம் எத்தனை தூரம் நிலைத்து நிற்கும் .. ... நான், நான் என நினைத்த, நினைக்கும், நினைக்கப்போகும் பல தனித்துளிகளின் கோவை செய்த நினைப்புத்தானே இந்த நாகரிகம்.........கூட்டு வாழ்வு என்ற வாசனையை யொட்டி, மனசு இழைத்து இழைத்துக் கட்டும் மணற்

சிற்றில்தானே இந்த நாகரிகம்......மகா காலம் என்ற சிலந்தியின் அடிவயிற்றிலிருந்து பிறக்கும் ஜீவநதியின் ஓரத்தில் கட்டிவைத்த மணற்சிற்றில்...... என்ன அழகான கற்பனை' என்று உச்சிப்போதில் பனை மூட்டினடியில் குந்தி உட்கார்ந்திருந்த பரமசிவம்பிள்ளை நினைக்கலானார்.

துவர்த்து முண்டில் அவர் கட்டியிருந்த ஒற்றைப் பிரி முண்டாசுக்குத் தப்பிய சிகைத் தலையில் வெய்யில் தாக்கியது. குனிந்து குந்தியிருந்தபடியே பனைநிழல் வாக்கில் வெயில் சற்றுப்படாதபடி ஒரு பக்கம் நகர்ந்தார். முள்ளும் முனையுமாக நின்ற ஊவாஞ்செடி, கருவேலங்கன்று பெருந் துடையில் குத்தியது. மறுபுறமாக விலகிக்கொண்டார். குனிந்து கவனித்துக் கொண்டிருந்தவருக்கு நினைவு பிரபஞ்ச யாத்திரை செய்ததென்றாலும், மலத்தில் மாண்ட குடல்புழு கண்ணில் விழுந்தது. 'மலப்பிறவி.........பல ஜன்மம், பல மரணம், சீச்சீ... ..' மனம் குமட்ட வேறு ஒரு பனை மூட்டினடியில் போய் அமர்ந்தார். அது விடலிப் பனை. சற்றுத் தாழ்வாக இருந்ததனால் நிழலும் சுமாராக இருந்தது முள் குத்தலும் இல்லை. ஆனால் சரல் குத்தியது.

மனமோ 'பிறவா நெறி' காட்டாமல் மீண்டும் மீண்டும் மலப்புழு மாதிரி உடற்கூற்றின் விளைவாக எழுந்த அவசங்களின்பால் விழுந்து குமைந்தது.

'மனம் என்ற ஒன்று உடம்பைவிட்டுத் தனியாக, அதன் அவசியம் இல்லாமலே இயங்கக்கூடிய ஒன்றா, அல்லது நாதத்துக்கு வீணை என்ற சாதனம் அவசியமாக இருப்பது போலத்தானா...... நான் பிறப்பதற்குமுன்...... என்னைப்பற்றி எனக்குப் பிரக்ஞையுண்டா ? என்னைப் பற்றி, இப்பொழுது என்னைப் பற்றியுள்ள சூழ்நிலைக்குத் தான் பிரக்ஞையுண்டா ?

'இந்தப் பனை, இந்தப் பனை விடலி யெல்லாம் என் பிரக்ஞைக்குள்பட்டது. இது முளைத்தது எனக்குத் தெரியும். இது முளைப்பதற்குமுன் இந்தக் கட்டாந்தரை, இந்த நிழல்கூட அற்று இருந்தது தெரியும். முந்திய ஆடிக்

காற்றில் விழுந்ததே அந்தப் பனை, அது எங்கு நின்றது என்றுகூட நிதானிக்க முடியாமல் வரட்டுக் கட்டாந் தரையாகத்தானே கிடக்கிறது .....நான் பிறப்பதற்கு முன்பு.........பரமசிவம் பிள்ளை என்ற ஒருவன் விருப்பு, வெறுப்பு, ஆசை, துயரம், கவலை, பொறுப்பு முதலியவற்று டன் கூடிய ஒரு ஜந்து, வாழையடி வாழையாக வரும் விளையாட்டின் வித்தைகளை வாலாயமாகக் கற்று, அதற்கு இசைந்தோ இசையாமலோ விளையாடி...பிறகு பரமசிவம் என்ற பெயர் மட்டும் போகுமிடத்துக்கு வழிவைத்து விட்டு, வந்த வழியைப் பார்த்துக்கொண்டோ, அல்லது புது வழியிலோ போய்விடும் ஒரு தோற்றம்.........ஒரு பொம்மலாட்டம்! பொம்மலாட்டம் என்று எப்படி நிச்சயமாகச் சொல்லமுடியும்? சூத்திரக்கயிறு இழுக்கிறதா அல்லது சூத்திரதாரன் உண்டா? நிச்சயமாக ஏப்படி இருக்கிறது, அல்லது இல்லையென்று இரண்டில் ஒன்று சொல்லிவிட முடியும்?......வருகிற வாசல் போகிற திசை இரண்டுந்தான் தெரிகிறது. வருகிறது ஒரு யோனித் துவாரம்......போகிறது மற்ெறாரு யோனித்துவாரம்... பிரகிருதி என்ற அன்னையிடந்தானு? அல்லது கருவூரி லிருந்து கருவூருக்குச் செல்லும் பாதைதான் மனித வாழ்வா? முடிவில்லா வித்தையா? முறையில்லாத் தந்திரமா?......

கைலாசபுரத்து ஆற்றங்கரைப் பனைமுட்டடியிலே உட்கார்ந்திருந்த பரமசிவம் பிள்ளையின் மனம் 'தான்' இல்லாத ஒரு காலத்தைச் சற்று சிரமத்துடன் கற்பனை பண்ணத்தொடங்கியது.

## 1

சுமார் அரை நூற்றாண்டுக்குமுன் கைலாசபுரத்தி லும் சூரியோதயம், சூரியாஸ்தமனம் தெரிந்துகொண்டுதா னிருந்தது. அப்பொழுது ஆற்றங்கரைக்கு வரும் பாதையில் அத்தனை காரைக் கட்டிடங்கள் கிடையாது. புழுதி

கிடையாது. சுகமான மருதமர நிழல் உண்டு; மாடு படுத்திருக்கும். மனித நாகரிகமே அந்தப் பிராந்தியத்தில் அப்பொழுது உட்கார்ந்து அசை போட்டுக்கொண்டிருந்த மாதிரிதான் தென்பட்டது. ஆனல், இயக்கம் இருந்து கொண்டுதானிருந்தது. ஞாயிற்றுக்கிழமை மடிந்து திங்கட்கிழமை பிறக்கிறது. எந்த வினடிக்குள் என்று யாருக்காவது நிர்த்தாரணமாகச் சொல்ல முடியுமா? நாமாக முடுக்கிவிட்ட கெடிகாரம் சொல்லுவதும், நாம் சொல்லுவதும் ஒன்றுதான். ஞாயிற்றுக் கிழமையாகவே இருந்து கொண்டுவந்தது, திங்கட்கிழமை என்று நாம் சொல்லும்படியாகிவிட்ட ஒரு தன்மை போல், நாகரிகம் அங்கே உட்கார்ந்து அசை போட்டுக் கொண்டிருப்பது போலத் தென்பட்டதும் ஒரு தோற்றந்தான். அது அப்படியே உட்கார்நதுகொணடே இருந்தால், இப் பொழுது காரைக் கட்டிடங்கள் எப்படி முளைத்திருக்கும்? மருத மரத்து நிழல் இன்னும இருந்துகொண்டிருக்குமே! அப்பொழுது காற்றடித்தது; மழை பெய்தது; நதியில் வெள்ளம் வந்தது. பனே மரங்கள் சாய்ந்தன; விறகாயின ......விட்டமாயின. விடலிகள் முளைததன; சூரியாஸ்த மனம்..... சூரியோதயம். ... ஆறறங்கரைப படிக்கட்டில் அழகியநம்பியாபிள்ளை வேட்டி துவைப்பார் . உட்கார்ந் திருந்து அழுக்குத் தேய்ப்பார். ஆற்றில் மூழ்கிக் குளிப் பார். நினறு திருநீறு அணிவார். அனுஷ்டானதிகள் செய்வார் படிமீது மருதமர நிழலகள் கவிந்திருக்கும். ஆனல், இப்போது படிக்கல் சரிந்துவிட்டது. பாதை உண்டு. மணலிலும் தெற்றுக்குத்தாக நிற்கும் படிகளை மறைத்தும் தணணீர் ஓடும. இபபொழுது மருதமரம் இல்லே. வெயில் உண்டு; கல் வழுக்கும்.

அன்றும், ஐம்பது வருஷங்களுக்கு முன்னல், கருவூரிலே வீரியவெள்ளம் பிரவகித்தது. அதிலே விளேந்த அனந்த கோடி பீஜங்களிலே ஒன்று நிலேத்தது. அனந்த ஜீவ அணுக்களிலே அதற்கு மட்டும் அதிர்ஷ்டம் என்பதா? அல்லது நிலேக்க வேண்டும் என்ற பூரண பிரக்ஞையுடன்

அது நிலைத்ததா? எப்படியானாலும் இந்த அணு இல்லா விட்டால் இன்னொன்று நிலைத்தது; ஒன்றியது; உருவம் பெற்றது; உணர்வுபெற்றது. மீனாயிற்று, தவளையாயிற்று, வாலிழந்தது, குரங்காயிற்று, சமாதி நிலையிலே உறங்க லாயிற்று...... சிசுவாகி, கைக்கட்டை விரல்களை உள்ளங் கையில் மடக்கி விரல்களைக்கொண்டு மூடிக் குண்டுக் கட்டாகக் காத்திருந்தது .....

கைலாசபுரத்திலே மரங்கள் மொக்குவிட்டன. பூ மலர்ந்தது. தேன் வண்டுகள் வரத்துப் போக்கு வைத்துக் கொண்டன. மரமும் சூலுற்றது . பிஞ்சுற்றது...

கருவூருக்கு வடக்கே உதரபுரியிலே யிருந்து ஹுங் காரம் போன்ற அலறல பிறந்தது. வேதனையிலே குரல் பிறந்தது. கைக்கட்டை விரல்களை உள்மடக்கிப் பிடித்துக் கொண்டு தலைகுப்புற வந்து விழுந்தது ஒரு பிண்டம்— ஒரு ஜன்மம். பிரக்ஞை வந்தது. சாட்டுமலம் போயிற்று... ஜன்மம் வீறிட்டது. கைகளையும் கால்களையும் சுண்டி உதறிக்கொண்டு அழுதது. கருவூர்க் கயிற்றைக் கத்தரித்து விட்டார்கள். தனி ஜனமமாயிற்று. தனித்தன்மை பெற்றது. முலை சுவைத்தது ..உறங்கியது ..அழுதது... முலை சுவைத்தது.

கைலாசபுரத்திலே மரங்கள் காய்த்தன. கொத்துக் கொத்தாக, பச்சைப் பச்சையாகக் காய்த்துத் தொங்கின. மரத்தையே தரையில் இழுத்துக் கிடத்திவிடும் போலிருந்தது, அந்த வருஷத்துக் காய்ப்பு.

## 2

நிலவொளியிலே நிலா முற்றத்திலே அழகியநம்பியா பிள்ளை குழந்தை யொன்றை வைத்துக் கொஞ்சுகிறார். குழந்தை கொஞ்சுகிறது.

" அப்பா யாரு ?" என்று கேட்கிறார் அழகியநம்பியா பிள்ளை.

குழந்தை தனது நெஞ்சைத் தட்டிக்காட்டியது.

" முட்டாப்பயலே; நான்தாண்டா அப்பா! நீ பரம சிவம்..பரமசிவம் பிள்ளை !" என்றார் அழகியநம்பியா பிள்ளை.

" அப்பா யாரு ?" என்றார் அழகியநம்பியா பிள்ளை. குழந்தை அவரது நெஞ்சைத் தொட்டுக காட்டியது.

"பரமசிவம் யாரு?" என்று கேட்டார் அழகியநம்பியா பிள்ளை.

" நான் " எனத் தனது நெஞ்சைத் தட்டிககொண்டது குழந்தை.

"போடு பககாளி போடு! பத்துப் பககாளி போடு!" எனக குழந்தையை மெய்ம் மறநது குதூகலத்தில பநது போல் தூக்கிப போட்டு விளையாடினார.

குழந்தை பரமசிவமாகி நான-நீ-அவன் என்ற பேதா பேத பிரகஞையுடன் வாழையடி வாழையாக இருநதுவரும் விளையாட்டைக கறறுககொள்ள ஆரம்பிததது. அமமா—அப்பா—தெரு—ஊர் எனப் பரிசய விலாசம படிபபடியாக வளாநதது. வாத்தியார், பிரம்படி, பிறகு கல்வி, சிலலறை அறிவு, பிரம்புக கொட்டடியிலும மற்றபடி இனிககினற, அவசியமான, பிரியமான ஞானச் சரககுகளை வேற்று அங் காடிகளிலும் பரமசிவம் பெற்றார். சீனிஇனிக்கும்-நெருப்பு சுடும்—அப்பா கோபிப்பார்—கடவுள் மன்னிக்க மாட்டார் என்ற நேர் அனுபவ, அனுபவ சூன்யக் கருத்துக்கள் எல் லாம் நான், என்னுடைய என்ற அடித்தளம் இட்ட ஒரு மனையில சுவர் எழுபபிக் கட்டிடம் அமைகக ஆரம்பித்தது. பள்ளிக்கூடம்—ப ர ம சி வ ம்—அடி—உதை—பலம்—பலீன் சடுகுடு முதலிய பாதைகளில் செல்ல, கிழமைகள் என்ற கால அமைதி தாராளமாக வசதி செய்து கொடுத்தது.

அழகியநம்பியா பிள்ளையின் வேலைகளை மேற் கொள் ளும் கட்டம் வந்தது. பரமசிவம், பரமசிவம் பிள்ளையா

னூர். உடல் வாட்ட சாட்டமாக அமைந்தது. உடம்பில் வலு, நெஞ்சில் உரம், மனசில் நம்பிக்கை, தைரியம், வீட்டிலே சமைத்துப் போட..... .பிறகு வம்ச விருத்திக் களமாக்கிக் கொள்ள' ஒரு யுவதி...உச்சுவாச நிச்சுவாசத்தை விட என்ன சுகம்...போகம்...உடலில் உள்ள வலு வீரியமாகப் பெருக்கெடுத்து ஜீவ தாதுக்களை அள்ளி விசிறியது. இப்பொழுது கிழமைக்கும் வாரத்துக்கும் மாதத்துக்கும் ஓடும் வேகந்தான என்ன? கஷடம்—வருத்தம்—கசப்பு—ஏமாற்றம்—கடன் வாங்கி அதற்குள் ஐந்து வருஷங்களா? என்ன ஓட்டமாக ஓடுகிறது மணல கூணடு சரிகையில் கடைசி மணல்பொடி விரைநது ஓடி வருவது மாதிரி என்ன வேகம்?... நிஜமாக, திங்களும செவ்வாய்களும இப்போது தான் இவ்வளவு வேகமாக ஓடுகின்றனவா?......அல்லது நான்தான் ஓடுகிறேனு?...நான யார்?...இந்த உடம்பா?... தூங்கும்போது, பிறகுமுன இந்த நான எங்கிருந்தது?... இந்த நான்தான் ஒடுகிறதா? . நானதான் ஓடுகிறதா?... பெட்டியடிக் கணககு... ..இடுபபொடிககும் உழைப்பு... குனிந்து குனிந்து இன்னொருவன் பணமூட்டைககு தலையை அண்டைககொடுத்து கழுததே சுளுககிக கொண்டதே முதுகிலே கூன விழுந்துவிட்டது.

பிறனுக்கு நலம பாாத்து நாலு காசு சேர்த்துவைத்துக் கண்ணிலும வெள்ளெழுத்த. வீட்டிலே பூனை படுத்திருக்கும்...பொய்மை நடமாடும். வறுமையும ஆங்கே பெற்றெடுத்த பிள்ளையுடன வட்டமிட்டுக கைகோத்து விளையாடும். மனையாளுக்கு கண்ணிலே இருந்த அழகு—ஆளைத் தூண்டிவிட்டு இழுக்கும் அந்த அழகு எங்கே போயிற்று? கையில் ஏன் இந்த வரட்சி ? வயலோ ஒத்தி, வீடோ படிப்படியாக மூலப் பிரகிருதியோடு லயமாகிவிட யோக சாதனம் செய்கிறது விட்டமற்றுப் போனல் வீடும் வெளியாகும்...... அப்பொழுது அழகியநம்பியா பிள்ளை எங்கே? அவர் மகன் பரமசிவம் எங்கே?.........எல்லாம் பரம ஒடுக்கத்திலே மறைந்துவிடும். எத்தனை துன்பம்...எத்தனை நம்பிக்கைக்காக எத்தனை ஏமாற்று...எத்தனை கடவுள்கள்......வாய்க்கு

ருசி கொடுக்க ஒரு கடவுள்...வயலுக்கு நீர்பாய்ச்ச ஒரு கடவுள்...வியாச்சியம் ஜயிக்க...சோசியம் பலிக்க, அப்புறம் நீடித்து நிசமாக உண்மையில் பக்தியாய்க்கும்பிட. எத்தனை யடா எத்தனை?.. . நான் தோன்றிய பின் எனக்கு என்று எத்தனை கடவுள்கள் தோன்றினார்கள்? எனக்கே இத்தனை யென்றால் என்னைப் போன்ற அனந்த கோடி உயிர்—உடம் புகள்கொண்ட ஜீவநதியில் எத்தனை? ..ஆற்று மணலைக்கூட எண்ணிவிடலாம. இந்தக் கடவுளர்களை—? ஒருவன் பிறந் தால் அவனுடன் எத்தனை கடவுளர்கள் பிறக்கிறார்கள். அவனுடன் அவர்கள் மடிந்து விடுகிறார்களா? 'நான' மடிந்து விடுகிறதா?.. ...அப்பொழுது ஒரு வேளை அவர் களும் இந்த நானோடு போய்விடக்கூடும் இந்த நானையும் மீறித் தங்கி விடுகிற கடவுளர்களும் உண்டு. அவர்கள் தான் மனம் என்ற ஒன்று கால வெள்ளத்துக்கு அருகே அண்டி விளையாடும் மணல் வீட்டைப் பந்தப்படுத்த முயலும் சல்லிவேர்கள்.. பரமசிவம், பரமசிவம்! உனக்கு எதுக்கடா இந்தச் சள்ளை! அதோ, காலடியில் பாமபுடா, பாம்பு. ! கயிற்றரவு!

## 3

காலம் ஒரு கயிற்றரவு ? கயிற்றரவு !

பரமசிவம் பிள்ளையைக் கட்டிலிலிருந்து எடுத்துத் தரையில் கிடத்திவிட்டார்கள். பாம்பு கடித்தால் பிழைகக முடியுமா ? போகிற வழிக்குப் புண்ணியம் சேர்க்கத் தலை மாட்டில் உட்கார்ந்து யாரோ தேவாரம் படித்தார்கள். பரமசிவம் பிள்ளை ஏறிட்டுப் பார்த்து சிரமத்துடன், 'தூரத் திலிருந்து படித்தால் கேட்பதற்குச் சுகமாக இருக்கும்...... பக்கத்திலிருந்தால் காதில் வண்டு குடைகிற மாதிரி தொந் தரவாக இருக்கிறது' என்றார்...

கண்ணை முழுவதும் திறக்காமலும் முழுவதும் மூடா மலும் அரைக்கண் போட்டபடி உலகைப் பார்ப்பதிலே அவருக்கு ஓர் ஆனந்தம் இருந்தது. நிம்மதி இருக்கிறது.

தூரத்திலே தேவாரம், தண்ணீரடியில் முங்கி உட்கார்ந்தி ருக்கும்போது கேட்கும் தூரத்து ரீங்காரம் மாதிரி சுகமாக இருக்கிறது. அதோ தெரிகிறது என் புஸ்தகம்...என்னு டைய கால் கட்டைவிரல்தான் ..இனி எத்தனை நேரம் எனக்கு இது தெரிந்து கொண்டிருக்கும் .ஸ்மரணையில் கால் இருக்கிற மாதிரி தெரியவில்லையே. கண்ணுக்குத் தெரிந் தால் மட்டும் போதுமா; ஸ்மரணைக்குப் புலனாக வேண் டாமா? கால்கட்டை விரல் ரொம்ப தூரத்திலிருக்கிறதோ இரண்டு மைல் தூரத்தில். சீ எட்டு மைலாவது இருக்க வேண்டும்.. அதோ அந்தப்புஸ்தகம், இப்பொழுது அதுவும் தூரத்தில் தெரிகிறதே அதில் என்ன எழுதி வைத் திருந்தேன் கணக்கா. சுவடியா அழகிய நம்பியைக கூப் பிட்டுக் கேட்கவேண்டும் எது இருந்தால்தான் என்ன? நாம் செத்துப் போனால் இந்தக கால் கட்டைவிரல் சாம்ப லாகத்தானே. அது எவ்வளவு நேரம் எனக்குத் தெரியப் போகிறதோ. கொஞ்சம நிம்மதியாகப் பார்த்துக் கொண்டே இருப்போமா அதுவும் சுகமாகத்தானிருக் கிறது. உறக்கம் வருகிறதோ அசதியாக வருகிறதே.. நிம் மதியாகக் கண்ணை மூடினால் அப்பா என்ன சுகம் .மூச்சு நின்றது. கைககட்டை விரலகள் உள்வாங்கின காட்டு மலம் வந்தது...நான் கழன்றது. ஸ்மரணை கழன்றது.. உயிர் —ஆமாம், உயிரும் அகனறது .அன்று கருவூரிலே உருவற்று நிலைத்த பிண்டம் இன்று உருவுடன் வதங்கிக் கிடந்தது.

## சுழி

சாம்பல் காற்றோடு போச்சு; பெயர் பெயரோடு

போச்சு...மனித மனம் இம்மாதிரி அனந்த கோடி கூடுகளை கட்டிக் கட்டி விளையாடியது ..கைலாச புரத்து மருதமரம் நிழல் கொடுத்தது. மரம் பூத்துக் காய்த்தது, பழுத்தது... ஆற்றில் தண்ணீர், தண்ணீர் மணலிலும்படியிலும் தவழ்ந்து ஓடியது. கள்ளிப்பட்டியானால் என்ன, கைலாசபுரமானால் என்ன? காலவெள்ளம் தேக்கற்று ஓடிக் கொண்டே இருந்

தது...அதிலே வ ரை யி ல் லை...வரம்பில்லை...கோடுகூடத் தெரியவில்லை.........கருவூரிலானுலென்ன ? காட்டூரிலானு லென்ன? சமாதியோ...பிரக்ஞையோ? எதுவானுலென்ன?

நான் ஓடினுல் காலம் ஓடும். நான் அற்ருல் காலம் அற்றுப்போகும். காலம் ஓடுகிறதா? ஞாயிறு-திங்கள்-செவ் வாய்...நான் இருக்கும்வரைதான் காலமும். அது அற்றுப் போனுல் காலமும் போகும். வெறும் கயிற்றரவு!

பரமசிவம் பிள்ளை எங்கே?

ச. து. சு. யோகி

# காலம்

## 1

காலமே, அழிவிலாக ககனமே,
அன்றும், இன்றும், என்றும் ஆவாய்!

•நின்னுடை அகண்ட நித்திய வானில்
கண முதல் கற்பக் கணக்கெலாம் பார்க்கில்
சிறிதும் பெரிதுமாய்ச் செல்லும் முகிற் கணம்.

ஆழ்ந்து அகன்ற நின் ஆர் கடல் அதனுள்
வருடங்கள் சிற்றலை, மாதங்கள் நுரைத் திரள்,
நாட்கள் மொக்குள், நாழிகை மொக்குளின்
உள்ளுறை காற்று, உருள் கணம் காற்றில்
உதறும் நுண் துளி.

போலி எண்ணங்கள், கேலி கூத்துக்கள்
யாவும் நின் மாருதச் சூழலில் அழியும் ;
வெற்றுரை ஆவேச வெறியில் உடைபடும்
வயிர நெஞ்சக வண் சுடர் சிற்சில
மட்டுமே அழியாது மலரும் ; ஆதலால்,
உண்மைக்கு நீயே உரைகல்.

**5**

சிப்பி உடையச் சிரித்திடும் முத்தெனப்
பழமைப் பேழையின் படல்களை உடைத்துப்
புதுமை உதயப் புன்னகை பூப்பாய்!
பழையதோர் உலகம் பண்ணிய மதுவைப்
புதுமை உலகத்துப் பொங்கொளிக் கிண்ணியில்
வார்ப்பாயாக, வாழ்த்தினோம், வழுதி!

செயல்பல நின்னைப் பிடித்திடத் திரிவன,
நின்னுடை வேகம் நினைக்கவும் பெரிதே;
ஆயினும்,
சிற்சில நலந்தரும் செயல்களும் நீயே
பிடித்துமே இனிமைப் பெருமைகள் காப்பாய்

பழமை போற்றுவோர் புதுமைகண்டு அஞ்சுவார்;
ஆயிரங் காலமாய் அருமையாய் வளர்ந்த
வளர்ச்சியைக் கணத்தில் நீ மாய்த்திடல் கண்டு,
உளம் நொந்து அழுவர், ஒண் சுடர்க் கதிரோன்
கழிவதற்கு அழுங்கிக் கருமுகில் போர்த்து
அந்திவான் கண்ணீர் சிந்துமேல், இந்துவின்
இளங் கதிர் இனபமும் இழந்திடும அன்றோ?

**8**

அழுகிக் கீழ்விழும் பழங்கனிக் காய் மரம்
அழுவதும் உண்டோ? விழுந்திடாது எஞ்சிய
புதுக்கனி காக்க விரும்பிடல் போல,
போனவை போக, நீ புதுமைகள் கொணராய்!
காலமே, நின்னை வாழ்த்தினோம், காப்பாய்!

## 9

பழமை என்னும் இருட்டறை பரவும்
சிற்றொளி விளக்கில் திரியலை, எண்ணெய்
வரண்டது, சுடரும் மங்கியே இருளை
மிகுதிப் படுத்தும் மின்மினி போன்றது.
இருளைப் போற்றுவோர் போற்றுக, நாங்கள்
புதுயுக மாந்தர் புத்தொளி வேண்டினோம்.

## 10

சிதையா நின்னைச் சிதைத்தான் மனிதன் ;
ஆனால்,
ஒவ்வோர் சிதைவும் ஒவ்வோர் சிதைவொடும்
பிரியா வண்ணம் பிணைந்தேயுளது !
அதனை மானுடன் அறியான்.

## 11

முசுட்டை இலையை முடைப் புழுவாகி
நச்சிக கறிதது நாளெலாம் உழைத்த
பிச்சை வாழ்வைப் பெரிதாய் நினைத்து,
பட்டுப் பூச்சி வான் பாய்ந்திடும் போது,
அழுவதும் உண்டோ ? ஆர்வத்தோடு அது
விடுதலைபெற்று விண்ணில் பறத்தல் காண் !
பழமையே நின்னைப் படக்கென ஒடிப்பேன் !
நின்னுடைப் புதுமை வானத்து நீந்துவேன்,
காலமே ! எனக்கு நின் புதுமைகள் காட்டாய் !

## 12

சென்றதோர் காலச் சிறப்பெலாம் பொங்கும்
தாஜ்மஹால் இன்பத் தழலினைக் காப்போம் ;
ஆயினும், அதற்காய் ஆயிரங் காலமாய்

ஓட்டையாய் உளுத்து ஒடிந்திடும் குடிசையும்
காப்போம் என்றிடல் பேதமை கண்டாய்.

### 13

பழங்கால மேகங்கள் வருங்கால் மழை படைக்கும்.
ஆயினும்,
நிகழ் காலம் காற்றின்றிப்
புழுக்கமாய் நீண்டதுவே.

### 14

கிழவன் குழந்தைக் கிளர்ச்சியில் மகிழ்வான்,
முதியதோர் பழமை புதியதில் மகிழும்,
குழந்தை, கிழவன் போல் குற்றுயிராகிப்
பழமைப் பாட்டனின் பருமனைக் கண்டு
ஏங்கிடில், இளமையும், வளமையும், இன்பமும்,
யாவும் இழந்து அழியும். அதுபோல்,
நீவிரும் பழமை நினைவை எண்ணுதீர் !
பழமை அனுபவம் பாரில் நம்துணை;
ஆனால், அது நம் அதிகாரி அன்று.

### 15

பழங்காலம் நிகழ்காலம் படைக்கும்; நிகழ்காலம்
வருங்காலம் வகுக்கும்; வளமையெலாம்
கொணர்ந்திடுவோம்,
காலத்தாற் கடந்த காட்சிகளைப் போற்றி செய்து,
காலங் கழித்த கசடெல்லாம் விட்டுவிட்டோம்,
இறவாமல் இன்றுமுள இன்பங்கள்
போற்றிடுவோம்,
இறவாத புகழுடைய இன்பங்கள்
படைப்போமே.

# ராமன் ஸ்வபுத்தி வீரன்

மணிக்கொடி
கு. ஸ்ரீனிவாசன்

யுகம் யுகமாக, ராமன் பிரமாண புருஷனாகக் கருதப் படுகிறான். எதற்காக?

முடி உரிமையைத் துறந்து, தன் தந்தையின் வாக்கைக் காத்த பெருமைக்காக; அரியணையில் அமர்ந்து சகல போக பாக்கியங்களுடன் அயோத்தியில் ஆட்சி புரிவதைவிட்டு, பதினான்கு வருடங்கள் அடவியில் திரிவதற்கு உடன்பட்ட தற்காக.

அன்று அந்த வேளையில் ராமன் செய்த முடிவு தந்தை யின் ஆணைக்குக் கீழ்ப்பட்டிருந்ததா, அல்லது அவர் வேண்டுகோளை மீறியா? என்று கேட்டால் அதை அசட்டுக் கேள்வி என்று புறக்கணிக்க முடியாது.

முடிசூட்டு வைபவத்திற்கு நிச்சயித்த நாள் விடி முகூர்த்தத்தில், கைகேயி தேவியின் அந்தப்புரத்தில் நிகழ்ந்த கோர நாடகத்தைக் கூர்ந்து நோக்கினால், இந்தக் கேள்வி ஏன் என்பது விளங்கும். இந்தக் கேள்விக்குக் கிடைக்கும் பதிலிலிருந்து, ராமனுடைய குணம் புது ஒளி யுடன் பிரகாசிப்பதைக் காணலாம்.

நிகழ்ச்சிகளின் கொடுமையைக் கொண்டு கூசியோ, தசரதனின் துயரத்திற்கு இரங்கியோ, வேறு எந்தக் காரணத்தைக் கொண்டோ கம்பன் விவரங்களைப்

போர்த்து மூடி, வாதப் பிரதிவாதங்களைச் சுருக்கி, மலர்ந்த தாமரையொத்த முகத்தோடு, ராமனை அந்தப்புரத்தி லிருந்து விடுகிறான். வால்மீகி தரும் விவரங்களில் ராமன் மனத்தில் உண்டான கொடூர இக்கட்டையும், அந்த நிலை யிலிருந்து புருஷ ஆகிரதையுடன் தனனைத்தானே அவன் மீட்டுக் கொண்டதையும் காணலாம்.

தசரதன் எவ்வளவு கெஞ்சிக் கெஞ்சிக் கேட்டும், கைகேயி மனம் மாறாமல் ராமன் காட்டுக்குப் போகத்தான் வேண்டும் என்று பிடிவாதம் பண்ணுகிறாள். ராமன் உள்ளே வருகிறான். நிலைமையை அறிநதுகொண்டு, தாயின் ஆசையையும் தந்தையின் வாககையும் நிறைவேற்றுவது தனது கடமையாகும் என்று ராமன் நொடியில் முடிவு செய்துவிடுகிறான். தனது முடிவைச் சொல்லியும் விடுகிறான்.

தசரதன் துயரம் தாங்கமுடியாத வெப்பத்தை அடை கிறது. எந்த ராமனுடைய நலததை விரும்பித் தன் மனைவியுடன அவன் மனமுடிஞனே அந்த ராமனே அவனு டைய இஷ்டத்தைப் பூர்தத்தி செயய முனவநதுவிட்டான். அந்த பெருந்தகையையா காட்டுககு அனுபபுவது? கூடாது கூடாது, எனறு அவன மனம கூககுரலிடடது. எப்படி யாவது முயனறு எதையாவது செய்து இககொடுமையை விலக்க வேண்டுமென்று அலலாடிய மனத்தில் புது எண்ணம தோன்றியது. தனககுத் தோன்றிய எண்ணம் பொருத்தமானதா? அனறு? எனறு அவன் யோசிக்கவில்லை. ராமனிடத்தில் அவனுககிருநத பாசத்தினால் அநத யோசனையை செயலாக்கலானான்.

“ராமா, நீ காட்டுக்குப் போக என மனம் இணங்க வில்லை நீ காட்டுக்குப் போகவேண்டாம். நான் ஒரு உபாயம் சொல்கிறேன், கேள். அதன்படி நட” என்றான் ராமனை நோக்கி.

“தங்கள் விருப்பம் என்ன?” என்று பணிவுடன் ராமன் கேட்டான்.

"சத்தியத்தினுல் கட்டுண்ட நான் இக்கொடியாளின் கோரிக்கையை மறுக்கச் சக்தியற்றவனுக இருக்கிறேன். எவ்வளவு வேண்டியும், மனம் மாருமல் இவள் தான் கேட்ட வரத்தையே வற்புறுத்துகிருள். நான் ஸ்வதந்திரனுக இருக்கும் வரையில் இவள் கேட்கும் வரத்தைக் கொடுக்கக் கடமைப்பட்டவன். என்னுடைய ஸ்வதந்திரம பறிபோய்விட்டால், நான் செயல திறனற்றவனுகி விட்டால், இவள் கேட்கும் வரம் என்னைக் சட்டுப்படுத்தாது. அரசை நீயாகக் கைப்பற்றிக் கொண்டு என்னைச் சிறையில் தள்ளிவிடு செயலற்ற நான் சத்தியம் தவறின வனுக மாட்டேன. நீ அரசு புரியலாம். குடி ஜனங்கள் சந்தோஷமாக இருப்பார்கள். எனக்கும் பாப தோஷம் வராது" — இதுதான் தசரதன் யோசனை.

நல்ல தந்திரமான யோசனை; நுட்பமான யுக்தி. தர்மததிறகு தாமம், சத்தியத்திற்கும் சத்தியம், பட்டத்திற்குப் பட்டம்; பிதுர்வாககிய பரிபானத்திற்கு பிதுர் வாககிய பரிபாலனம் செய்து கீர்த்தியோ, லாபமோ, புண்ணியமோ அடையவேண்டும் என்று ராமன் விரும்பியிருந்தால் தசரதனின் விருப்பப்படி அவனை சிறையிலடைத்துவிட்டு, அரசை ஏற்றுக்கொண்டு, குடிகளை சந்தோஷித்திருககலாம்.

ராமன் அவ்வாறு செய்தாஞ? இல்லை.

பிரத்யக்ஷமாக பிதா கொடுத்த ஆணையை ராமன் உல்லங்கனம் செய்தான். என்ருே, எங்கோ, பிதா கொடுத்த வாக்கை நிறைவேற்ற முற்பட்டான்.

சோகத்தில் தோய்ந்து மரணத்தின் வாயில் தத்தளிக்கும் தந்தையின் ஆணையைப் புறக்கணித்தான். வெற்றிக் களிபபில் எக்களித்து, மோகவெறியில் பிதற்றிட்ட வாககை இன்று காக்க இயைந்தான். கண்ணீருடன கதறிய தசரதன் வாக்கு தந்தை வாக்கல்லவா? அதை பரிபாலனம் செயயவேண்டாமா? கைகேயிககுக் கொடுத்த வாககுக்கு

சாட்சி உண்டா? வேகின்ற மூச்சோடு தசரதனிட்ட கட்டளை முக்கியமா? அல்லது, இன்னது என்று அறியாமல் என்றோ கொடுத்ததாகக் கூறப்படும் வரம் முக்கியமா? "அம்மா கிடக்கிறாள் நிர்வாணம்; கும்பகோணத்தில்..." என்ற விபரீதமா? இல்லை, இல்லை.

பழமொழி எல்லாம் புது வழிக்காகாது. எது தர்மம்? எது தர்மமன்று? என்று நிர்ணயிப்பதில் ஸ்வபுத்திக்கு இடம் உண்டு. கல்வி, கேள்வி, நூல்கள் எல்லாம் உதவும். ஆயினும், ஸ்வபுத்தியே பிரதானம்.

தந்தையின் சொல்லில் எதைத் தான் கடைப்பிடிப்பது என்று ராமன் ஸ்வபுத்தியில் நிர்ணயம் செய்தான். தனக்கு ஹிதமானது என்று தந்தை கொடுத்த புத்திமதியை ஒதுக்கினான். தனக்கும் கொடுமை, தந்தைக்கும் கொடுமை என அனைவரும் பயப்பட கைகேயி வரத்தை நிறைவேற்ற முன்வந்தான்.

கல்வி, கேள்வி, ஸதாசாரம் இவைகளில் சிறந்த ராமன் ஸ்வபுத்தியையே துணையாகக்கொண்டு செயலில் இறங்கினான் தநதை வாக்கை ஒரு துறையில் நிறைவேற்றினான்; மற்றொரு துறையில் அவருடைய வாக்கை திரஸ்கரித்தான். இரண்டு துறையிலும் புகழ் எய்தினான். மாந்தர் உள்ளத்தில் அழியா நிலை எய்தினான். அவதாரம் என்ற பெருமையும் அடைந்தான்.

# அடைக்கலம்

சுந்தர ராமசாமி

மணிமேடை ஜங்ஷனில் பாகீரதிப் பாட்டி போய்க் கொண்டிருந்தாள். மணி ஏழு அடிக்க ஆரம்பித்ததும், ஓட ஆரம்பித்துவிட்டாள். பூதாகாரமான சரீரம் குலுங்கக் குலுங்க மண்டை உருள நாலடி பாய்ந்தாள்; இரண்டடி நடந்தாள். 'வாண்டுக் கூலி'யும் பின்தொடர்ந்து ஓடினான். 'சீன்' வேடிக்கையாகத்தான் இருந்தது. பார்த்து ரசிக்கத்தான் மகாஜனங்கள் அதிகமில்லை. மணிமேடை சுற்றுப்புறம் இன்னும் சுறுசுறுப்பு அடைந்தபாடில்லை. கண் விழித்தும், காலை ஆட்டிக்கொண்டு படுக்கையில் சோம்பிக் கிடப்பதுபோலிருந்தது.

பாட்டி ஓடிக்கொண்டிருந்தாள்.

லாலா மிட்டாய்க்கடை ஒட்டுத் திண்ணையில் கால் முட்டுகளைக் கைகளால் பிணைத்து, இடுப்பு வேஷ்டியைக் கழுத்துவரை சுற்றிக்கொண்டிருந்த கூலி, புகையேறிய பல்லைக் காட்டி இளித்தான். தெருக் கூட்டிக்கொண்டிருந்த தோட்டிச்சியும் ரசித்து மகிழ்ந்தாள். ஓரிருவர் இதைக் கவனிக்காமலே சந்தைக்குப் போய்க்கொண்டிருந்தனர்.

திருப்பத்தில் குதிரைவண்டி வரிசை. கோச்சுப் பெட்டியில் தலைவைத்து வளையமாய்ப் படுத்துக்கொண்டிருந்த வண்டிக்காரன் தலையைத் தூக்கி, 'அம்மா, துரிசமாபோங்க, வண்டி நகர்ந்தாச்சு' என்று விஷமத்தனமாக முடுக்கியும் வைத்தான்.

குரல் எங்கிருந்து வந்தது என்பதைக்கூடப் பாட்டி கவனிக்கவில்லை. அசரீரிக்குப் பணிந்தமாதிரி மேலும் வேகமாக ஓட முயன்றாள். பழைய வேகம்தான். தலையும், ஊன்றுகோலின் சதை ஆட்டமும் தான் 'ஓஹோ'வென்றிருந்தது.

திருப்பம் தாண்டியதும் தொலைவில் பஸ் நிற்பது தெரிந்தது. தன்னுணர்வின்றி வேகம் குறைந்து, நடையிலும் அசட்டு நடைபோட ஆரம்பித்துவிட்டாள் பாட்டி. அவளால் நடக்க முடியவில்லை. மேலும் கீழும் இரைத்தது வேர்த்துக் கொட்டிற்று. வாயை மூட முடியவில்லை.

நின்றுகொண்டிருந்த பஸ் எங்கு செல்கிறதோ? யாருக்குத் தெரியும்? ஒரு பஸ் நிற்பதைப் பார்த்தமட்டும் திருப்தி, அவ்வளவுதான்.

திருக்கணங்குடி செல்ல ஏழு மணிக்கு வண்டி உண்டென்று எண்ணி, பாட்டி புறப்பட்டு வநதுவிடவில்லை. பஸ் எப்பொழுது போகிறது எனபதும் அவளுககுத் தெரியாது. அவள் பாட்டுக்கு வந்துகொண்டிருந்தாள். மணி அடிக்க ஆரம்பித்ததும் அவசரம் குடிபுகுந்து விரட்ட ஆரம்பிததுவிட்டது. ஏன் ஓடுகிறோம் என்பது அவளுக்கே தெரியாது.

நின்றுகொண்டிருநத வண்டி நகர ஆரம்பித்தது. மீண்டும் ஓட எத்தனம் கூட்டினாள் பாட்டி.

" இந்தா அம்மா, எங்கே போகணும?"

" திருககணங்குடி போணம்டா, அப்பா."

" அந்த வண்டி திர்நேலி போகுது. வீணா ஏன் பாயறீங்க."

நின்றாள் பாட்டி.

கூலியுடன் கணக்குத் தீர்ப்பதற்குமுன் ஒரு ஆவர்த்தனம் சண்டை. டிரைவரும், கண்டக்டரும், ஸ்டாண்டு ஏஜெண்டும் சமரசம் செய்து வைத்தார்கள். போனால் போகட்டும் என்று, கூட அரை அணாவை வீசினாள் பாட்டி.

நடுரோட்டில் நின்று தாவா செய்துகொண்டிருப்பதற்கு வெட்கமாகத்தான் இருந்தது அவளுக்கு.

"திருக்கணங்குடிக்கு வண்டி எப்போடா, அப்பா ?" என்று கேட்டாள் பாட்டி.

"எட்டேகாலுக்குத்தான்" என்றார் டிரைவர்.

பாட்டி ஒரு டிக்கட் வாங்கிக்கொண்டாள்.

"ஏன் நட்ட நடுவிலே நின்றுக்கிட்டிருக்கீங்க ? அன்று அந்த ஓட்டுத் திண்ணையிலெ இருங்க."

பாட்டி சாமான்களை ஒவ்வொன்றாக ஓட்டுத் திண்ணைக்கு நகர்த்தினாள்.

செண்பகராமன்புதூர் கீரைத்தண்டு, ஒரு கூடை நிறைய. அதை ஈரத்துணி போட்டு மூடிக் கட்டியிருந்தாள். ஒரு பெரிய டப்பா; அதற்கு மூடியும் பூட்டுமிருந்தன. துணிமூட்டை ; புடவைகள் இரணடு இணைசேர்ந்த பாம்புகள்மாதிரி முறுக்கிக்கொண்டு ஒன்றை ஒன்று பார்த்தபடி நின்றன. மாஜி வெள்ளை நிறம். ஒரு அரிவாள் மணை; புத்தம் புதிசு. மணைக்காம்பு மஞ்சள் மசேலென்றிருந்தது. அரிவாளைப் பழந்துணியால் சுற்றியிருப்பது, சக பிரயாணிகளுக்குத் திருப்தி தரும் விஷயம்.

நாலு சாமான்களும் ஓட்டுத் திண்ணையில் ஏறிக்கொண்டால், பாட்டி நிற்கத்தான் வேண்டும். டப்பாவையும் கீரைக் கூடையையும் காலடியில் சேர்த்து வைத்துக்கொண்டாள். அரிவாள் மணையையும் துணி மூட்டையையும் இருபக்கம் வைத்து இரு கைகளாலும் செல்லமாக அணைத்தபடி திண்ணையில் அமர்ந்தாள்.

ஜங்ஷனில் நிற்பவர்களின் முதல் பார்வையில் தட்டுப்படும்படி வீற்றிருந்தாள் பாட்டி.

நுங்குமாதிரி உருண்டை முகம். வளைந்த மேட்டு நெற்றி கண்களைப் பாதாளத்தில் தள்ளிவிட்டது. குடமிளகாய் மூக்கு. மூக்கிற்கு இருபுறமும் ஆழமான கோடுகள்,

தோன்றும்படி உப்பிய கன்னங்கள். காதோரங்களில் பூனைமயிர். கறுத்த உதடுகள். வெள்ளி விளிம்பு கட்டிய சிறிய மூக்குக் கண்ணாடி. காதில் மாட்டக் கம்பிகள் இல்லாததால், நூலைக் கட்டித் தலைவழியே சுற்றிக்கொண்டிருந்தாள். குளுகுளுவென்று ஊளைச்சதை, கைகளிலும், வயிற்றிலும் மடிப்பு மடிப்பாய்த் தொங்கிற்று.

இளம் வெயில் நிழலை விரட்டிக்கொண்டிருந்தது.

ஒவ்வொரு பஸ் புறப்படுகிறபொழுதும் வயிற்றைக் கலக்கிற்று; பாட்டிக்குத் தன்னை ஏற்றிக்கொள்ளாமலே பஸ் போய்விடுமென்ற பீதி. 'கிழடு கிடக்கட்டும்' என்று விட்டுகொண்டு போயவிடுவார்களாம். ஒருவருக்குத் தெரியாமல், ஒருவரை மாறறி ஒருவரை விசாரிததுக் கொண்டிருந்தாள் பாட்டி.

சட்டென்று பககவாட்டில் திரும்பியபொழுதுதான் கவனிததாள். ஒரு துரைச்சானி 'டிப்டாப்'பாக நின்று கொணடிருந்தாள். அட!

பாட்டி பார்த்துக்கொண்டிருக்கும்பொழுதே துரைச்சானி மூக்குக் கண்ணாடியைச் சட்டென்று எடுத்து, கண்களுக்கு நேராக வைத்து, வானவெளியைப் பார்த்தாள். கணப்பொழுதில் கண்ணாடிகளின் முன்னும் பின்னும நக்கினாள். கைக்குட்டையை உருவித் துடைக்க ஆரம்பிததாள்.

பாட்டிக்கு வயிற்றைக் குமட்டிக்கொண்டு வந்துவிட்டது. அட, ஜென்மமே! அருவருப்பில் முகம் நெளிந்து கோணிற்று. சீ, தரித்திரம்!

திரும்பவும் துரைச்சானி முகத்தை ஏறிட்டுப் பார்த்தாள். அழகான முகம்; சிவப்பு என்றால் வெளுப்பல்ல, சிவப்பு. சுருள் சுருளாக மயிர். அடர்த்தியும் அப்படி; விரலை விட முடியாது. தலைமயிரின் வனப்பைக் கண்டதும் ஆசையாக இருந்தது பாட்டிக்கு. தாழம்பூ வைத்துப் பின்னிவிட வேண்டும் போலிருந்தது. கழுதை! குதிரை வால்மாதிரி வெட்டி விட்டுக்கொண்டிருக்கிறதே. எப்படித்தான் மனசு வருமோ?

உம், காலம் தலைகீழாய்ப் போய்விட்டது.

காலையில் ஆறு மணிக்கு மஞ்சள் பூசிக் குளித்துவிட்டு, கொண்டையில் ஈரத்துண்டு சுற்றியபடி எச்சுமி துளசி மாடத்தில் மண்டியிட்டு உட்கார்ந்திருப்பதைப் பார்த்தால், கை தானாகக் குவிந்துவிடுமே. வைத்த கண்ணை வாங்க முடியாது. பெற்ற குழந்தையைத் தாயே திருஷ்டி போடுவதா, என்று மனதைக கலைத்துக்கொள்வாள் பாட்டி.

வருந்தி வருந்தி அழைத்தாள். கடிதத்திற்குமேல் கடிதம் எழுதினாள். சரி, போய்ப் பார்த்துவிட்டுத்தான் வரலாமே என்று, துணை வாய்த்த சமயம் டில்லிக்குக் கிளம்பினாள் பாட்டி. போதும், பார்த்த அழகு.

ஸடேஷனுககு மாப்பிள்ளையும் குழந்தைகளும் வந்திருந்தார்கள். மாப்பிள்ளை, உதட்டில சிகரெட் தொங்க, இடது கையைத்தூக்கி வரவேற்றார் மாமியாரை பதினாலு வயதான சச்சு, ஒரு கவுனைப் போட்டுக்கொண்டு, கழுத்தில் மப்ளரைச் சுற்றிக்கொண்டு, பாட்டியைப் பார்த்துப் பல்லைக் காட்டிற்று.

ஆசையோடுதான் டில்லிக்குச் சென்றாள் பாட்டி. மாப்பிள்ளை, ரயில்வே ஸ்டேஷன 'கான்டீன்' மானேஜர். காசிக்கு வேறு அழைத்துச் செல்வதாகச் சொல்லியிருந்தான். சல்லிக் காசு செலவில்லை. தரிசனத்திற்குக் கொடுத்து வைத்திருக்க வேண்டுமே. லேசாகக் கிட்டக் கூடியதா?

இருந்தும், இரண்டே வாரத்தில் புறப்பட்டுவிட்டாள் பாட்டி.

"காசிக்கும் போக வேண்டாம், கருமமும் தீர வேண்டாம். நல்ல துணையாய்ப் பார்த்து என்னை ஊருக்கு அனுப்பிச்சுடு."

"என்ன, டில்லி 'ஸிட்டி லைஃப்' பிடிக்கல்லையோ?" என்று கேட்டான் மாப்பிள்ளை.

பிடிக்கவில்லேதான். பிடிக்கவில்லே என்று முகத்தில் அறைந்தாற்போல் சொல்ல முடியுமோ? டில்லி பிடிக்க வில்லேயோ? கேள்வியைப் பார்! டில்லி என்ன செய்யும்? பட்டை பட்டையாய் விபூதியிட்டுக்கொண்டு பஞ்ச கச்சமும் கட்டிக்கொண்டு நிற்குமா? மனுஷாள் விதரணே கெட்டுப் போய்விட்டால் ஊர் என்ன செய்யும்?

யாரைக் குறைசொல்ல? பெற்றதில் குற்றமில்லே, வளர்த்ததில் குற்றமில்லே; ஆசார சீலங்கள் சொல்லித் தராத குற்றமுமில்லே. அதிகாலேயில் எழுந்திருந்து அகத்துக் காரியம் பூராவும் ஓடியாடிப் பார்த்துக் கொண்டிருந்தவள் தானே? இப்பொழுது பெண்களும், புருஷாளும் ஏகமாகக் கூடத்தில் படுத்துக்கொண்டு 'ஆ, ஊ' என்று கொட்டாவி விட்டுப் புரண்டு புரண்டு எழுந்திருப்பதற்கு மணி எட்டாகிறதே! படுக்கை சுருட்டி வைக்கிற வழக்கமே மறந்து போய்விட்டது. எழுந்ததும, சின்னதிலிருந்து பெரிசுவரை நேராக அடுக்களேக்கு வந்துதான் கணேணத் திறக்கிருர்கள். சூடா காப்பி, ஸ்ட்ராங் காப்பி சூடா காப்பி, ஸ்ட்ராங் காப்பி...பல்லும் தேய்க்க வேண்டாம், கில்லும் தேய்க்க வேண்டாம். பைத்தியமா அவாகளுக்கு, பல் தேய்க்க?

"டேய், உன்னிடம் எத்தனே தடவை சொல்லியாச்சு, நகத்தைக் கடிக்காதேன்னு?"

"ஷட் அப்!"

உழக்கு மாதிரி ஒரு பிள்ளே. பெயர் ரோமியோ! அது பேசுகிற பேச்சுதான் இது. ஒன்று சொன்னல் உடனே 'ஷட் அப்!' ஷட் அப்போ, கிட் அப்போ!

"அடியே லில்லி, இந்தத் தாவணியைப் போட்டுக் கொண்டு வெளியே போடி. அடியே, உனக்கு இந்த ஆவணிக்குப் பதினுலு வயசு ஓடியாச்சு."

"போ பாட்டி, உனக்கு ஒண்ணும் தெரியாது. இங்கே எல்லாரும் சிரிப்பா. அம்மாமி வந்துட்டான்னு, கேலி பண்ணுவா."

ஆமாம், சிரிக்கமாட்டார்களா பின்னே ? மிராட்டிச்சி மாதிரி திரிந்தால் தான் ஜாதியில் சேர்த்தி. சமத்துக் குடம் !

குழந்தைகளைப் போய்ச் சொல்வானேன் ! தாய் எட்டடி பாய்ந்தால், குட்டி பதினாறு அடி பாயும்.

எச்சுமி போட்டுக்கொள்கிற ஐம்பரும் புடவையும் பார்க்கச் சகிக்காது. சீ, சீ !

ஒருநாள் விடியக கருக்கில் வாசல் திண்ணையில் உட்கார்ந்துகொண்டிருந்தாள் பாட்டி.

சாமான்காரன் ஒருவன திண்ணையில் கூடையை இறக்கினான்.

"என்னதுடாப்பா?"

விளங்காத பாஷையில் ஏதோ சொன்னான் அவன். பாட்டி கையை விரித்தாள். கூடைக்காரன துணியை விலக்கிக் காட்டினான. கோழி முட்டை !

அப்படியே கண்ணைப் பொத்திக்கொண்டு உள்ளே வந்துவிட்டாள் பாட்டி. பின்னால் ஒருநாள பெண் ஜாடை மாடையாகச் சொன்னாள். அவருக்கு அதுதான் காலை ஆகாரமாம; அது இல்லாமல் முடியாதாம்; குளிருக்கு அதுதான் ஏற்றதாம்.

ஆமாம் அம்பாசமுத்திரம் விஸ்வநாத கனபாடிகளின் சீமந்த புத்திரனுக்கு கோழிமுட்டை இல்லாமல் தீராது தான். ஐயோ உலகமே !

ஒன்றும் சொல்லவேண்டாம். நாமே நம்முடைய குழந்தைகளை இளப்பமாக நினைகக்கூடாது. குறைவாக பேசக்கூடாது. இருந்தாலும், இப்படிக் கண்டதுமில்லை, கேட்டதுமில்லை.

புகை நாற்றம் மூக்கைத் துளைத்தது திரும்பிப் பார்த்தாள். துரைச்சாணி புகை உறிஞ்சி விட்டுககொண்டிருந்தாள். இது வேறு இந்த லட்சணத்திற்கு ?

இருந்தாலும், இத்தனை ஆண் பிள்ளைகளுக்கு மத்தியில், நட்டநடுவில் நின்றுகொண்டு, பீடிகுடிக்கக் குறைவாக இராதோ, ஒரு பெண்ணுக்கு? எந்தத் தேசத்து வழக்கமோ?

சிறிது நேரத்திற்குப் பின்தான் பாட்டி துரைச்சானி பக்கம் திரும்பினாள். பக்கவாட்டில் எதிர்ப்புறம் நோக்கி நின்றுகொண்டிருந்தவள் இப்போது பாட்டியை நோக்கி நின்றுகொண்டிருந்தாள். அப்பொழுதுதான் பாட்டி கவனித்தாள். துரைச்சானிக்கு நிறைமாதம். ஐயோ, பாவம்!

எதற்கு இந்தச் சமயம் பார்த்துப் பயணம் போகிறாள்? என்ன அவசரமோ? அவசரமாகத்தான் இருக்கட்டுமே! இந்தமாதிரி வேளையில் புறப்படுவாளோ ஒருத்தி? சிறிசு. இதுக்குத் தெரியாது. இதுபாட்டுக்குப் புறப்பட்டு வந்திருக்கிறது. பெரியவர்கள் இருந்தால், படிதாண்ட விடமாட்டார்கள். அவளும் என்னைப்போல ஒரு அனாதை போலிருக்கிறது.

கிளம்பினாளே, கூட வேண்டிய மனுஷாளை அழைத்துக்கொள்ளக் கூடாதோ? கட்டினவன் ஒருவன் இருக்கத்தானே இருக்கணும்? இல்லாவிட்டாலும் குழந்தைகள் இராதா? அக்கா, தங்கை, நாத்தனார், மாமியார் என்று யாராவது இருக்கத்தானே இருப்பார்கள்?

ஆயிரம் இருக்கட்டும், வேளைகெட்ட வேளையில் புறப்பட்டு வரக்கூடாது. ஒருநாள் மாதிரி ஒருநாள் இராது! உசிர் உலகத்தைப் பார்க்கணும் என்று புறப்பட்டுவிட்டால், யாரால் நிறுத்தி வைக்க முடியும்? பஸ்ஸில் வைத்துத் தலையைக்காலை வலித்தால், சிரிப்பாய்ச் சிரித்துப் போகுமே. அடி, அசடே!

உம், அவர்களுக்குத் தெரியாததா! நாலு எழுத்து வாசிக்கிற ஜாதிதானே! நமக்குத்தான் மனசு அடித்துக்கொள்கிறது.

மீண்டும் துரைச்சானியைக் கூர்ந்து கவனித்தாள் பாட்டி.

அவள் நின்றுகொண்டிருந்த இடத்தில் வெயிலேறி விட்டது. வேர்வை கழுத்தில வழிந்தது. முகம் மேலும் குங்குமம்போல் சிவந்தது. அடிக்கடி கைக்குட்டையால் முகத்தை ஒத்திய வண்ணமிருந்தாள்.

கால் மாற்றி நின்றுள் துரைச்சானி. முழங்காலில் பச்சை நரம்புகள் புடைத்துக்கொண்டிருப்பதைப் பார்த்தாள் பாட்டி.

பாட்டி தன்னையறியாமல் சூள் கொட்டினுள்.

கண்கொட்டாமல் துரைச்சானி முகத்தைப் பார்த்தாள் பாட்டி. ஒற்றை நாடி சரீரம். உடம்பில் ரத்தம் என்பதே இல்லை. இந்த மாதிரி, 'கேஸு' களுக்குக் கொஞ்சம் சிரமப்படத்தான் செய்யும். சண்டி வலி ஜாதி இது. வயிறு கீழிறங்கித் தள்ளிவிட்டது கழுத்து நரம்புகள எழும்பி நின்றன. குரலவளைக்குக்கீழ் பள்ளம்.

எப்படியும் இருந்துவிட்டுப் போகட்டும். நல்லபடியா ஒரு தோஷமும் இல்லாமல் இரண்டு பாத்திரம் ஆக்கிவிடு, பகவானே! தாயையும் குழந்தையையும் பிரிச்சு விட்டு விடு — அது போதும். அப்புறம் மனுஷா பாடு.

என்ன நினைத்துக்கொண்டாளோ, பாட்டி. ஒட்டுத் திண்ணையிலிருந்து சறுக்கிக் கீழே இறங்கினுள். அரிவாள் மணையையும், துணி மூட்டையையும தூக்கிக் கீழே வைத்தாள,

"அடியே!" என்று கூப்பிட்டாள், துரைச்சானியை.

துரைச்சானி, வேறு யாரையோ கூப்பிடுகிறுள் என்ற பாவனையில் பாட்டியைப் பார்த்தாள்.

"அடியே, உன்னைத்தாண்டி! நானும் ஒரு நாழியாப் பார்த்துண்டிருக்கேன். நட்டுவச்ச மரம் மாதிரி நிக்கறியே! ஒரு ஜீவன் வயத்திலே தொங்கறது என்கிற நெனைப்பில்லையோ? இதோப் பாரு! சமத்தா, இப்படி உட்காரு" என்று திண்ணையைச் சுட்டிக் காட்டினுள்.

பாட்டி திண்ணையில் ஒட்டிக் கொண்டிருந்தாள். அவளை இடித்தபடி உட்கார்ந்தாள் துரைச்சானி.

தி. சோ. வேணுகோபாலன்

# "என்ன பொருள் ?

துடித்து நெளிந்து வெடித்தனை !
வயிற்றைச் சுருட்டி
மடித்து
அலையாக்கிக்
குமுறியதேன் ?

எந்த மௌனச் சுமை
உந்தன்
இதயத்தில் பிறந்து பின்
வளர்ந்து நசுக்கியது ?
உஷ்ணப பெருமூச்சு

குரல்வளை தாண்டிக் குதித்துக்
கொக்கரிப்பதும் ஏன ?
நின் கடைவாய் வழி
வெற்றிலைச் சாறு
வழிந்து

பசுங்கதிர் பொசுககிக்
கருந்தடம் போட்டதேன் ?

## என்ன பொருள் ?

பல்லற்ற கிழவியின் வசையும்
பச்சிளம் சிருரின் கேவலும்
நின் பேச்சானதேன் ?

கோபுரம் ஒன் றும்
மாளிகை சிலவும்
சரிந்து சிதைந்து மரண மடைந்தன:
நீயும்
காலத்தின் போக்கை உணர்ந்தனே என் று

கொண்டாலும்,
குடிசையும தீய்ந்து புழுதியாய மாறிட
என்ன காரணம்
நீ காட்டுவாய் ?

என்ன பொருள்,
நின்
பேய்க் கூத்துக்கே ? !

மா. கிருஷ்ணன்

# காட்டானை

தமிழில் பழைய சங்ககால நூல்கள் சுமார் 19 நூற்றாண்டுகள்முன் பாடப்பட்டவை என்று பலர் கருதுகிறார்கள்; சிலர், இவை இதற்கும் மிகவும் முன்பானவை என்று நினைக்கிறார்கள். இது எப்படி இருந்தாலும் சரி, இரண்டாயிர வருஷங்களோ, மூவாயிரந்தானோ, அந்தக் காலத்துக்கு முன்பாகவே, காட்டானைகளைப் பிடித்துப் பழக்கி, போருக்கும் பெருமைச் சிறப்புக்கும் அவைகளை உபயோகிப்பது ஒரு கலையாக வழங்கிவந்தது. பரணர், நக்கீரர் முதலிய புலவர்களின் பாடல்களிலிருந்து இதை அறியலாம்.

காட்டானைகளைப் பிடித்து, மனிதர் சேவகத்திற்குப் பழக்கும் கலை தமிழ்நாட்டுக்கு மட்டும் உரியதில்லை. வடக்கிலும் பல இடங்களில் இது வழங்கிவந்தது. இது நூலாக விளக்கி எழுதப்பட்ட சாஸ்திரமில்லை; யானைப்பாகன்கள் போன்ற எழுத்தறியாத மனிதரிடம் பரம்பரையாகத் தொடர்ந்துவந்த தொழில்கலை இன்றும், இந்தத் தொழிலைக் கொண்டு பிழைப்பவர் சிலர் இருக்கிறார்கள்; ஆனால் சிலரே இருக்கிறார்கள். ஏனென்றால், முன்போல பழக்கி வளர்த்துவரும் யானைகள் ஆயிரக் கணக்கில் நம் நாட்டில் இப்போதில்லை.

ஜனத் தொகை அளவுக்கு மிஞ்சிப் பெருகி, காடுகள் ஒன்று பாதியாகக் குன்றி, விலைவாசி ஒன்று பத்தாகச்

செழித்து, மிருகங்களுக்குப் பதிலாக யந்திரங்கள் மனிதருக்குதவும் இந்தக் காலத்தில், யானைக்குத் தீவனம் போட்டு வளர்ப்பது மேன்மேலும் முடியாத காரியமாகி விட்டதில் ஆச்சரியம் எதுவுமில்லை. ஆனால், நமது பழங்காலப் பெருமையை எடுத்துச்சொல்ல இந்தப் பீடிகையை நான் எழுதவில்லை; வேறு காரணமாகவே எழுதுகிறேன். இப்போதும், காட்டானைகளை நேரில் தெரிந்தவர் நமக்குள் இருக்கிறார்கள். அநேகமாக, இவர்கள் யானைகளைப் பிடித்துப் பழக்குவதில் பரம்பரையாகத் தேர்ச்சி பெற்ற குருபர், மலைமலசர் போன்ற ஜாதிகளைச் சேர்ந்தவர்கள்; இவர்கள் யாரும் யானைகளைப் பற்றிப் புத்தகங்கள் எழுதவில்லை வேட்டைக்காரர் சிலர் (முக்கியமாக, இவாகள் வெள்ளைக்காரர்கள்) காட்டானைகளைப்பற்றி பல விவரங்களைத் தங்கள் ஆங்கிலப் புத்தகங்களில் குறித்திருக்கிறார்கள்.

தவிரவும், நமது பழங்காலப் பண்டிதர்கள் சிலரும், யானைகளைப் பற்றிய நூல்கள் எழுதியிருக்கிறார்கள். தஞ்சாவூர் 'ஸரஸ்வதி மஹாலில்' உள்ள 'கஜ சாஸ்திரம்' என்ற பெயர் பெற்ற கையெழுத்து நூல் இத்தகையது இதில் பல யானைப் படங்கள் இருககின்றன; யானைகளைக் குறித்து உண்மையான செய்திகளும் பல உள்ளன; கற்பனை விவரங்களும், கட்டுக் கதைகளும், கற்பனைப் படங்களும்கூட அநேகம் உள்ளன. இதுபோன்ற நூலகளைப் படித்து நாம் காட்டானைகளை நம்பத்தக்க முறையில் தெரிந்துகொள்ள முடியாது. இதைவிட, குருபர் முதலிய காட்டுவாசிகளைக் கேட்டுத் தெரிந்துகொள்வது சிறந்த முறை.

ஆனால், இப்பேர்ப்பட்டவர்களிடம் கேள்விமுறையாக எதையும தெரிநது கொள்வதில், இரண்டு விஷயங்களில் நாம் சற்று ஜாக்கிரதையாக இருக்கவேண்டும். முதலாவது இவர்களுள், தெரிந்தவன் அதிகமாகப் பேசமாட்டான்; ஏதேனும் சொன்னாலும், அதைக் குறிப்பாக, ஜாடையாகத்தான் சொலவான். தெரியாதவன், தெரிந்தாற் போல மிகத் தெளிவாக விளக்கி எடுத்துரைப்பான்! இது காட்டுவாசிகளுக்கு மட்டுமுள்ள இயல்பில்லை; நன்றாகப்

படித்த நமக்குள்ளும் இதை சகஜமாகக் காணலாம். இரண்டாவது, நேரில் காட்டானைகளை நன்ருகத் தெரிந்த காட்டுவாசிகளும், பல ஆதாரமற்ற கொள்கைகளையும் தமது சொந்த அனுபவத்துடன் கலந்து நம்புகிருர்கள்.

வேட்டைக்காரர் எழுதியதில் பல உண்மையான குறிப்புகள் உண்டு—அப்படி இல்லாதவையும் பலவுண்டு. நமக்குள் பழமொழியாகவும் பேச்சுவார்த்தையாகவும் யானைகளைப பற்றி வழங்கும் வசனங்களும் இது போன்றவையே.

நான் படித்ததையோ கேட்டதையோ மட்டும் கொணடு இதை எழுதவில்லை; சொந்த அனுபவத்தையே முக்கிய ஆதாரமாகக் கொண்டு எழுதுகிறேன். ஆனுல், யானைகளைப பற்றி புதிதாக எதையும் இதில் எடுத்துச் சொல்லவில்லை.

பெரும் புல் வகைகளும், மூங்கில் வகைகளும், செடிகளும் மரங்களும் அடர்ந்த மலைக்காடுகளில்தான் காட்டானைகள் சாதாரணமாக வாழும். தினமும் குடிக்கவும் குளிக்கவும், இவைகளுக்குத் தணணீர் வேண்டும். போதுமான தண்ணீர் இல்லாத இடங்களில், காடு இருந்தாலும் யானைகள் இருப்பதில்லை

தினத்துககு ஒரு காட்டானை சுமார் 600 ராத்தல் எடை இலையுணவு உட்கொள்ளும என்று, இவ்விஷயத்தை ஆராயநத இயற்கை நிபுணாகள கூறியிருககிருர்கள். மேலும, தின்பதற்கு மேலான அளவில அது புல்லையும் புதர்களையுப அழிககும். யானைகள் மேய்ந்த காட்டில், எங்கும புல்லும் செடிகளும் மிதிபட்டுச் சாய்ந்திருக்கும்; அங்கங்கே பெருமூங்கில புதர்களும் மரக் கிளைகளும்கூட நிலைசாய்ந்து கிடககும்.

தனியாகச் சஞ்சரிக்கும் ஆண் யானைகளும் உண்டென்ருலும், சாதாரணமாக யானைகள் ஒனறுகூடியே வாழும். ஒரு கூட்டததில ஐந்து அலலது ஆறிலிருநது முப்பது யானைகளவரை இருககலாம். இவைகளுள், வயதுவந்த ஆண் யானை ஒன்றுதான் இருக்கும்; மற்றவை பெண்களும், சிறு

வயதான ஆண்களும், கன்றுகளும். சில வேளைகளில் இரண்டு மூன்று பெரிய யானைக் கூட்டங்கள் ஒன்று சேர்ந்து சிலநாள் சஞ்சரிக்கலாம். ஒரு நாளில் ஓர் யானை 600 ராத்தல் இலை மர உணவு தின்று, அதற்குச் சமமான புல்லையும் செடிகளையும் மிதித்து அழிக்கும் என்றால், ஒரு பெருந்திரள் ஒரே நாளில் காட்டில் எவ்வளவு சேதம் விளைவிக்கும் என்பதை நீங்களே கணக்கிட்டுத் தெரிந்து கொள்ளலாம். ஆனாலும் யானைகள் மேய்வதால் காடுகள் அழிவதில்லை. நம நாட்டில் எத்தனையோ ஆயிர வருஷங்களாக யானைகள் பலவிடங்களில் வசித்திருக்கின்றன — அவைகள் அங்கிருப்பதால் எங்கும் காடு குன்றிவிடவில்லை.

எதிர்பார்க்கக்கூடிய இந்த சேதம் ஏன் விளைவதில்லை என்பதை விளக்க யானைகளின் இருப்பையும் போக்கையும் கவனிக்கவேண்டும். யானைக் கூட்டங்கள் ஓரிடத்திலேயே வெகுகாலம் தங்குவதில்லை; தங்களுக்கு வேண்டிய உணவும் வசதிகளும் அங்கே இருந்தாலும், சுற்றித்திரிந்து மேயவதே அவைகளின் சுபாவம். மேலும், தாங்கள் மிகவும் விரும்பும் தாவர வகைகள் கொண்ட இடங்களிலும கூட்டத்து யானைகள் அங்குமிங்கும் அலைந்து காட்டையே பொட்டலாக்கி விடுவதில்லை. முன்செல்லும் யானையின் பாதையில் பின்செல்லும் யானைகள் போவதால், புல் செடி வகைகளுக்கு நாம் எதிர்பார்க்கக்கூடிய சேதம் விளைவதில்லை. தவிரவும், யானைகள் மிதித்தும் தின்றும் அழித்த புல், மூங்கில், தாழை முதலிய தாவரங்கள் பல விரைவில் விளைந்து அழியக் கூடியவை. இவற்றுள் பல, வருஷா வருஷம் புத்துயிர் பெற்றுச் செழிக்கும்; குலைந்த பூண்டுகளின் மேல் பாகம் அழிந்தாலும் மறுபடியும் மழைகாலத்தில் அவை துளிர்க்கும். யானைத்திரள்களோ, பெரிய காட்டுமாடு மந்தைகளோ, வேறெந்த மிருகங்களோ மேய்வதாலும் இருப்பதாலும், எங்கும் எந்தக் காடும் அழியவில்லை. காடுகள் அழிவதற்கு முககிய காரணம் மனிதரே.

யானையின் வாழ்க்கையில், கண்விழித்திருக்கும் வேளையில பாதிககுமேல் மேய்ச்சலில் கழிந்துவிடுகிறது. அவை,

ஓரிடத்தை விட்டுத் தூரத்திலுள்ள மற்றோரிடத்திற்கு விரைந்து நடந்து செல்லும்போதும், வழியில் கிடைத்த தைத் தின்று கொண்டேதான் போகும். காதலில் ஈடு பட்ட யானைகளும் வெகு நேரம் உண்ணுதிருப்பதில்லை. ஓரிடத்தின் உரிமைக்காகவோ பெண்யானைகளின் உரிமைக் காகவோ, சில வேளைகளில் இரண்டு ஆண்யானைகள் ஒன்று மடியுமட்டும் நெடுநாள் போரிடலாம். அந்த ஆத்திரத்தில் கூட அவ்வப்போது விலகி, சிறிது நேரம் மேய்ந்து, தண்ணீர் குடித்து, பிறகு மறுபடியும் சண்டையிடும்.

மிருகங்களுள், தாவர உணவைத் தின்பவை வேட்டை யாடி இறைச்சி உண்பவைகளைவிட அதிக நேரம் உணவு தேடுவதில் கழிக்கும். இவற்றுள் பல, அசைபோடும் மிரு கங்கள். மான்வகை, ஆடுமாடு வகைகள் முதலிய அசை போடும் பிராணிகள், அநேகமாக மேய்ந்து வயிற்றை நிரப்பிக்கொண்டு, பிறகு காவலான இடந்தேடிப் படுத்து அசைபோடும். முயல் வகைகளும், இப்படி அசை போடா விட்டாலும், அவசரத்தில் மேய்ந்து பின் உண்டதை மறு படியும் உட்கொண்டு ஜரிக்க வேறு ஒரு வழியில் உடல மைப்பு வாய்ந்தவை. யானைகள், இதுபோல அவசரமாக மேய்வதில்லை. அவைகளின் பெரும்பசி அடங்க அவ்வப் போது புல்மூட்டின் மேல் பாகத்தையோ, ஒரு இலை கொண்ட கொம்பையோ, செடியையோ தும்பிக்கையால் பறித்து, முட்டிமேல் தட்டித் துடைத்து, வாயினுட்படுத்தி மென்று தின்னும்.

யானைகள் புசிக்கும் செடி கொடி மரங்கள் பலவகைப் பட்டன. சுயேச்சையில் அவை தேடித் தின்னும் சில தாவர வகைகளை மட்டும் இங்கே குறிப்பிடுகிறேன். பலவகை நெடும் புற்கள்தான் யானைகளின் முக்கிய உணவு என்று சொல்லலாம். ஆனால், மலைச் சாரல்களையும், காட்டிடை யுள்ள சதுப்பு நிலங்களையும் போர்த்திருக்கும் இந்தப் புல் வகைகள் சற்று முற்றி உலர்ந்தபின் யானைகள் அவை களைத் தின்பதில்லை—மிகவும் இளமையாகத் தரையினின் றும் முளையாய்க் கிளம்பும் போதும் தின்பதில்லை. யானை

புல் மேய்வது மிகவும் கண்ணுக்கினிய காட்சியாகும். புல் மூட்டை முறித்து, கட்டாகத் தும்பிக்கை நுனியில் பிடித்து, சிறிது வளைத்து வைத்துக் கொண்ட தனது முன் கால் முட்டிமீது தட்டித் துடைத்து, பின் வாயினுள் கட்டைக் குறுக்காக வைக்கும். வேரும் உலர்ந்த தண்டுமாகக் கட்டின் அடிப்பாகம் வாயிலிருந்து ஒரு பக்கமாகவும், நுனிப்பாகம் மற்றொரு பக்கமாகவும் நீட்டிக் கொண்டிருக்கும். பிறகு, அடிப்பாகத்தைக் கடித்து நறுக்கிவிடும். இப்படி நறுக்கப்பட்ட புல்லடிக் கட்டுகள் யானைகள் மேய்ந்த இடங்களில் தரையில் விழுந்து கிடக்கும். புல்லின் அடித்தண்டுகள் உலராதிருந்தால் வேர்களை மட்டுந்தான் நறுக்கித் தள்ளும்.

புல் வர்க்கத்தை சேர்ந்த கரும்பு, கம்பு, வரகு, தினை முதலியவை யானைகளுக்கு மிகவும் பிடித்த உணவு என்பது எல்லோருக்கும் தெரிந்ததே. மூங்கில் வகைகளும் இந்தப் பெரும் வர்க்கத்தைச் சேர்ந்தனவே. மூங்கிலின் இளம் தழைகளை மட்டுமில்லை, முற்றின குழலான தண்டுகளையும் யானைகள் புசிக்கும். மூங்கில் புதரை வீழ்த்தி, அங்குமிங்கும் மேய்ந்து, பாதிக்குமேல் பாழாக்கும்.

தாழை, வாழை முதலிய பல மிருதுவான தண்டுள்ள தாவரங்களை யானைகள் விரும்பிப் புசிக்கும். தாழையின் முட்போர்த்த பழத்தையும், பலா, நெல்லி, விளா, ஐமா முதலிய காட்டுக்கனிகளையும் தேடித்தின்னும்; சில பூக்களையும் புசிக்கும். உதாரணமாக, நிலத்தில் பரவிய தொட்டாற் சுருங்கியின் சிவந்த சிறு பூக்கொண்டைகளை நெடுநேரமாக ஒவ்வொன்றாய் மெல்லப் பறித்து காட்டானை தின்பதை நான் நேரில் கவனித்திருக்கிறேன். பலவிதச் செடிகளையும் மரத்தழைகளையும் பேரளவில் யானைகள் புசிக்கும். தவிரவும், சில மரப்பட்டைகளையும் உரித்துத் தின்னும். தாவர சாஸ்திரத்தில் Kydia calycina என்றும், Grewia tiliaefolia என்றும் சொல்லப்படும் காட்டு மரங்களின் பட்டைகளை யானைகள் மிகவும் விரும்பிப்

புசிக்கும். கன்னடத்தில் இம் மரங்களை முறையே 'பெண்டி' என்றும் 'தடசி' அல்லது 'சடசி' என்றும் சொல்கிறார்கள். இவைகளுக்குத் தமிழில் சாதாரணமாக வழங்கும் பெயர்கள் தெரியவில்லை.

இரவிலும் (சாதாரணமாக, நடு ராத்திரியில்), பல வேளை இடை மத்தியானத்திலும் கூட, காட்டானைகள் சிறிது நேரம் தூங்கும். நின்றவாக்கிலேயே மேல் தூக்கமாகவும் தூங்கலாம். நிலத்தில் ஒரு பக்கமாக நெடுகப் படுத்து ஆழ்ந்தும் உறங்கலாம். தூக்கத்தில்கூட அவ்வப் போது காதை அசைக்கும். மிகவும் கோபமாகவுள்ள போதில்தான் யானைகள் தங்கள் முறம்போன்ற பெருஞ் செவிகளை அசையாது கழுத்தோடு ஒட்டி வைத்துக் கொண்டு சும்மாயிருக்கும்.

தூங்கும்போது (அதாவது, நிலத்தில் படுத்துறங்கும் போது) யானைகள் தங்கள் தும்பிக்கையை சுருட்டி வைத்துக் கொள்வது வழக்கம். சில வேளைகளில், தும்பிக்கையின் நுனியை வாயினுள் பத்திரமாக வைத்துக் கொண்டும் உறங்கலாம். எத்தனையோ விதங்களில் கையாகவும், பூமியைத் தட்டி முன்தரை எப்படியுள்ளது என்பதைத் தெரிவிக்கக் கோலாகவும், குடிக்கவும் குளிக்கவும் தண்ணீரை மொண்டு பாய்ச்சும் குழலாகவும், காற்றை ஆராய்ந்து தனது நுட்பமான மோப்பத்தால் தூரத்தில் என்ன இருக்கிறது என்று எச்சரிக்கை செய்யும் கருவியாகவும் உதவும் தும்பிக்கையை யானைகள் தூக்கத்திலும் பாதுகாப்பாகவே வைக்கும். மரப்பட்டை, குழை, மூங்கில் இவைகளை உரிக்கவும் முறிக்கவும் அதை உபயோகித்தாலும், தும்பிக்கையின் பலத்தைக் கடந்த முரட்டு வழிகளில் எப்போதும் அதை உபயோகிப்பதில்லை. பல்லாயிரக்கணக்கான தசைகள் கொண்டு பலமாக இருந்தாலும், மிக நுட்பமான உணர்ச்சியும் வாய்ந்த தும்பிக்கைதான் யானையின் முக்கிய அங்கமும், தனி அமைப்பும் ஆகும். வேறெந்த மிருகத்திற்கும் இதுபோன்ற ஆச்சரியகரமான பல்செயல் மூக்கு வாய்ந்தில்லை.

நம் தேசத்து யானையை ஆங்கிலத்தில் சகஜமாக "இந்திய யானை' என்று அழைப்பதுண்டு. இந்தியாவில் உள்ள யானையை 'இந்திய யானை' என்பதில் விசித்திரம் எதுவுமில்லை. என்றாலும், இதே யானை சுற்றிலுமுள்ள பல ஆசிய தேசங்களுக்கும் உரியது; இது, இலங்கை, பர்மா, மலேயா முதலிய நாடுகளிலும் சுயேச்சையாக வாழும். ஆசியாவில் ஒரு வகை யானைதான் உண்டு. ஆப்ரிகாவில், வேறு விதமான யானை வகைகள் இரண்டுண்டு. அவற்றுள் ஒன்று நம் யானையைவிடப் பெரியது; மற்றது சிறியது. எல்லாவித யானைகளிலும் ஆண் பெண்ணைவிடப் பெரிதாயிருக்கும். நமது யானையில் பெண்ணுக்குக் கொம்பு கிடையாது—ஆனால் சில மட்டும், வளர்ந்த பின்னும், மிகச் சிறிய கொம்புகள் கொண்டிருக்கலாம்.

நமது யானையில், பெண் மிகப் பெரிதாக இருந்தாலும், 8 அல்லது 8½ அடி உயரம்தான் இருக்கும். மிகப் பெரிய ஆணும் 10 அடி உயரத்துக்கு மேல் வளர்வதில்லை என்று சில நிபுணர்கள் எழுதியிருக்கிறார்கள். உயரத்தை மட்டும் கொண்டு யானையின் உடல் பலத்தையோ கனத்தையோ அளவிட முடியாது. சில ஆண் யானைகள் உயர்ந்து உடல் நெருங்கி இருக்கலாம்; மற்றும் சில, உயரத்தில் ½ அடி குறைந்திருந்தாலும் பயங்கரமான தசைப் பற்றும் பலமும் வாய்ந்திருக்கலாம். நமது காட்டானைகளின் உயரத்தை நேரில் அளக்காமலே கணக்கிட ஒரு வழியுண்டு. முன்கால் சுவடின் சுற்றளவின் இரு பங்கு யானையின் உயரம். இப்படிச் சுவடினின்றும் முன்கால் சுற்றளவை அளந்து பார்ப்பதில் இரு விஷயங்களில் கவனமாக இருக்கவேண்டும். முதலாவது, மணலிலோ சதுப்பு நிலத்திலோ சுவடிருந்தால் அது சற்றுப் பரவி இருக்கலாம் — ஆகையால், திடமான பூமியில்தான் அதை அளக்க வேண்டும்; இரண்டாவது, யானை நடந்து செல்லும் போது அதன் பின்கால் சுவடுகள் முன்கால் வைத்த இடத்திலேயே விழுவதால், அது எங்கேனும் திரும்புகையில் முன்கால் சுவடு தனியாக விழுந்ததைக் கண்டெடுத்து

அளக்க வேண்டும். இப்படி அளவெடுத்தால், ஏறத்தாழ ஒரு அங்குலத்திற்குள், யானையின் உயரத்தைத் தெரிந்து கொளளலாம்.

ஒனபதடித் தோள உயரமும், நல்ல உடல் வாய்ப்பும் கொணட வயதுவநத ஆண்யானை மிகவும் பெரிதானதே. 10 அடி உயரமுளளது பிரமாண்டமானது. இது மட்டும், நான சுமார 50-55 ஆண காட்டானைகளை உறறுக் கவனித் திருககிறேன. இவறறுள எலலாவற்றிலும் பெரியது 9 அடி உயரநதான இருககும்; அதன் கொமபுகளும வளைநது மெலலியதாய, சுமார இரணடடி நீளநதான இருககும். ஆனால அதன துமபிககை தடிப்பும, உடல் கால் தடிப்பும, பொலலாத பலமும, வியபபும அசசமும தருமபடியாக இருநதன. நான இதுமட்டும கண்ட ஆண யானைகளில் மிக உயரமானது, சுமார 70 வயதுள்ள ஒரு தனி யானை. நான் அதைப பாாத்தபோது அதற்கு மதம பிடித்திருந்த தால் சற்று இளைத்திருந்திருக்கலாம். ஆனாலும், அது நல்ல உடல் கனமுளள யானைதான; மேலும், உடலமைப்பில் மிகவும் சிறநதது. யானை நிபுணர், எலலாவறறிலும மேன் மையானதாகக கருதும 'குமரியா' ஜாதியைச சேர்நதது. இதுவும 10 அடி உயரமில்லை; முனகால் சுவடு விதிபபடி இதன் உயரம 10 அடிககு $1\frac{1}{2}$ அஙகுலம குறைவாகவே இருநதது. இருநதாலும, மிக கம்பீரமான யானை. அதன் புகைபபடத்திலிருந்து அது எப்பேர்ப்பட்ட யானை என்பதை நீங்களே தெரிந்துகொள்ளலாம்.

ஆனால 10 அடி உயரத்துக்குமேல் நமது யானை வளர் வதில்லை என்பது தவறு. $10\frac{1}{2}$ அடி உயரமுள்ள யானை களும் இருந்திருக்கின்றன — இவைகளைப் பற்றி சிலர் குறிப்புகள் எழுதியிருக்கிறார்கள். மேலும், சென்னை சாட்சி சாலையில், சுமார் நூறு வருஷங்கள் முன்னிருந்த ஒரு பெயர் பெற்ற யானையின் (அதாவது, கெட்ட பெயர் பெற்றது!) எலும்புக் கூடு இன்றும் இருக்கிறது. இந்த ஆர்க்காடு வெறி யானை'யின் எலும்புக் கூட்டின் உயரம்

10½ அடி; உயிருடன் இருந்தபோது இந்த யானை ஏறத்தாழ 11 அடி உயரம் நின்றிருக்க வேண்டும்.

யானைகள் எவ்வளவு காலம் உயிருடன் இருக்கும் என்பதையும் இங்கே குறிப்பாகச் சொல்லலாம். நமக்குள், 'அவை நீடித்து வாழ்பவை, 100 வருஷங்களுக்கு மேலாகவே சாதாரணமாக வயதடையும்' என்ற கொள்கை உண்டு. மேலநாட்டு இயற்கைஞானிகள், யானைகள் சாதாரணமாக 70 வருஷங்களுக்குமேல் வாழ்வதில்லை என்று சொல்லியிருக்கிறார்கள். இரண்டும் சரியில்லை. அதன் வாழ்க்கையிலும், வயதடைவதிலும், (கால் முட்டி பின் வளைவு கொண்டிருக்கும் உடலமைப்பிலும்கூட), யானை மனிதனை ஒத்திருக்கிறது. பெண் யானைகள் 15-16 வருஷ வயதானதும் பருவமடைந்து சினையாகலாம். 20-25 வயதுக்குள் ஆண் தன் முழு வளர்ச்சியையும் அடைகிறது. பிறகு, 30-35 வயதுள் முழு தேக பலத்தையும் அடையும். 50 வயது மட்டும் பெண் யானைகள் கர்ப்பமாகிக் குட்டிபோடலாம். 70 வயதான ஆண் யானை சற்று வயதானதே. சில யானைகள் 100 வருஷமட்டும் உயிருடன் இருக்கும் 70 வயதான பின்னும்கூட காட்டானைகள் நல்ல தேகபுஷ்டியுடன் இருக்கலாம்.

'யானைக்கும் அடி சறுக்கும்' என்ற பழமொழி உண்மையானதே. இதில் முக்கியமானது, 'யானைக்கும்' என்று யானையின் அடி உறுதியை வற்புறுத்திக் கூறியிருப்பதே. மலைக்காடுகளில், செங்குத்தான நெருங்கிய பாதைகளிலும் ஒரே சாய்வான இறக்கங்களிலும் யானைகள் வெகு சாதுரியமாகக் கால் இடராது செல்லும். மேலும், முன்னுள்ள தரை தமது பெருங்கனத்தைத் தாங்குமா என்று தும்பிக் கையால் தட்டிப் பார்த்துக் கொண்டுதான் அதில் கால் வைக்கும் — முன்கால் சுவடிலேயே பின் காலை வைக்கும். ஆனாலும், மிகவும் அபூர்வமாக சில வேளைகளில் யானைக்கும் அடிசறுக்கலாம். ஆற்றங்கரை ஒரே சாய்வாகவுள்ள இடங்களில், கரைமேட்டிலிருந்து. அடிமேல் அடிவைத்து

இறங்காமல், தண்ணீருக்குச் செல்லும் யானை உட்கார்ந்து வேண்டுமென்றே சறுக்கிச் செல்வதுண்டு.

வேகமாகச் செல்லும்போதும் யானை நாலுகால் பாய்ச்சலில் போகாது; அதன் உடல்கனம் மிகப் பெரிதானதால் நாலுகாலையும் ஒரேமட்டாய் எழுப்பிக் குதிக்க யானையால் முடியாது. அது விரைந்து செல்வதும் வேகமான நடைதான்—அதனால் குதித்தோட முடியாது. தவிரவும், பள்ளங்களைத் தாண்டிக் குதிக்க முடியாது. மனிதன் ஓடும் வேகத்திலும் விரைவாக யானை விரைந்து நடக்கும். ஆகையால், யானையினின்றும் ஓடித் தப்ப முடியாது. மேட்டு நிலத்தில், பள்ளத்தை நோக்கி ஓடுவதே உசிதம். எங்கேயாவது பெரிய பள்ளமிருந்தால் அதனுள் குதித்து, பிறகு செடி மறைவாக ஒளிந்துகொண்டு தப்பிவிடலாம். யானைக்குக் கண்பார்வை சற்று மந்தம். அதன் வாழ்க்கையில் மோப்பமும், செவியுணர்ச்சியுமே முக்கியம் 10–11 அடி அகலமுள்ள பள்ளத்தையும் யானைகள் கால் நீட்டிக் கடந்துவிடும்.

தங்கள் பேருடலைச் சுமந்து செங்குத்தான மலைச் சாரல்களில் ஏறியிறங்க யானைகளுக்குப் பிடிக்காது. சற்றுச் சுற்றி வளைத்து, லேசான ஏற்றம் எதுவோ அதுவழியாகத் தான் செல்லும். மலையுச்சியை அடைய யானைகள் சென்ற பாதையைப் பின்பற்றுவதைவிடச் சுலபமான வழி கிடையாது.

யானைகள் நன்றாக நீந்தும். சிறு கன்றுகளும் காட்டாறுகளைக் கடந்து நீந்தும். தண்ணீரிலுள்ள யானையின் மேல் தலையும், முதுகின் மேற்பாகமும்தான் நீர் மட்டத்திற்கு மேலாகத் தெரியும்; மற்றதெல்லாம் நீருள் முழுகி யிருக்கும். முற்றிலும் தலையை நீருள் முழுக்கியும் யானை நீந்தும் — அவ்வப்போது தும்பிக்கையின் நுனி மட்டும் மூச்சுவிட நீர்மட்டத்துக்குமேல் எழும்பும்.

யானைகளுக்கு சில வேளைகளில் மதம் பிடிக்கும் என்பது எல்லோரும் அறிந்ததே — அது இந்த வேளைகளில்தான்

என்று சொல்ல முடியாது — மதம் காலத்தைப் பொருத்த தில்லை; யானையைப் பொருத்தது. இந்த நிலையை வெளிப் படையாகக் காட்டும் அறிகுறிகள் சிலவுண்டு. யானையின் முன் தலையும் நெற்றியும் சற்று வீங்கினாற் போலிருக்கும்; கண்ணுக்கும் காதுக்கும் இடையே முகத்தின் இரு பக்கத் திலுமுள்ள ஒரு சிறு துவாரம் வழியாக மைபோலுள்ள ஒரு கருநீர் வடியும் — இதுதான் 'மதம்'. இந்த மதநீர் யானையின் கன்னங்களில் பரவும். மதம் பிடித்த யானையை இந்த அறிகுறிகளால் கண்டவாக்கில் தெரிந்து கொள்ளலாம்.

மதம் என்பது ஒருவித வெறியென்றும், அது ஆண் யானைகளை மட்டுந்தான பாதிக்கும் என்றும், காமத்தின் கருஞ்சின்னம் என்றும், மதம் பிடித்த யானை கண்டதை எல்லாம் தாக்குமென்றும், ஒரு பெண் யானையின் சக வாசத்திலும் புணர்ச்சியிலும் ஆணுக்கு மதம் தெளியும் என்றும் — நமக்குள் பல கொள்கைகள் உண்டு. இவை எதுவும் முற்றிலும் உண்மையானதில்லை; முற்றிலும் கற் பனையும் இல்லை!

சாதாரணமாக, 20 வயதுக்கு மேற்பட்ட ஆண் யானை களுக்குத்தான் மதம் பிடிக்கும் — பிறகு, கிழ வயதிலும் மதம் பிடிக்கலாம். காட்டில் சுயேச்சையாகத் தின்று கொழுத்த பெண் யானைகளுக்கும் மதம் பிடித்திருந்ததை தாம் கவனித்ததாக ஸாண்டர்ஸன் என்ற வெள்ளைக்கார யானை நிபுணர் எழுதியிருக்கிறார். யானைகளை நன்கறிந்த ஒரு குருபர் ஜாதிப் பாகனும் இது போல் என்னிடம் சொல்லியிருக்கிறான். பழக்கி வளர்க்கும் யானைகளுள், பெண் யானைக்கு மதம் பிடிப்பதில்லை.

மதம் பிடித்த ஆண்யானை பெண்யானையைத் தேடும் என்பது உண்மைதான் என்று நினைக்கிறேன். இதுபோல், மதம் பிடித்த ஆண் காட்டானை பழக்கி வளர்க்கும் பெண் யானைகள் இருக்குமிடம் வந்து, அவற்றுள் ஒன்றுடன் சில நாட்களிருந்து சம்போகித்ததை நான் இருமுறை நேரில்

கண்டிருக்கிறேன். இருந்தாலும், பெண் யானையின் சக வாசத்தில் ஆணுக்கு மதம் தெளியும் என்பதற்கில்லை. யானைகளுள், புணர்ச்சி ஆண் யானையின் மதத்தைப் பொருததில்லை — பெண் அதை விருமபும் நிலையில் இருபபதைப் பொருத்தது. மேலும், மதமடையாத ஆண் யானையும பெண்ணுடன சமபோகிக்கும்.

பழக்கி வளர்க்கும சில ஆண் யானைகளுக்கு மதங் கண்டால், வெறிபிடித்துப் பாகனையும் கொல்லப் பார்க்கும்; சில, சுமமா, மந்தமாக இருககும். இது அந்நத யானையின சுபாவததைப பொருததது. மொத்தத்தில, மதம யானைககு சோர்வும எரிசசலும கொடுக்கும் எனறு சொல்லலாம். காட்டானைகளுககு மதம் பிடிததால் சாதாரணமாக, வெறிபிடிததாறபோல் நடந்து கொளவதிலலை. பலமுறை, அபபோது அவை சற்று மயககமாய இருப்பதுபோல நடநதுகொளவதை கவனித்திருககிறேன.

யானைகள கூடிவாழும மிருகங்கள்; தங்கள இனத்தின சகவாசததை மிகவும விருமபுபவை. ஒரு குடுமபத்தைச் சேரநத யானைகள சேர்நதிருபபதாலதான் யானைக் கூட்டம ஏறபடுகிறது. ஆண குட்டிகள பெரிதானபின் கூட்டத்தை விட்டுத தனியாக விலகிவிடுகின்றன — அல்லது விலககபபடுகின்றன. கூட்டததில், வயது வந்த ஆண்யானை ஒனறுதான இருககும். அதுதான கூட்டத் தலைவன் என்று சொல்லலாம். 'உண்மையில் கூட்டத்தின் தலைமை வகிப்பது இந்தப் பெரிய கொம்பானையில்லை; அதிலுள்ள பெணயானைகளில் முதியதாகியதே' என்று பலர் நினைக்கிறார்கள. இரண்டும் நிஜந்தான்! சில விஷயங்களில் பெரிய ஆண்யானைதான் கூட்டத்துத் தலைவன், கூட்டத்தின் பாதுகாப்பு அதன் பொறுப்பு — அதாவது, எதையேனும் எதிர்ப்பதென்றால், கூட்டம் கலைந்து ஓடினால், அது தனியாகப் போய்விடும். சிலர் 'கூட்டத்தைப் பாதுகாக்கும் பொறுப்பை கொம்பானை ஒருநாளும் ஏற்பதில்லை' என்கிறார்கள். காட்டானைகளை நன்கறிந்த 'யானை ராஜா' என்ற பெயர்பெற்ற ஸாண்டர்ஸன்

துரையே இப்படிச் சொல்லியிருக்கிறார். இது தவறு. கொம்பானை கூட்டத்தின் பாதுகாப்புக்கு முந்தி வரு வதை நான் பலமுறை கவனித்திருக்கிறேன். கூட்டம் இடம் மாற்றிச் செல்லும்போது வழிகாட்டுவது, நீருக்கும் மேய்ச்சலுக்கும் எங்குச் செல்வதென்று தீர்மானிப்பது, வேறு பல தினசரி விஷயங்கள் இவைகளெல்லாம் வய திலும் அனுபவத்திலும் முதிர்ந்த பெண் யானையின் பொறுப்பு.

கூட்டத்துக் கொம்பானை எப்போதும் தன் குடும்பத் துடனதான் இருக்குமென்று சொல்லமுடியாது. எங்கேனும் போகையில, சாதாரணமாக, கூட்டத்தின்பின செல்லும். மேயும்போதும சிறிது விலகி, தனியாகவோ, ஒரு சிறு ஆண் யானையுடனே மேயலாம். சில வேளை, கூட்டத்தை விட்டுப பிரிந்து நெடுந்தூரம் சென்று, தனியாகச சில நாட்கள் சஞ்சரிக்கலாம — சில வாரங்களகூட இதுபோல தனியாக இருக்கலாம். இதைக குறித்து ஒரு யானைப் பாகனை விசாரித்ததில், அவன பின்வருமாறு காரணம் விளக்கிச் சொன்னான் :

"நமக்குள்ளேகூட வயசானா இந்தக் குடும்ப பாரம் போரும்போரும்னு ஆயுடரதில்லையா! கூட்டத்தில் பெரிய கொம்பானை இது ஒன்றுதான்—மற்றதெல்லாம் பொண் ணும் பசங்களும். சதா இதுகிட்ட ஏதேனும் சொல்லிக் கிட்டே இருக்கும். அது மட்டுமா! பொண்ணுங்க போடற சண்டையும் பூசலும் குட்டிங்க போடற கூச்சலும் கத்தலும்! கொஞ்ச நாளானா எப்படா நாம நிம்மதியா றாயா இருக்கப்போறோம்னு ஆயுடும். அப்பால ஒருநாள் சொல்லாத கொள்ளாத இது எங்கேனும் போயிடும். தனியா நாலு நாளிருக்கும். அப்புறம் தன் கூட்டத்தெ நெனச்சுக்கும் — மறுபடியும் போய்ச் சேரும். ஐயாவுக்குக் கூட பெரிய குடும்பம் போலிருக்கே — தனியா நீங்க காட் டைப் பார்த்துண்டு வரலியா !"

இந்த இடத்தில் ஒரு சிறிய விஷயத்தை விளக்கிச் சொல்லலாம். வயது வந்த ஆண் — யானைக்குத் தமிழில்

'களிறு' என்றும், பெண்ணுக்கு 'பிடி' என்றும் அழகான தனிப் பெயர்கள் இருப்பதைப் பலரும் அறியலாம்.

> "யாதும் சுவடு படாமல் ஐயாறடைகின்ற போது
> காதல் மடப்பிடியோடு களிறு வருவன கண்டேன்"

— என்று தேவாரத்திலில்லையா? இப் பழந்தமிழ் பெயர்கள் இருக்கையில், இது மட்டும் அவைகளை அறியாதவன் போல் 'ஆண் யானை' 'பெண் யானை', என்று எழுதியது போதாதென்று, காட்டு வாசிகளின் பேச்சைப் பின்பற்றி யானைத்திரளைக் 'கூட்டம்' என்றும், திரளின் பெருங் களிறைக் 'கொம்பானை' என்றும் குறித்திருக்கிறேன்! ஒருவேளை, இதைப் படிப்பவர் சிலருக்கு பேச்சில் இன்று வழங்காத இந்தப் பழந்தமிழ் பெயர்கள் தெரியாதிருக் கலாம் என்று நினைத்தே இப்படி எழுதுகிறேன். 'கொம் பானை' என்ற பெயர் அநேகமாய் பொருத்தமாக இருந் தாலும், பொருத்தமில்லாமலும் இருக்கலாம். ஏனென்றால் சில பெரிய களிறுகளுக்கும் கொம்பில்லாதிருக்கலாம் — இது பிறவிக்குணம்; கொம்பு உடைந்துவிட்டதால் ஏற் பட்டதில்லை. வடக்கிலுள்ள பாஷைகளிலும், அவற்றைப் பின்பற்றி ஆங்கிலத்திலும், கொம்பில்லாத இந்த ஆண் யானைகளுக்கு 'மக்னு' என்று பெயர். கொம்பு இல்லா விட்டாலும், அவைகளுக்குத் தும்பிக்கை மிகவும் தடித்து, தேக பலமும் நன்கு வாய்ந்திருக்கும். இலங்கையில் ஆண் யானைகளுக்குக் கொம்பிருப்பது அரிது—அங்கே எல்லாம் 'மக்னு'க்கள்தான். அஸ்ஸாம் காடுகளில் பல 'மக்னு' உண்டு — தெற்கில் கொம்பானைகளே சாதாரணமாகக் காண்பவை.

மேற்சொன்னபடி தனியாகப் பிரிந்துவந்த கூட்டத் தலைவனோ, கூட்டத்தினின்றும் வெளிவந்த வளர்ந்த இளம் ஆண் யானைகளோ, தன்னிலும் வலிமையான மற்றோர் ஆண் யானையிடம் தன் கூட்டத்தை இழந்துவிட்ட களிறோ தனியாகச் சஞ்சரிக்கலாம்: இவை அனைத்தும், ஒரு கூட் டத்துடன் சேர்ந்து வாழ நல்ல தருணம் கிடைத்தால்

சேர்ந்துவிடும். ஆனால், அதுபோல் தருணம் கிடைப்பது அரிது. இவற்றுள் பின்குறித்த இருவகை ஆண் யானைகளும் பல மாதங்கள், அல்லது பல வருஷங்கள் கூட தனித்தே வாழும்.

கூடிவாழும் மற்ற மிருகங்களைப் போல, யானைகளுக்கும் ஒன்றுக்கொன்று பல விஷயங்களைத் தெரிவிப்பது மிக முக்கியம். பல்வித அறிகுறிகளாலும், தமது நுட்பமான மோப்பத்தாலும், பலவிதச் சப்தங்களாலும் இச்செய்திகளை அவை அறிவித்து அறிந்துகொள்ளும் ஒரே திரளுள். உள்ள யானைகளுள், இரண்டு பெண் யானைகளுக்கு நெருங்கிய சிநேகம் ஏற்படுதல் சகஜம். இதுபோல் சிநேகம் பாராட்டும் பெண் யானைகள் எப்போதும் ஒன்றோடொன்று கூடியிருக்க விரும்பும்; தவிரவும், தன் குட்டியை மட்டுமில்லை, தனது தோழியின் குட்டியையும் கவனித்துக் கொள்ளும்.

யானைக் கூட்டத்தில் ஒரு கன்று பிறந்தால், இரண்டு மூன்று நாட்கள் கூட்டம் அங்கேயே தங்கிவிடும். குட்டி பெறும் யானையுடன், அதன் தோழியோ மற்ற யானை ஒன்றிரண்டோ இருக்கலாம். பிரஸவத்தில் அவை ஏதேனும் உதவி புரியுமா இல்லையா என்பதை நிச்சயமாகச் சொல்ல முடியாது. சுற்றி நின்று காவலாக இருப்பதற்கு மேல் உதவி ஒன்றும் புரிவதில்லை என்றே பலர் நினைக்கிறார்கள். நானும் அப்படித்தான் நினைக்கிறேன். ஆனால், காட்டானைக் கூட்டத்தில் குட்டி பிறப்பதை நேரில் காணாததால், நிச்சயமாக எதையும் சொல்ல முடியாது காயம் பட்ட யானைக்குக் கூட்டத்திலுள்ள மற்ற யானைகள் சில வேளைகளில் உதவி புரியும் என்பது உண்மையே. பிரஸவ வேதனையிலும் இப்படிச் செய்யலாம். கும்பகோணத்தை அடுத்த திருபுவனத்திலுள்ள கோவிலில், ஒருபுறச் சுவர்க் கல்லில், மிகவும் அழிந்துபோன ஒரு சிற்பம் இருக்கிறது. இது சோழர் காலச் சிற்பம் என்று பலர் சொன்னாலும், சுமார் 400 வருஷங்களுக்குமுன், விஜயநகர ராயர்கள் காலத்தில் செதுக்கியது என்பதே என் அபிப்பிராயம்.

இதில் யானையின் பிரஸவம் சித்திரிக்கப் பட்டிருக்கிறது. குட்டி பிறக்கையில், தாயின் வாலை ஒரு தோழி யானை பிடித்து விலக்குவதையும், குட்டி வெளிவருவதற்கு ஏது வாகத் தாயின் வயிற்றைக் களிறு தன் தும்பிக்கையால் அணைப்பதையும், இதில் காட்டியிருக்கிறது. நமது பழங் காலச் சிற்பிகளின் கற்பனைதான் எவ்வளவு எல்லையற்றது!

யானைக்குட்டி பிறக்கையில் சுமார் 3 அடி உயரமும் 200 ராத்தல் எடையும கொண்டதாக இருக்கும். தும் பிக்கை மிகச் சிறியதாயிருக்கும்; தோல் மிகவும் சுருங்கி, செம்மயிர் போர்த்திருக்கும். முழு வளர்ச்சி அடைய 20-25 வருஷங்கள் ஆகும். அப்பால் சுமார் 20 வருஷங் கள் மட்டும் உடல் கனமும் யானையின் பலமும் பெருகும்; 65, 70 வயதானபின் குன்றும். நமக்குள், 'பெண்குட்டி யைத் தாய் சுமார் 18 மாதம் சுமக்கும்—ஆனால் ஆண் குட்டியை அதற்கும் மேற்பட்டு, 21-22 மாதம் சுமக்கும்' என்ற ஒரு நம்பிக்கையுண்டு. இது நிஜமானதே என்று தோன்றுகிறது. பிறந்து சில நிமிஷங்களுள் குட்டி தட்டித் தடுமாறி நடக்க ஆரம்பிக்கும்; மறுநாள் சற்றுத் திடமாக நடக்கும்; மூன்றாவது நாள், திரிந்தலையும் கூட்டத்துடன் தன் தாயின் உதவியுடனும், பாதுகாப் பிலும் செல்லும்.

காட்டானைகளைப்பற்றி இன்னும் எத்தனையோ விஷ யங்களை எடுத்துச் சொல்லலாம். அப்படிச் செய்தால் இக் கட்டுரை நீண்டுவளர்ந்து, இப்புத்தகத்தில் மற்ற எழுத் தாளர்களுக்கோ (இல்லை, எனக்குந்தானே!) இடமில்லாது போய்விடுமென்று, இன்னும் ஒரு முக்கிய விஷயத்தை மட்டும் சொல்லி நிறுத்துகிறேன்.

ஒரு நூற்றாண்டுக்கு மேற்பட்டே நமது ஜனத் தொகை பெருகிக்கொண்டு வந்திருக்கிறது. என்றாலும், சமீப காலத்தில்தான் அது துன்பமளிக்கும் வழிகளில் செழித்து, நம்மைக் காடுகளை அழிக்கவும், காடுகளில் நம்மைக் குடியேற்றி அணை-மின்சார நிலையங்களை நிலை

நிறுத்தும்படியும் செய்திருக்கிறது. சுமார் 40 வருஷங்கள் முன்கூட, காடுகளில் காடுவாழ் ஜனங்களே இருந்தார்கள். அப்போதும் இவர்களுக்குக் காட்டானைகளால் பல இடையூறுகள் ஏற்பட்டன. இவர்கள் பயிரிட்ட கேழ்வரகு முதலிய கொல்லைகளை யானைகள் அழிப்பது சாதாரணமாக நடந்ததே. ஆனாலும், அப்போது அவர்கள் காட்டானைகளைக்கண்டு நடுங்கவில்லை; அவைகளை விரட்டியும் ஓட்டியிருக்கிறார்கள். இன்று அப்படியில்லை. பலவிடங்களில், மனிதர்களைக் கண்டால் காட்டானைகள் ஓடாது, அவர்களைத் தாக்குகின்றன, யானைகளைப் பார்த்தால் நாம் பயப்பட வேண்டிய காலம் பிறந்துவிட்டது. தவிரவும், காடுகளிலும் அக்கம்பக்கத்திலும் உள்ள, புதிதாய் உண்டான, குறிச்சிகளிலும் ஊர்களிலும் சில வேளைகளில் காட்டானைகள் உயிருக்கும் பயிருக்கும் சேதம் விளைவிப்பதால், அவைகளைச் சுட்டுத் தொலைத்துவிடுவதே சரி என்று பலர் நினைக்கிறார்கள். இது ஏனிப்படி ஆய்விட்டது?

இதை விளக்க தமிழ்நாட்டை மட்டும் எடுத்துக் கொண்டால் போதும். இங்கே, சென்ற 50 வருஷங்களுள் சமதரைக் காடுகள் முற்றிலும் அழிக்கப்பட்டு, முல்லை என்பது பாலையாகவும் மருதமாகவும் மாறிவிட்டது. இப்போது, குறிஞ்சி நிலத்தில் மட்டுந்தான் யானைகள் வசிக்கக் கூடிய காடுகள் இருககின்றன. இவற்றுள் ஒன்றில் கூட நாம் கால் வைக்காது இல்லை. பழங்காலத்திலிருந்து காட்டானைகள் தலைமுறை தலைமுறையாக வாழ்ந்துவந்த காடுகளில், நமது அணைகளும் மின்சார நிலையங்களும், தேக்குத் தோட்டங்களும், தேச்செடி தோட்டங்களும் இன்னும் பல வகைத் தோட்டங்களும், தவிரவும் பல புதுக் கிராமங்களும் இப்போது உதித்திருக்கின்றன. மேலும் இவைகளுக்கு நடுவிலும் சுற்றிலும், காட்டை நாகரிகப்படுததும் மோட்டார் ஓடடக்கூடிய பரந்த பெரும் ரஸ்தாககள் எங்கும் உள்ளன. மின்சார விசையைத் தாங்கிச் செல்லும் கம்பங்களும் தந்திகளும் காட்டைத் துளைத்துப் பல மைல்கள் செல்கின்றன. மேலும், புதிதாக எழும்பிய

கிராமங்களையும் சிறு நகரங்களையும் சுற்றி, பயிர்களும், பழத்தோட்டங்களும் பரவியிருக்கின்றன.

இது மட்டுமா? காடெங்கும் மனிதர்களைக் காண லாம். காட்டிலாகாவுக்குக் கட்டணம் செலுத்தி உரிமை பெற்று, பாறைப் பாசியிலிருந்து கடுக்காய்வரை விலை பெறக்கூடிய பல பொருள்களைத் தேடியெடுப்பவர், இது போல் கட்டணம்செலுத்தாமல் கிடைத்ததை அபகரிப்ப வர், காட்டு ரஸ்தாக்களையும் மின்சாரக் கம்பங்களையும் மேற்பார்வையிடுபவர், பழுதுபார்ப்பவர், ஏலத்தில் பணங் கட்டி மரங்களை வெட்டுபவர், திருட்டுத்தனமாக மரம் வெட்டுபவர்—இல்லை, சுள்ளி பொறுக்குபவர், இப்பேர்ப் பட்டவர்களை பிடிக்கவரும் காட்டிலாகா உத்தியோ கஸ்தர்கள்,இவர்களையும் இவர் போன்றவர்களையும் எங்கும் பார்க்கலாம். மொத்தத்தில், இத்தனை ஆயிர வருஷங் களாக வெறும் அடவிகளும் அருவிகளும் முரட்டு இயற் கைச் செழிப்பாக இருந்த நமது மலைக்காடுகள் இப் போது நாகரிகம் அடைந்துவிட்டன எனலாம்

இதன் நடுவில் போக்கிடமில்லாமல் திகைக்கும் காட்டு மிருகங்களுள் யானைகள் முக்கியமானவை. மனிதர் தம்மை எங்கும் விரட்டுவதாலும, காயப்படுத்து வதாலும், அவை நாளடைவில் தமது இயல்பான மனிதர் பயத்தை இழநதுவிட்டன. இதையெல்லாம் மேலும விளககிப் பயனிலலை. ஆனால், இநதக் காரணங்களால தான் காட்டானைகள் இபபோது பல இடங்களில் மனிதர் பயம் இழந்து இருககினறன என்றும், அவைகளை ஓரி டத்தை விட்டு விரட்டவேணடியிருந்தாலும், காயப்படுத் தாது விரட்டுவதே உசிதம என்றும் சொல்லலாம்.

## நாகரத்தினம்

தி. ஜ. ர.

மல்லிகைப் புதர் மறுபடியும் துளிர்த்துவிட்டது. அதிலே அரும்பு எடுக்கும்போதுதான், உளுந்தாயியின் உள்ளத்தில் என்ன என்னவோ எண்ணங்கள் - இன்பக் கனவுகள் - எழும். அந்த மனைப்பாம்பு வசித்ததும் இந்தப் புதருக்கு அடியில் இருந்த வளைகளிலேதான்.

சில நாளைக்கு முன்னே தழை மண்டிக் கிடந்தது இந்த மல்லிகைப் புதர். ஒரே ஓர் அரும்புகூட அப்போது அதில் முகிழ்க்கவில்லை. உளுந்தாயி புதரைச் சுற்றிச் சுற்றி வருவாள். அரும்பே அகப்படாது. கையிலே அரும்பு நிறையும்போதுதானே அவள் உள்ளத்திலே எண்ணங்கள் கொப்பளிக்கும்; குதூகலம் உண்டாகும்? அரும்பைக் காணுமல் உளுந்தாயி ஏமாற்றமடைவாள்; ஏங்குவாள். இநத மல்லிகைப் புதரிலே அவள் அரும்பு எடுக்கும்போது தான மாணிக்கமும பெரும்பாலும் வந்து அவளிடம் கேலிக்கு ஆளாவான். எது பூ அரும்பு, எது இள அரும்பு என்று தெரியாமல் எல்லாவற்றையுமே அவன் பறித்து விடுவான். எத்தனை நாள் அந்த வித்தியாசததை அவள் எடுத்துச் சொல்லியும் அவனுக்குப் புரியவே இலலை. திரும்பத் திரும்ப அந்தப் பிசகை அவன செய்துகொண்டே யிருநதான். அது கணடு உளுந்தாயிக்கு ஒரு பக்கம் உணமையிலேயே கோபம வரும; மறுபக்கம் சிரிபபு வரும். சீறுவாள்; கேலி செய்வாள்., இத்தனையையும் அளவற்ற

பொறுமையுடன் மாணிக்கம் பொறுத்துக்கொள்வான். அவனுங்கூட ஊருக்குப் போய்விட்டான். அவன் போனதை அறிந்துதான இந்தப் புதரும் இப்படித் தழைமண்டி விட்டதோ, ஒருவேளை!

அந்தியில் நிலாக் கண்டதும், இந்தப் புதரிலே அரும்புகளைப் படிபடியாய் உளுந்தாயி எத்தனையோ முறை பறித்திருக்கிறாள். இரவில் ஒரு பானை தண்ணீரிலே அந்த அரும்புகளைப் போட்டுவைத்தால், விடியும்போது மலர்ந்து அவை என்ன அற்புதமாய் மணம் வீசும்! அவற்றை அவள் மிகவும் நேர்த்தியாய்த் தொடுப்பாள. அரசமரத்துப் பிள்ளையாருக்கு அணிந்ததுபோக மீதியைத் தன் தோழிகளுக்கெல்லாம் கொடுத்துத் தன் கொண்டையிலும் கொஞ்சம் செருகிக்கொள்வாள்.

என்றும் பூத்துவந்த அந்தப் புதர் ஏன் திடீரென்று ஒரு நாள் தழை மண்டி, அரும்பே கட்டாமல் நின்றது? பூவாத அசோக மரம்கூட அழகியின் கால்பட்டால் பூக்கும் என்பார்கள். உளுந்தாயி அரும்பு எடுக்கும்போதெல்லாம் நித்தமும் அவள் காலடியில் மிதிபட்ட மல்லிகைப் புதருக்கு ஏன் இந்தச் சண்டித்தனம்?

"அப்பா, இதென்ன பூக்கவே மாட்டேங்குது?" என்று முகம் சுளித்தபடி தகப்பனைக் கேட்டாள் உளுந்தாயி.

அவள் இன்னமும் கன்னி கழியாத கட்டழகி. அவளுககு என்ன தெரியும, இந்தப் பூச்செடி ரகசியமெல்லாம்?

அவளுடைய தகப்பன் சாமிச்சேந்தன் புன்சிரிப்புப் பூத்தான. தன் ஒரே செல்வமகளின் வெகுளித்தனமான கேள்வி அவனுக்குக் களிப்பூட்டியது. மனைவியை இழந்தது முதல, தன் மகளிடம் அவனுக்கு அளவற்ற அன்பு. 'பாவம், தாயில்லாப் பெண்!' என்று நினைக்கும்போதெல்லாம் அவன் உள்ளம் நெகிழும். அவனுக்கு என்ன செல்வத்தில் குறைவா? மதிப்பில் குறைவா? அவன் மச்சு வீட்டுக்காரன். எல்லாருக்கும் நல்லவன். நலல உழைப்பாளி. சுவாமிக்குப் பயந்தவன். 'சாமியார்' என்றே

அவனை ஊரிலே எல்லாரும் சொல்வார்கள். அவ்வளவு பற்றற்றவனாய் அவன் வாழ்ந்தான். ஆனால், அவனுக்கு இன்று வாழ்க்கையில் ஒரே ஓர் ஆவல், ஒரே ஒரு கவலை மட்டும் உண்டு. மகள் உளுந்தாயி எந்நேரமும் சந்தோஷமாக இருக்கவேண்டும்; அவள் துளி முகம் சிணுங்கினாலும் அவனால் பொறுக்க முடியாது.

"என்ன சிரிக்கிறீங்களே! இனிமே இது பூவே பூக்காதா?" என்று மறுபடியும் கேட்டாள் உளுந்தாயி.

"ஒரே வாரத்தில் அதைக் கொள்ளை கொள்ளையாய்ப் பூக்கச் செய்கிறேன். கவலைப்படாதே, தங்கம்" என்றான், சாமிச்சேந்தன்.

நிறைய வைககோலை எடுத்துப் புதரைச் சுற்றிலும் போட்டான்; கொளுத்திவிட்டான். மல்லிகை இலைகள் வாடிக் கருகின. இரணடே நாளில் அத்தனை சருகும் உதிர்ந்து, புதர் முழுவதும் மொட்டையாய் நின்றது. மீணடும எருவிட்டுத் தண்ணீர் பாய்ச்சினான சாமிச்சேந்தன். மல்லிகைப் புதரில் மெத்தென்று தளிர்கள் உதயமாயின. அத்தனையும் ஒரே அரும்புகளாய் முகிழ்த்துக் குலுங்கின. உளுந்தாயியின் உள்ளமும் பூரித்துக் குதூகலித்தது. அவள் அரும்பு எடுக்கத் தொடங்கினாள்.

இப்போதுதான் அவளுக்கு அந்த நாகப்பாம்பின் ஞாபகம வந்தது. 'அன்னககி அப்பா வைக்கலைப் பரப்பிக் கொளுத்திச்சே. அப்போ வளைக்குள்ளே இருந்த பாம்பு என்ன ஆச்சுதோ; மாண்டு போயிருக்குமோ?' என்று அவள் எணணினாள். "ஐயோ, பாவம!" என்று தனக்குத் தானே சப்புக் கொட்டிககொண்டாள்.

சேநதனுக்குச் செடி கொடிகளெல்லாம் குழந்தைகள் போல. அவன் சிறிது தூரத்திலே ஒரு கததரிச் செடியில், பூச்சி அரித்த இலையைக் கிள்ளி எறிந்து, அன்புடன் அதன் மற்ற இலைகளைக் கோதி விட்டுக்கொண்டு உட்கார்ந்திருந்தான்.

நாகம் மாளாதிருக்குமானால், இரவில் உளுந்திதான்

அதைக் கண்டுகொள்ளலாமே ! ஆனால், என்னவோ சில நாளாக அவளுக்கு அந்த ஞாபகமே இல்லை. அவளுக்குத் தான் ஞாபகம் இல்லையா ? அல்லது, அதுதான் மாண்டு விட்டதோ? "இன்னக்கி ராவிலே அதைப் பார்த்துட்டாப் போவுது" என்று அவள் த ன க் கு த் தா னே சொல்லிக் கொண்டாள். இருந்தாலும், உளுந்தியின் மனத்துக்குச் சமாதானம் ஏற்படவில்லை "அப்பா, நீங்க் வைக்கலேப் போட்டுக் கொளுத்தினீங்களே, அப்போ, அந்தப் பாம்பு செத்திடுச்சோ, என்னமோ !" என்று அவள் தகப்பன் காதில் விழச் சொன்னாள்.

"என்ன சொல்றே?" என்று அரைச் சிரிப்புடன் கேட்ட சேந்தன், "பாம்பா ? அதுவா சாவும் ?. எதிககவும் தெரியாமெ, ஓடவும் தெரியாமெ, அடிவாங்கற அநாதைங்க மனிசங்களிலேதான் உண்டு. பாம்பு, பறவையெல்லாம் அப்படி இல்லே — பாமபு அப்பவே ஓடிப்போயிருக்கும்" என்றான்.

இந்தச் சமயத்தில், "என்ன அம்மான், வந்திட்டேன். உளுந்தி என்ன, பூப்பறிககுதா?" என்று கேட்டுககொண்டே மாணிக்கம் வந்து சேர்ந்தான்.

"வாடாபபா" என்று அவனை வரவேற்றான் சேந்தன்.

உளுந்தி அப்படியே சட்டென்று பு த ரு க் கு ள் மறைவாக உட்கார்ந்து ஒளிந்துகொண்டாள்.

"ஓ ! நான் பாககலேனு நெனேச்சுக்கிட்டே ? சும்மா எளுந்திரு, குட்டி !" எனறான மாணிக்கம்.

இடியிடியென்று சிரித்துக்கொண்டே, "வா, அத்தான்! இந்தப் பச்சைக கொளநதைங்க மென்னியை யெல்லாம் திருகலாம், வா" என்று எழுந்தாள் உளுநதி.

"அடடா! நீதான் ரொம்பக் கெட்டிக்காரி; மத்தவங் களுக்கு என்ன தெரியும்?" என்று சொலலிக்கொணடே புதரின் கிட்டச் சென்றான் மாணிக்கம்.

அவனும் அரும்பு எடுக்க ஆரம்பித்தான். தூவெள்ளை யாக இருக்கும் அரும்புகளை விட்டு, பசுமை மாறாத தளிர்

அரும்புகளையெல்லாம் அவன் பறித்துவிட்டான். தர்க்கம், சீற்றம், சிரிப்பு எல்லாம் தொடர்ந்தன.

"அது கெடக்கு, மாணிக்கம். நாளைக்கு அந்தத் தென்னங் கன்னுகளுக்குத் தண்ணி இறைக்கணும். வருவியா? காலையிலே பத்து நாளிகைக்குள்ளே எறைச்சு முடிச்சிடணும். அதுக்கு மேலே புழுக்கம் தாங்காது" என்றான் சேந்தன.

"நல்லா வர்றேன்" என்று மாணிக்கம் பதில் தந்தான்.

"ஏன்? கொள்ளை நெலாக் காயுதே. இப்பவே அத்தான் நாலு சால் எறைச்சாப் போவது. பாதியிலே நான் தண்ணி கட்டிடுவேன். நீங்ககூட உடம்பை வாட்டிக்கிட வாணும்" என்றாள் உளுந்தி.

"அடேயப்பா! பாத்தியா மாணிக்கம்! உளுந்தி வளந்திடுச்சு. அப்பனை வேலையே செய்யாமெ குந்தவெச்சுச் சோறு போடப் போவுது" என்றான் சேந்தன்.

"அதைப்பத்திக் கவலைப்படாதீங்க, அம்மான். அது போடாட்டியும் நான் போடறேன்" என்று உளுந்தியைக் கடைக் கண்ணால் பார்த்துக்கொண்டே சொன்னான் மாணிக்கம்.

உடனே உளுந்தி கொல்லென்று சிரித்தாள். சேந்தன் வாய்க்குள்ளேயே சிரித்துக்கொண்டான்.

சேந்தனுக்குத் தெரியும்; ஊரிலே 'இதுகள் ரெண்டுந்தான் சரியான ஜோடி.' தன் மகளுக்கு அவன் வேறே வரன் பார்க்கப் போவதில்லை. ஆனாலும், இந்த வயசிலே 'இதுகள்' இரண்டும் இப்படிக் கும்மாளம் போடலாமா என்பது மட்டில் அவனுக்குக் கொஞ்சம் சந்தேகமாகவே இருந்தது. என்றாலும், அவன் இவர்கள் விஷயத்தில் அதிகமாய்க் குறுக்கிடுவதில்லை.

"சரி, பதனமா அரும்பு பறிச்சிட்டு, சடுதியா வந்திடுங்க. நான் கஞ்சி குடிக்க ரெண்டு இலை தைக்கிறேன்" என்று சொல்லிய சேந்தன், திண்ணைக்குப் போய்விட்டான்.

பாம்பு, மனைப்பாம்பாக இருந்தாலும், விஷ ஜந்துவே அல்லவா? அதனிடம் சற்று ஜாக்கிரதையாகவே இருக்க வேண்டும் என்பது சேந்தனின் அபிப்பிராயம். மகள் அரும்பு பறிக்கும் போதெல்லாம 'பதனம்' 'பதனம்' என்று அவளை எச்சரித்துக்கொண்டே இருப்பது சேந்தனின் வழக்கம்.

உளுந்திக்கு அந்தப் பயம் கிடையாது. கொஞ்ச நஞ்சம் அவளுக்கு இருந்த பயத்தையும் மாணிக்கம் போக்கிவிட்டான். மனைப்பாம்பு ஒரு தீங்கும் செய்யாது என்பது அவனுடைய திடமான அபிப்பிராயம்.

ஊருக்குள்ளே மெத்தப் படித்தவன் மாணிக்கம். அவன் மாணைப்பூப் பள்ளிக்கூடத்திலும் படித்திருக்கிறான், பாதிரி பள்ளிக்கூடத்திலும் படித்திருக்கிறான். திருப்புகழை எடுத்தால், அவன் மாதிரி 'கட கட' என்று படிக்க அந்த நாட்டிலேயே யாராலும் முடியாது. காமன் பண்டிகையில், எரியாத கட்சிப் பாட்டை அவன் தான் பாடுவது வழக்கம். அவனுக்கு எத்தனையோ கதைகள் தெரியும். அவற்றில் சிலவற்றை உளுந்திக்கும் சொல்லியிருக்கிறான்.

சேந்தன் அப்பால் போனபின்பு, "அப்புறம் அந்த நாகரத்தினக் கதையை முடிக்காமலேயே போயிட்டேயே. பிறகு, அந்தப் பொண்ணு என்ன ஆச்சு?" என்று கேட்டாள் உளுந்தி.

"பூப் பறிச்சுது" என்று ராகம் இழுத்துச் சொன்னான் மாணிக்கம் மேலும் சிரித்துக்கொண்டே, "இதோ இந்த அரும்பைப் பறிக்கலாமா? நீ சொல்லு" என்று உளுந்தியின் தோள் அருகே இருந்த ஓர் அரும்பைத் தொடுவது போல, அவளுடைய தோளைக் கிள்ளிவிட்டான்.

"இந்தா, இந்தச் சரசமெல்லாம் நம்பகிட்ட வெச்சுக்காதே!" என்று உடலை உலுப்பிச் சீறினாள் உளுந்தி.

"அப்போ, கதை வேண்டாமா? நான் போறேன்" என்றான் மாணிக்கம்.

"உன்னே என்னதான் பண்றது ?" என்று சொல்லி முப்பத்திரண்டு பல்லும் தெரியச் சிரித்தாள் உளுந்தி.

"அடடே! அரும்பெல்லாம் போச்சே!" என்ருன் மாணிக்கம்.

"எங்கே போச்சு ?"

"உன் வாயிலே உன் வாய் நிறைய அரும்பாய் இருக்குதே!" என்று குறும்பாகக் கண்ணடித்தான் மாணிக்கம்.

இன்னும் கொஞ்ச நேரம் இப்படியே கேலியும் சிரிப்புமாகப் போயிற்று. இதற்குள்ளே, 'ஏ குட்டி, உளுந்தி, கஞ்சி குடிக்க வா. மாணிக்கமும் வர்ருனு ?" என்று அழைத்தான் சேந்தன்.

மாணிக்கம் வீட்டுக்குப் போய்விட்டான். உளுந்தியும் தகப்பனும் மட்டில் கஞ்சி குடித்தார்கள்.

சேந்தனுக்குப் பெரிய திண்ணையிலே படுத்தால்தான் தூக்கம் வரும். அதற்குப் பக்கத்திலேயுள்ள தொழுவத்து மாடுகள் அசைபோடும் மெல்லான சத்தம் அவன் குறட்டைக்குச் சுருதி போட்டுக்கொண்டிருக்க வேண்டும். இல்லாவிட்டால் அவன் கண் மூடாது. சேந்தன் பெரிய திண்ணையில் படுத்துவிட்டான்.

உளுந்தி சின்னத் திண்ணைக் கட்டிலில் படுத்தாள். ராஜாத்திக்குப் பூ மெத்தையின் சுகம் தெரியுமென்ருல், உளுந்திக்குக் கயிறு பின்னிய மெத்தென்ற கட்டிலின் சுகம் நன்ருகத் தெரியும். கற்ருழை கொண்டுவந்து அழுகப் போட்டு, இழைத்து, நார் எடுத்துச் சுத்தமாகக் கயிறு திரித்து, சேந்தனே தன் அருமை மகளின் கட்டிலுக்குக் குறுக்குப் பின்னல் பின்னிக் கொடுத்தான். கோத்து வாங்கிப் பின்னும் அந்தப் பின்னல் அந்த ஊரிலேயே அவனைத் தவிர வேறே யாருக்கும் தெரியாது. ஒரு சமயம் ஒரு மலைக் குறவனிடம் அதை அவன் கற்றுக்கொண்டான்.

உளுந்தி படுத்தாள். அவளுக்குத் தூக்கம் வரவில்லை, அவள் மனம் பூரித்திருந்தது. சில எண்ணங்கள் அவள்

மனத்திலே வளைய வளைய வட்டமிட்டுக்கொண்டிருந்தன. 'ஆடு பாம்பே, தெளிந்தாடு பாம்பே ?' என்று மாணிக்கம் பாடுவானே; அந்தச் சித்தர் பாட்டின் அடி ஞாபகம் வந்தது. மல்லிகை பூத்தது; மாணிக்கம் வந்துவிட்டான்; பாம்பு என்ன ஆயிற்று ? ஐயோ, பாவம் ! ஆனல், இந்த இரவில் கவனித்துவிடலாம் அதைக் கண்டு பிடிக்காமல் தூங்குவதே யில்லை — இப்படி அவள் தீர்மானித்துக் கொண்டாள்.

கர்ர்ர் !

ஓஹோ ! பாமபா ? — உளுந்தி உற்றுக் கேட்டாள். களீர் என்று அவளுககுச் சிரிப்பு வந்தது அது பாம்பின் அரவம் அல்ல ; அப்பனின் குறட்டைச் சத்தம். " இவுங்க என்ன இப்படிக் குறட்டை விடருங்க !" என்று அவள் தனக்குத்தானே முணுமுணுத்துக்கொண்டு சிரித்தாள்

வாசலிலே தென்னம்பிள்ளைகளின நிழற்கோலம் மெல்ல மெல்ல மங்கியது. நிலவு குறைந்து, சாய்ந்துவிட்டது இருளும் சூழ்ந்தது. இதுவரையில் எவ்வளவுதான் கண்ணை மூடினலும் வராத தூக்கம் இப்போது மெல்ல உளுந்தியின் இமைகளைப் பற்றத் தொடங்கியது. உளுந்தியின் மனம் சலித்துச் சோர்ந்தது. அவள் அரைத் தூக்க நிலையில் இருந்தாள்

உஸ்ஸ்ஸ் !

பாம்புககுச் செவியே இல்லை என்று இந்தக் கால உயிர் நூல் புலவர்கள் சொல்லுகிருர்கள். பாமபுக்குச் செவியில்லாதிருக்கலாம். ஆனல், உளுந்திக்குப் 'பாம்புச் செவி' — பழமையாக நாம் நம்பி வருகிருேமே, அந்தப் 'பாம்புச் செவி'

புஸ்ஸ்ஸ் !

உளுந்தியின் கண் விழித்துவிட்டது. அவள் தூக்கம் கலைந்தது. பாம்பின் சத்தத்தை நன்ருகக் கேட்டாள். பாம்புதான் ; சந்தேகமில்லை நிச்சயமாக அதுதான். இதோ, மல்லிகைப் பூ வாசனை வருகிறதே ! மல்லிகைப் [illegible] நாகத்தின் வாசனை மல்லிகை வாசனையே

அவள் இந்த வாசனையை முன்னே எத்தனையோ நாள் நுகர்ந்திருக்கிறாள்.

'உஸ்ஸ்ஸ்-புஸ்ஸ்ஸ், உஸ்ஸ்ஸ்-புஸ்ஸ்ஸ்' என்று பாம்பு சுவாசம் விடத் தொடங்கியது. இதை உளுந்தி இதற்கு முன் எத்தனையோ இரவு கவனித்திருக்கிறாள். இந்தப் பாம்பின் சுவாசம், கேட்டுக் கேட்டு அவளுக்கு ஸகஜமாகி விட்டது.

வீட்டெதிரே வேலியருகே, செவ்வரளி, கார்த்திகைக் கிழங்கு, இரண்டு செடிகளும் ஒட்டி நிற்கும் இடத்திலே தினந்தோறும் இரவில் அந்த நாகப்பாம்பு வந்து, கருக்கல் வெளுக்கு மட்டும் இப்படிச் சீறிக் கொண்டிருந்துவிட்டுப் போவது வழக்கம். உளுந்தி இடையிடையே விழிக்கும் போதெல்லாம் இந்தச் சீறல் அவள் காதில் விழும். இதைக் கேட்டால் அவளுக்குப் பயம் இல்லை. அது மாத்திரம் அல்ல; அவள் ஓர் உற்சாகங்கூட அடைவாள். வேண்டுமென்று வாசலிலே எழுந்துபோய் அந்தச் செவ்வரளிக்குச் சிறிதே எட்டியுள்ள தங்க அரளியின் அடியிலே எச்சில் உமிழ்ந்துவிட்டு வருவாள். துரோபதை அம்மன் கோயிலிலே உளுந்தி பாரதம் கேட்டிருக்கிறாள். பாம்பு சிவபிரானின் மாலை ; திருமாலின் படுக்கை குழந்தை கர்ணனின் பெட்டியிலே தாய் குந்திதேவி வைத்த சேலை, அவனுக்குத் தாயென்று சொல்லிப் பொய்யாய் வந்த பெண்களையெல்லாம் பாம்பாகவே சீறியது இந்த மனைப் பாம்பு கன்னிப் பெண்ணான தனக்கு வந்த காவலாகவே, உளுந்திக்கு என்னவோ ஓர் எண்ணம் தோன்றியது. தன்னை ஒரு தெய்வப் பெண்ணாகக்கூட அவள் கற்பனை செய்துகொண்டு விடுவாள்.

உ ஸ் ஸ் ஸ் ... பு ஸ் ஸ் ஸ் !

பாம்பு சாகவில்லை. உளுந்தியின் மனம் நிம்மதி அடைந்தது. அவள் தூங்கினாள்.

மறுநாள் போது விடிந்தது. சொன்னது சொன்னபடி, தென்னங் கன்றுகளுக்குத் தண்ணீர் இறைக்க மாணிக்கம் வந்துவிட்டான்.

கேணியின் விட்டத்திலே உருளையை மாட்டினான். தாம்பின் ஒரு முனையிலே சாலைக்கட்டி, மறுமுனையில் கல்லைக்கட்டினான் தண்ணீர் இறைக்கத் தொடங்கினான் மாணிக்கம். பாத்திக்குத் தண்ணீர் கட்டினான் சேந்தன்.

உளுந்தி பல் விளக்கி, களனி பொறுக்கி, அடுப்பு மூட்டி கஞ்சி காய்ச்சும் வேலையில் ஈடுபட்டாள்.

மாரிமழை பொய்த்தாலும்
　　மாளாத பொற்கேணி!
கோடைவெயில் சுட்டாலும்
　　குளிர்ந்திருக்கும் நற்கேணி!
[illegible] வீரவா
　　வில்லெடுத்து நாணிழுத்து
நேராக விட்டசரம்
　　தேடிவரும் அந்நேரம்
பேராது நின்றிருப்
　　பெரும்பசுவைப் போல்சுரந்து
தீராத தேம்பாகைத்
　　தெள்ளிவரும் பாற்கேணி!

இப்படி ஓர் ஏற்றப் பாட்டைப் பாடினான் மாணிக்கம். பாடிப்பாடி அவன் சால்சாலாகத் தண்ணீரை இறைத்தான். பாட்டைக் கேட்டுக்கொண்டே கஞ்சி காய்ச்சினாள் உளுந்தி. சேந்தனுக்குப் பாட்டைப் பற்றிக் கவலையில்லை. எந்த எந்தத் தென்னம் பிள்ளை 'நாலு குறும்பை' வைத்திருக்கிறது என்பதையே கவனித்துக் கொண்டு அவன் தண்ணீர் பாய்ச்சினான்.

உளுந்தி நடுநடுவே கேணிக்கு வந்து, சால் தண்ணீரில் பானை தண்ணீர் ஏந்திக்கொண்டு போனாள். அப்படி வந்து செல்லும் ஒவ்வொரு தடவையும் மடக்கிய அவள் உதட்டையும் மீறிப் புன்சிரிப்பு அவள் கண்ணிலே ஒளிர்ந்தது. மாணிக்கமோ சால் தண்ணீரை வேண்டுமென்றே வீசி

அடித்து, உளுந்தியின் சேலை நுனியைப் பாதிக்குமேல் நனைத்துக் குறும்புச் சிரிப்புச் சிரித்தான்.

மாணிக்கம் தண்ணீர் இறைத்து முடிக்கும் சமயத்தில சேந்தன் வீட்டு வாசலில் பல சிறுவர்கள் காச்சு மூச்சென்று கூச்சல் போட்டுக் கொண்டு கூடிவிட்டார்கள். அந்தக் கூட்டத்துக்கு நடுவிலே வந்தான் ஒரு பாம்புப் பிடாரன். கறுப்பான ஆட்டிடையன் - கம்பளியொன்றை அவன் தோளிலே போட்டுக்கொண்டிருந்தான். கையிலே மகுடியும் கட்கத்திலே பாம்புப் பெட்டியும் வைத்திருந்தான்.

ஊருக்கு வந்து, ஒவ்வொரு வீட்டிலும் ஒரு பாம்பு பிடித்து, சம்மானம் பெற்று வருகிறான். அவன் பாம்பு பிடிக்கும் வேடிக்கையைப் பார்ப்பதற்காகத்தான் அந்தச் சிறுவர் கூட்டம் வீடு வீடாக அவனைப் பின் தொடர்ந்தது.

தன் வீட்டுப் பாம்பையும் பிடாரன் பிடித்துப் போகச் சேந்தன் சம்மதித்துவிட்டான்.

"வேண்டாம், அப்பா, இது இருந்துவிட்டுப் போகட்டுமே" என்றாள் உளுந்தி.

"நீ சும்மா இரு, குட்டி. [illegible] பிடிக்கிறதைத்தான் பார்ப்போமே" என்று அவளிடம் சொன்ன மாணிக்கம், "ஆமாம், நல்ல பாம்பை நீ பிடிப்பியா?" என்று பிடாரனைப் பார்த்துக் கேட்டான்.

"வீட்டுக்கு வீடு நல்ல பாம்புதான் பிடிச்சுக்கிட்டு வர்றேன் எசமான்."

"உனக்கு என்ன சம்மானம் கொடுக்கணும்?"

"ஏழைக்கி என்னுங்க வேணும்? ஒவ்வொரு வீட்டு மகாராசாவும் ஒரு துணி, ஒரு படி அரிசி, கால் ரூபாய்க் காசு கொடுக்கிறாங்க. எசமானும் அப்படிக் கொடுக்காமேயா போறீங்க!"

உளுந்திக்குப் பாம்பைப் பிடாரன் பிடித்துப்போவதில் சம்மதமே இல்லை. என்றாலும், அவன் பாம்பு பிடிப்பதை வேடிக்கைப் பார்க்க மெத்த ஆசைதான். கடைசியில், அவளும் அதிக ஆட்சேபம் சொல்லாமல் மௌனமானாள்.

பிடாரன் மகுடி ஊதினான். வெகுநேரம் ஊதினான். இடையிடையே மகுடியின் கண் அடைத்துக் கொண்டது.

"பார்த்தீங்களா! பொல்லாத பாம்பு, சாமி வெகு தொல்லைபண்ணுது; சண்டித்தனம் பண்ணுது; வெள்ளென வரமாட்டேங்குது. அதை யார் விடறு!" என்று சொல்லி விட்டு மகுடியைப் பின்னும் பலமாக ஊதினான் பிடாரன்.

முடிவில் பாம்பு வந்துவிட்டது. பார்த்தனின் மார்பை நோக்கிச் சீறிவந்த வாசுகியைப் போலப் பாய்ந்து வந்தது சர்ப்பம். ஆனால், அது பிடாரனை நோக்கிச் செல்லவில்லை. அங்கும் இங்கும் திரும்பி ஓடப்பார்த்தது. பிடாரன் விடுவானா? குனிந்தும் உட்கார்ந்தும், நிமிர்ந்தும் எழுந்தும் ஆடியாடிப் பாம்பின் எதிரே மகுடியைச் சுழற்றிச் சுழற்றி ஊதினான்

பாம்பு படம் எடுத்தது; சீறியது; வால் நுனியைப் பூமியிலே பதித்து, முக்கால உடலைத் தூக்கிச் செங்குத்தாக நின்று, துள்ளி விழுந்தது; மகுடியைக் கொத்த வந்தது; கண்களால அனல சொரிவதுபோல் விழித்தது. நாமமிட்ட அதன் படம, பிசாசாடுவதுபோல மகுடிபோன திசையெல் லாம் திரும்பியது. பிடாரன் ஆடினான்; மகுடி ஆடிற்று; பாம்பு ஆடிறறு; குழந்தைகளெல்லாம் ஆடின. எல்லாருக் கும் தலைகால புரியாத வெறி உண்டாயிற்று. ஆனால், உளுந்தியின் உள்ளம் மாத்திரம் நடுங்கி ஒடுங்கியது. செவ் வரளிச் செடிகளுக் கீழே தினநதோறும் இரவிலே சீறுவது இந்தப் பாம்பா? ஐயோ! இதை இந்தப் பிடாரன் பிடித் துக்கொண்டு போவதே நல்லதென்று அவளுக்கு இப்போது தோன்றியது.

முடிவிலே, பிடாரன் ஏதோ ஒரு வேரைப் பாம்பின் முகத்துக்கு எதிரே நீட்டினான். மயக்க மருந்தை மோந்த மனிதனைப்போல அடங்கி ஒடுங்கித் தலையைக் கீழே போட் டது பாம்பு. தோளில் இருந்த கறுப்புக் கம்பளியை அப்படியே பாம்பின்மீது போட்டுப் பிடித்து, அதைத் தன் பெட்டிக்குள்ளே போட்டு மூடினான் பிடாரன். தனக்குரிய

சம்மானத்தைப் பெற்றுக்கொண்டு, சிறுவர் படை புடை சூழ அகன்றான்.

"இனிமே உளுந்திக்குப் பயமில்லே. அஞ்சாமெப் பூப்பறிக்கலாம்" என்று சொல்லிச் சிரித்தான் மாணிக்கம்.

"ஆமாம், தம்பீ" என்று உதடசையாமல் சொன்னான் சேந்தன்.

உளுந்தி மட்டில் பேசவில்லை. வெறுமையே சப்புக் கொட்டினாள். 'ஆமாம், பாம்பு தொலைஞ்சது நல்லதாச்சு!' என்று அதற்கு அர்த்தமா? அல்லது, 'ஐயோ! பாம்பு போயிடுச்சே!' என்று அர்த்தமா? இரண்டு அர்த்தங்களுமே அதில தொனித்தன. அவள் உள்ளமே அப்போது அந்த நிலையில்தான் இருந்தது.

"சரி; கஞ்சி குடிக்க வாங்க" என்றாள அவள்

சேந்தனும் மாணிக்கமும் தொன்னை தைத்துக்கொண்டு கஞ்சி குடிததார்களா; பிறகு, 'புளகுவெதலை' போட்டுக் கொணடாாகள்.

அன்று இரவு கட்டிலிலே படுத்தபோதும், உளுந்திக் குத் தூககம் வரவிலலை. 'ஆடு பாம்பே' எனற பாட்டடி ஞாபகம் வநதது. அனறு மாணிக்கம பாடிய ஏற்றப் பாட்டிலே வந்ததே, அது எனன பக? காராம் பசுவா? அந்தப் பசுவும அவளுககு ஞாபகம வநதது பாம்பு போய் விட்ட இப்போதுதான அவளுக்கு இன்னொன்றும ஞாபகம் வந்தது மாணிககம சொனன கதையில், ஒரு நாகம் கககிய நாகரததினம் ஒரு கனனிப பெணணுககுக கிடைத் ததே, அது மாதிரி இநதப் பாமபும் தனககு ஒனறு கக்கும் எனறு ஆசைகொண்டாள். அடடா! பாம்பு போய்விட் டதே இனி நாகரத்தினம் அவளுககு எஙகே கிடைககப் போகிறது? உளுந்தி ஏங்கினள்; மனம வெதும்பினள். அவளுககு வெகு நேரம் தூககம வரவில்லை. தென்னைகளின நிழல மறைநது நிலவும் சாய்ந்துவிட்டது இனனமும் அவளுக்குத் தூக்கம் வரவில்லை; நேறறு மாதிரி அரைத் தூக்கங்கூட வரவில்லை.

காக்கை குருவிகளெல்லாம் ஒடுங்கிவிட்ட நிசப்தமான நள்ளிரவு நேரம். ஒரே ஒரு பல்லி மட்டில் 'கெக்-கெக்-கெக்' என்று ஏதோ கவுளி சொல்லியது. உளுந்தி திடுக்கிட்டாள். அன்று அந்தச் சர்ப்பம் காளிங்கனைப்போல் ஆடிய பயங்கர நர்த்தனத்துக்குப் பின்பு இந்தக் கவுளிச் சப்தங்கூட அவளுக்குப் பயமூட்டியது. ஆனாலும், அப்பாடா! அந்தச் சர்ப்பந்தான் போய்விட்டதே! இப்படி அவள் நினைத்து முடிக்கவில்லை.

உஸ் ஸ் ஸ் .. புஸ் ஸ் ஸ்!

நாகம் சீறியது. உளுந்தி பதறிவிட்டாள். நாகம் போகவில்லை. அது இன்றும் வந்துவிட்டது. மல்லிகைப் பூ மணத்தோடே அது இதோ வந்துவிட்டது. அந்த மணந்தான் மூக்கைத் துளைக்கிறதே! உளுந்தி கோரைப்பாயை இழுத்துச் சுற்றிச் சுருட்டிப் படுத்துக்கொண்டாள். ஆடாமல் அசையாமல் படுத்துக்கொண்டாள். கருக்கல் வெளுக்கும் அளவும் பாம்பின் சீறல் ஓயவில்லை; அவள் தூங்கவும இல்லை.

நல்ல வேளையாய்ப் போது விடிந்தது. சூரியன் உதித்தது.

சேந்தன் கஞ்சி குடித்துவிட்டு வயல் வெளியைப் பார்க்கப் போனான்.

அந்த வீட்டில் பகலிலே தனியாய் இருக்கக்கூட உளுந்திக்கு இன்று பயமாக இருந்தது.

ஆனால், மச்சு வீட்டுக்கு வராமல் மாணிக்கத்துக்குப் போது போகுமா? அவன் வழக்கப்படி வந்துவிட்டான். வரும்போதே வாயெல்லாம பல்லாகச் சிரித்துக்கொண்டே வந்தான். அவன் தலையைக் கண்டதும் உளுந்திக்கு தைரியம் பிறந்தது. "வா, அத்தான்" என்று வரவேற்றாள்.

'அட, இதென்ன புதுமையா இருக்கு! ஓடாமெ ஒளியாமெ நீகூட என்னை வர்றபோதே அழைக்கிறையே! மழைதான் வரப்போவுது" என்றான் மாணிக்கம்.

திண்ணையிலே வந்து அவன் குந்தினான். "அம்மாளை எங்கே காணோம்?" என்று கேட்டான்.

"வயல் பக்கம் போயிருக்காங்க"

"அப்ப நான்கூடப் போகவேண்டியதுதான்."

"வேணும், போகாதே. இங்கேயே இரு."

"ஏனும்?" என்று அழகு காட்டிக்கொண்டே கேட்டான் மாணிக்கம்.

"இந்தப் பரிகாசமெல்லாம் வேணும், அத்தான். போகாதே."

"வீட்டுக்குக் காவலா? உனக்குக் காவலா?"

"இரண்டுககுந்தான்" என்று கொஞ்சும் குரலில் சொன்னாள் உளுந்தி.

"எனன கூலி கொடுப்பே?"

"என்ன கேட்டாலும் தர்றேன்."

"நிச்சயமா?"

"நிச்சயம்."

துள்ளி எழுந்துநின்று, இரண்டு விரலைத் தலைக்குமேலே தூக்கிக் காட்டி, "என்னை இந்த வருசமே கலியாணம் கட்டிப்பியா?" என்று கேட்டான் மாணிககம். அப்போது அவன் முகத்திலே அசடு வழிந்தது.

உளுந்தி கம்பீரமாக நிமிர்ந்தாள். மாணிக்கத்தை விழுங்கி விடுபவள்போல உற்றுப் பாரத்தாள். பிறகு, "உனக்கு இது இன்னும் சந்தேகமா, அத்தான்? இதுகருத் தானா இந்தக கேள்வி கேட்டே?" என்று கேட்டாள்.

மாணிக்கததுக்கு ஒன்றும் பதில் சொலலத் தெரியவில்லை. மந்திரத்தில் பாம்பு கட்டுப்படுமோ கட்டுப் படாதோ; 'மந்திரத்தில் கட்டுண்ட பாம்பு' போல அவன் நின்றான். சொல்ல முடியாத பரவசம் ஒனறு அவன் உள்ளத்திலே குறுகுறுத்தது.

"பொன்மானே எனப்பயந்தேன்;
புள்ளிமான் வசமாச்சு.
கண்பெற்ற குருடனைப்போல்
கணக்கிறந்த மகிழ்ச்சியுற்றேன்."

என்று பித்தனைப்போல் பாடினான். அவன் பட்டணத்துச் சினிமாவெல்லாம் பார்த்தவனல்ல. உளுந்தியை அவன் தொடவில்லை. கட்டியணைத்து முத்தமிடவும் இல்லை இந்த நிமிடந்தான் அவனுககு அவள் மிகவும் புனிதமாய்த் தோன்றினாள். தான் தொட்டுத் தாலி கட்டப்போகும் கட்டழகியல்லவா அவள்? துளியும் மாசு மறுவில்லாத கன்னியையே மணம்புரிந்து கைப்பிடிக்க வேண்டுமென்பது அவன் ஆவல். தன்னை மறந்து அவன் திண்ணையிலே உட்கார்ந்தான். உளுந்தி உள்ளே போய்விட்டாள்.

மாணிக்கம் சிறிது நேரத்துக்கெல்லாம் நிதானமடைந்தான். தன் நினைவு வந்தது. "ஏ, உளுந்தி!" என்று செல்லமாகச் கூப்பிட்டான்.

"ஏன்?" என்று கேட்டுக்கொண்டே உளுந்தி வெளியே வந்தாள்.

மாணிக்கம் அர்த்தம் இல்லாமல் சிரித்தான். அவளும் சிரித்தாள்

"அந்தப் பாம்பு.. " என்று என்னவோ சொல்ல ஆரம்பித்தான மாணிககம்

"ஐயோ! அது போகல்லே. அதுதான் எனக்குப் பயமாயிருக்குது" என்றாள் உளுநதி

"அந்த ரகசியம் உனக்குத் தெரியுமா? பிடாரன் அதைப பிடிககவே இல்லே" என்று புதிர் மாதிரி சொன்னான் மாணிககம்.

"பின்னே?"

"அவன் கிட்ட முன்னடியே ஒரு பாம்பு இருந்திருக்கிறது அதையே வீட்டுககுவீடு விட்டுப் பிடிச்சிருக்கான" என்றான மாணிககம.

இதை மாணிக்கம் எப்படிக கண்டுபிடித்தான்? ஊர்க் கோடியிலே உள்ள ஆலமரத்தடியில நேற்று மாலை அந்தப் பிடாரன தங்கியிருநதான அபபோது ஊாக குழந்தைகளுக்கு அவன் பாம்பாட்டி வேடிக்கை காட்டிக்கொண்டிருந்தான். குளத்தங் கரைக்குத் தலைமுழுகப் போன

மாணிக்கம் அதைக் கண்டான். பிடாரனிடம் ஒரே பாம்பு தான் இருந்தது. அதன் உண்மையை மாணிக்கம் விசாரித்தான். பிடாரன் முதலில் உண்மையைச் சொல்லவில்லை. வேட்டியும் காசும் கொடுத்து அவனைச் சிநேகம் பிடித்த பிறகு அவன் சொன்னான். மகுடி எடுத்து ஊதினால் எல்லாப் பாம்பும் சுலபமாக வெளியே வராதாம். பொந்தும் இருப்பிடமுமற்ற பழைய பாம்பு மட்டுமே, தான் அடையும் பெட்டியைத் தேடி வருமாம். பிடாரன் தன் பாம்பையே வீட்டுக்கு வீடு விட்டுப் பிடித்தானாம்.

"அப்படியா! ஊரையே என்ன களுதெப்புரளி பண்ணிப்பிட்டான் அந்தப் பிடாரன்!" என்றாள் உளுந்தி.

"ஆனால், பாம்பை வசியப்படுத்தற வேரை அவன் எனக்குக் கொஞ்சம் கொடுத்திருக்கான். ஓர் ஓலையைச் சுருக்குப் போட்டுக்கூடப் பாம்பு பிடிச்சிடலாமாம்; மந்திரமுமில்லெ, மாயமுமில்லெயாம். எல்லாம் தந்திரந்தான் வேணுமாம்" என்றான் மாணிக்கம்.

திறந்த வாய் திறந்தபடி இதையெல்லாம் ஆச்சரியத்தோடு கேட்டுக்கொண்டு நின்றாள் உளுந்தி. கடைசியில் சிரித்துக்கொண்டே, "அது கிடக்கு. எனக்கு நீ என்ன பரிசம் கொடுக்கப்போறே?" என்று கேட்டாள்.

"உனக்கு என்ன வேணும்?"

உளுந்தி தயங்கித் தயங்கி, "நிசம்மா உனக்குப் பாம்பு பிடிக்கத் தெரியுமா?" என்றாள்.

"தெரியும். பாம்பு ஏதுக்கு? மாலையா போட்டுக்கப் போறே?"

"இல்லே. நீதானே நாகரத்தினக் கதை சொன்னே. நம்ம வீட்டுப் பாம்பின் தலையிலே நாகரத்தினம் இருக்குமே. அதைக் கக்கவைப்பியா?"

"கக்கினா அது செத்துப் போவுமே."

"சாகட்டுமே."

"கொல்லாமெப் பிடிக்கணும். கொன்னு நாகரத்தினம் மாயமாப் போகும். கொல்லாமெப் பிடிச்சுக் கக்க வைக் கணும். கக்கினுச் செத்துப் போவும். இப்படித்தான் கதை யிலே வருது" என்றான் மாணிக்கம்.

"அது என்னமோ, எனக்கு நாகரத்தினம் வேணும்."

"ஐயோ பாவம்! பாம்பு செத்துப் போவுமே."

"ஓஹோ! உனக்குப் பயம். சும்மா வாய்வீரம் பேசறே!" என்று இகழ்ச்சியாகச் சொன்னாள் உளுந்தி.

மாணிக்கம் ரோஷம் கொண்டான். "அப்படியா நினைக்கிறே? இப்பவே இதோ பிடிச்சு வர்றேன் பார் பாம்பை" என்று எழுந்தான்.

"இந்தா, கஞ்சி காய்ச்சியாயிடிச்சு; கையைக் காலைக் கழுவிட்டு, கஞ்சி குடிச்சுப்பிட்டுப் போய்ப் பாம்பு பிடிக்க லாம்" என்றாள் உளுந்தி.

"வேணாம்" என்று பாய்ந்தெழுந்தான் மாணிக்கம்.

உளுந்திக்குத் தன்னை அறியாத ஏதோ ஓர் உணர்ச்சி யால், இருதயம் படபடத்தது. அவள் சிரிக்க முயன்றாள்; சிரிக்கவில்லை. மௌனமாய் வீட்டுக்குள்ளே சென்றாள்.

மாணிக்கம் முன்பின் பாராமல் துள்ளி நடந்தான்.

மல்லிகைப் புதரைக் கலக்கினான். அதற்கடியிலே யிருந்த பாழையெல்லாம் குச்சியால் குடைந்தான். கடைசியில் சர்ப்பம் சீறிக்கொண்டு வெளியே வந்தது. புஸ் என்று படமெடுத்துத் தலையைத் தூக்கி ஆவேசமாய் வந்தது. கையில் இருந்த வேரை நீட்டினான் மாணிக்கம். பாம்பு அதை லட்சியம் செய்யவில்லை. சொடேர் என்று அவன் கையைக் கொத்திவிட்டது.

மாணிக்கமும் விடவில்லை. அந்த நிமிஷமே அதைத் தடியால் அடித்துக் கொன்றுவிட்டான்.

வீட்டுக்குள்ளே இருந்த உ ளு ந் தி க் கு இதெல்லாம் தெரியாது. அவள் மனத்திலே ஒரு குதூகலம் பொங்கி யது. ஆனால், அது தூய குதூகலமாயில்லை; ஒரு வேதனை யும் அதிலே கலந்திருந்தது. அகப்பையால் கஞ்சியைக் கிளறி விட்டுக்கொண்டே, பானையில் கொந்தளித்த குமிழி களைப்போல் ,தன் மனத்திரையிலும் பல எண்ணங்கள் குமிழியிடத் துரிதமாய் வேலை செய்து கொண்டிருந்தாள். 'இதோ மாணிக்கம் மாணிக்கத்துடன் வந்து சேர்ந்து விடு வான்' என்று ஒரு விநாடி எண்ணினாள். அந்த நேரத்தில் அவள் காதிலே ஓர் ஓலம் கேட்டது.

" ஏ, உளுந்தி ! இனி நான் உன்னைத் தொட்டுத் தாலி கட்டப் போவதில்லை. என் விதி மு டி ந் த து. இப்போது கொடு ஒரு முத்தம்; ஒரே ஒரு முத்தம்!" என்று கூச்சலிட் டான் மாணிக்கம்.

உளுந்தி அ ல றி ப் புடைத்துக்கொண்டு, " என்ன என்ன !" என்று அரற்றியபடி ஓடிவந்தாள்.

இதற்குள்ளே மா ணி க் க த் து க் கு த் தலை சுழன்றது; கண் இருண்டது; கால்கள் தள்ளாடின. அவன் சுருண்டு விழுந்தான். பக்கத்திலே பாம்பு மாண்டு கிடந்தது.

உளுந்தி அவனைக் கையிலே வாரியெடுத்துத் தூக்கித் தோளிலே சா ர் த் தி க் கொண்டாள். திண்ணையிலே கொண்டுவந்து கிடத்தினாள். ஓலமிட்டாள்; கதறிப் புலம் பினாள். " ஐயோ ! மாணிக்கம்! என் ராசாவே! நாகமணி கேட்டேனே, பாவி! நாகமணி கேட்டு, என் சீவமணியை-மாணிக்கத்தை - இழந்தேனே! புத்தி கெட்ட நான்தான் கேட்டேன். நீயும் அதை ஒப்புக்கொள்ள வேணுமா? ஐயோ! என்னை மோசம் செய்தாயே! மாணிக்கம்! மாணிக் கம்!" என்று கதறினாள்.

மாணிக்கம் போய்விட்டான். மனைப் பாம்பு போய் விட்டது. மல்லிகை அரும்புகள் மதிப்பாரற்று மலர்ந்து புதரிலேயே வாடி உதிர்ந்தன. மனைப் பாம்பு போய்விட்

டது. ஆனால், இன்று உளுந்தியே அந்த வீட்டின் மனைப் பாம்பாகி விட்டாள். எந்த வாலிபனும் அந்த வீட்டை அண்ட முடியாத நாகமாகிவிட்டாள். கன்னி கழியாமலே பல வருஷகாலம் அவள் வாழ்ந்துவிட்டாள். ஆனால், அவளைக் கேட்டால், தான் கன்னி கழியாதவள் என்று அவள் ஒப்புக் கொள்வதில்லை; 'கட்டுக்கழுத்தி' என்றே இன்னும் சொல்கிறாள்.

**திருலோக சீதாராம்** | # மூலப்பிரதி

முன்பொரு பாடல் எழுதினேன் - அந்த
மூலப்பிரதி கைவசம் இல்லை - முழுதும்
நினைவு வருவதும் இல்லை

(முன்பொரு)

எழுதிய பாடல் ஒன்றினை வீட்டின்
எரவாணத்தில் செருகி யிருந்தேன்
பழுது வந்தது; பார்த்தி ருந்தவர்
பாடலை எடுத்துப் பதுக்கிக் கொண்டார்

(முன்பொரு)

இன்பம் என்றொரு தலைப்பிட் டந்த
இனிய பாடலை எழுதிய நினைவு
துன்பம் வந்து சூழும் போது
துணைசெயக் கூடும் தொலைந்துபோ யிற்று

(முன்பொரு)

வாய்மை யென்றொரு வாசகம் வைத்து
வண்ணப் பாடலை எழுதிய துண்டு
பொய்மை இருளில் பொன்விளக் காகும்
பொக்கென மறைந்து போயிற் றென்செய?

(முன்பொரு)

வெற்றி யென்றொரு விளக்கம் தந்து
வீரியச் சொல்லை விளம்பிய துண்மை
முற்றும் தோற்று விட்டபோ தெனக்கு
மூளும் நற்றுணை முழுதும் காணேம்
(முன்பொரு)

இருந்த இடத்தில் இருந்த படியவ்
இனனிசை கேட்டே இருந்தேன் இங்கு
வரும்போ தெனக்கு வழித்துணை யாக
வந்தது இடையில் வழிப்பறி போக
(முன்பொரு)

ஏட்டுப் பிரதியை எடுத்தவர் தந்தால்
இனிய பாடலைக் கற்றவர் சொன்னல்
காட்டில் இருளைக கடநதிட லாகும்
கருணை செய்தவர் ஆவீர் ஐயா !

முன்பொரு பாடல் எழுதினேன் - அந்த
மூலப்பிரதி கைவசம் இல்லை - முழுதும்
நினைவு வருவதும் இல்லை.

# பாரதியின் அக்கினிக்குஞ்சு

சி. சு. செல்லப்பா

அக்கினிக் குஞ்சொன்று கண்டேன் — அதை
அங்கொரு காட்டிலோா பொந்திடை வைத்தேன்
வெந்து தணிந்தது காடு — தழல்
வீரத்திற் குஞ்சென்று மூப்பெனறு முண்டோ
தத்தரிகிட தத்தரிகிட தித்தோம. — பாரதி

பாரதி கவிதைத் தொகுப்பைப் புரட்டிப்பார்த்த அளவில இதுதான் அவரது கவிதைகளில் சின்னது என்று எனககுப் படுகிறது. பொருள் உணர்த்தும் சொற்களால் ஆன நாலு வரிகளும், இசைகரு உரிய ஓசையை மட்டும் எழுபபி ஒலிப்பதோடு நின்றுவிடுகிறதாகப் படும் — தாளக் கட்டுககு உதவும் — அட்சரச் சேர்க்கையான சொற்கள் அடங்கிய ஒரு வரியும் சோநது ஐந்தே வரிகள். இந்த ஐந்து வரிக் கவிதை ஒரு தடவை படித்த மாத்திரத்திலேயே அர்த்தத்தை அப்பட்டமாக வெளியே பிதுக்கித் தள்ளி விடுகிறது பாரதி இந்தக் கவிதையில் என்ன சொல்ல முற்பட்டிருக்கிருன் எனறு மூளையைக் குடைந்து பார்க்கும் சிரமத்துக்கு அவசியமே இல்லை என்று பளிச்சென நமக்குத் தோன்றுகிறது. அவ்வளவு ரொம்ப அப்பட்டமான தகவல் இதில் கிடைப்பது. கருத்து மட்டும் இல்லை; சொற்களும் நமது பேச்சு வழக்கில் சகஜமாக அடிபடுபவை. லேசான கருத்து கடினமான சொற்களுள் திணிக்கப்பட்டு, 'மலை கெல்லி எலி பிடிக்க'ச் செய்யும் ஒரு சாதுர்யம், சாமர்த்தியம், எல்லாம் பாரதி காட்டவில்லை.

இந்தக் கவிதை என்ன சொல்கிறது? ஒரு தணல் துண்டை எடுத்து மரப்பொந்துக்குள்ளே வைத்தான் ஒரு மகாபுத்திசாலி. வைக்கிறபோது அதன் விளைவை ஊகிக்க இயலவில்லை. அவ்வளவுதான்; காடே வெந்துபோய் விட்டதைக் காண்கிறான். அதைக்கண்ட பிறகுதான் அவனுக்கு ஞானோதயம் ஏற்படுகிறது. நெருப்பின் உக்ரத்தில் குஞ்சாவது பெரிசாவது? மகா உண்மை ஒன்றை கண்டுபிடித்து விடுகிறானல்லவா? கைகொட்டி குதிபோடுகின்றான், தன் புத்திசாலித்தனத்தைத் தானே வியந்து கொண்டு. உள்ள அர்த்தத்தை சொல்லப்போனால் இவ்வளவுதான்.

இந்தக் கருத்து ரொம்ப குழந்தைத்தனமான ஒரு காரியத்தையே காட்டுகிறது. அதோடு அப்பாவித்தனமான ஒரு மனநிலையையும் சேர்க்கிறது. இன்னும் வெகு சாதாரண புத்தி தரத்தையும் காட்டுகிறது. கவிதையைப் படித்ததும் கொள்ளிக் கட்டையை கூரையில் சொருகி வைத்த சிறுவன் கதையும், நெய்க்கு தொன்னை ஆதாரமா தொன்னைக்கு நெய் ஆதாரமா என்று பார்த்த சிஷ்யன் கதையும்தான் ஞாபகம் வருகிறது. ஒரு பேதைத் தன்மையை காட்டுவதற்குமேல் இநத கவிதையில் நமக்கு வேறெதுவும் புலப்பட ஏது இல்லை. முதல் தடவை படித்ததில், ஆழ்ந்த, பொருட்படுத்தத்தக்க ஒரு கருத்தை, பேருண்மையை, அதிலிருந்து நாம் வாங்கிக் கொண்டதான ஒரு உணர்வு நமக்கு ஏற்படவே இல்லை. சாமான்யமாக யாருக்கும் தெரிய வந்திருக்கும் ஒரு உண்மையை (ட்ரூயிஸம்) ஏதோ 'நகாசு' பண்ணி சொல்லி இருக்கு என்று பக்கத்தை புரட்டத் தோன்றுகிறது. பாரதி கவிதைகளில் எத்தனையோ பிரமாதமான கவிதைகள் இருக்க, இதை ஒரு பெரிசாக சொல்ல என்ன இருக்கு என்று படுகிறது.

இந்த கவிதையின் உள்ளடக்கத்தை மேலோட்டமாக உணர முடிந்த வரையில், இந்த அபிப்பிராயம் சரிதான். 'ஊழிக்கூத்து' எழுதிய பாரதிதான் இதையும் எழுதி இருக்கிறான். ஒரு கவியின் எல்லா கவிதைகளும் ஒரே

தரமாக இருக்குமா? இருக்கவேண்டும் என்று எதிர்பார்க்க முடியுமா? என்று கேட்டுக்கொள்கிறோம். நம் அளவுக்கு அது சரி. ஆனால், பாரதி இந்தக் கவிதையை எழுதிய போது இவ்வளவு சாமான்யமான ஒரு கருத்தை வெளியிடவா உத்தேசம் கொண்டிருந்தான்? கவிதையிலே ஏற்றிவைக்கத்தக்க சத்தும் மதிப்பும் இதுக்கு இருக்கா? அதை அவன் உணர்ந்து செய்ததா? இல்லை...அவன் உத்தேசம் வேறு எதுவும் இருந்திருக்காதா?- என்று நம்மைக் கேட்டுக்கொள்ளத் தோன்றுகிறது.

கவிஞனின் உத்தேசம் இதற்குமேல் இதில் இல்லை என்றால் இந்தக் கவிதையை அற்பமானது என்று நிச்சயமாகத் தள்ளிவிடலாம். நெருப்பு சுட்டெரிக்கும் என்கிறதை நமக்குச் சொல்ல ஒரு கவி, இன்னும் ஒரு 'மகா கவி' தேவை இல்லை. யதார்த்தத்தை அனுபவத்திலேயே உணர்ந்துவிடலாம். ஆகவே, இந்த கவிதையில் பாரதியின் உத்தேசம் (இன்டன்ஷன்) அடிப்படையாக என்ன இருக்கிறது என்று பார்ப்பது வாசகக் கடமை ஆகிறது.

நெருப்பு, காடு, மரப்பொந்து ஆகிய தூலப் பொருள்களும், பொந்தில் தணலை வைத்தல், காடு வெந்து தணிதல் ஆகிய தூல நிகழ்ச்சிகளும் அடங்கிய இந்த கவிதை யதார்த்தமாக நிகழ்ந்த ஒரு சம்பவத்தை அடக்கி ஒரு அறிவுரையையும் சேர்த்து, தகவலை வெளித் தெரிவிக்கிறது. ஒரு காரியம், அதன் விளைவு, அதனால் தெரிய வந்தது—இது தெரிகிறது. ஒரு கலைஞன் தன் படைப்புக்கு வேண்டிய ஒரு விஷயத்தை தேர்ந்தெடுத்துக் கொள்கிற போது, ஒரு குறிப்பு இல்லாமல் எடுத்துக்கொள்ள மாட்டான். கலைப்படைப்பு என்றால் அதற்கு ஒரு அர்த்தம் தேவையே யில்லை என்று எந்த படைப்பாளியும் சொல்ல மாட்டான்; ரசிகனும் க்ருதமாட்டான். ஆகவே, "சிக்னிஃபிகன்ஸ்" என்று சொல்கிறோமே, ஒரு அர்த்த முக்யத்வம், அது அத்யாவசியமானது, இந்த அர்த்த முக்யத்துவம் படைப்புக்குப் படைப்பு, படைப்பாளிக்குப் படைப்பாளி, உள்ளடக்கத்தில், பார்வையில் மாறுபடலாம். ஆனால்,

அந்த தன்மை இன்றியமையாதது. பாரதி இந்த தன்மையை தன் கவிதையில் எப்படி ஏற்றி இருக்கிருன் என்று பார்க்கப்போனுல், மேலே நாம் பார்த்த அப்பட்டமான உள்ளடக்கத்திலிருந்து அந்தத் தன்மை என்று குறித்துச்சொல்ல முடியாது என்று சொல்லத்தோன்றும்.

ஆனுல, பாரதி இந்த கவிதை மூலம், அதிலே நமது முதல் தடவை படிப்பில் கிடைத்ததுக்குமேல் அடங்கிய அாத்த முகயத்வம ஏற்றி இருக்கிருன என்பதை இரண்டாவது தடவை வாசிப்பில் உணரமுடிகிறது. தீக்கஙகு அலலது நெருபபுத துண்டு என்பதுக்குபதில் அககினிககுஞ்சு எனறு பாரதி உபயோகிததிருககும் முதல் சொல் பிரயோகமே அர்தத முகயதவததை ஏறற ஆரம்பிககிறது. ஒரு உயிர்பபொருளாக அதை உருவகிதது இருக்கிருன. தனுத்மகமாக இயங்கும் சகதியுளள ஒரு குறியீடாக (சிமபல்) படுகிறது அநத சொல்மூலம் பாரதி வேறு ஏதோ ஒருஉள்ளடகக நிலையையும், அதே சமயத்தில்—அதாவது கவிதையை படிககும்போது உடனடியாகப் படுகிற, ஒரு துலககமான அர்த்ததகை நாம உணருகிற அதே சமயத்தில—கூடவே உணர்தத திட்டமிடுகிருன. தொடர்ந்து காடு, பொந்து. நெருப்புத்துண்டை எங்கேயும் வைக்கலாமே. காட்டைப் பற்றிய பிரஸ்தாபம் ஏன்? பொந்துக்குள் ஏன் வைக்கவேண்டும? இந்த காடு, பொந்து இரண்டுமே வேறு எதையோ குறிப்புணர்த்துவதாக இருக்கலாமே ?

அக்கினிக்குஞ்சு ஒரு குறியீடாக இருப்பதானுல், எந்த வேருெரு பொருளின் தன்மைகள் அதில் தொனிக்கின்றன? அக்கினி, அககினிக்குஞ்சுக்கு என்று உரிய தன்மைகள்தான் என்ன ? இதெல்லாம் நமக்குள் உளேகிறது. அக்கினி ஒரு அழிப்பு சக்தி என்பது நமக்குத் தெரியும். அது மாதிரியான வேறு ஒரு அழிப்பு சக்தியை பாரதி குறிப்புணர்த்துகிருரா? அப்பாவித்தனமாக அதை காட்டில் ஒரு பொந்தில் வைத்த மாதிரி (பின்னுல் 'வெந்து தணிந்தது காடு, வீரத்திற் குஞ்சென்று மூப்பென்று முண்டோ' என்று புதுசாக கண்டறிந்த படிப்பினை பெறுவதால் வேண்டுமென்றே அழிக்க

வேண்டும் என்ற நோக்கத்துடன் அதைச் செய்யவில்லை, விளைவை யூகிக்க இயலாமல் செய்த பேதமைக் காரியம் என் பது தெளிவு) விபரீதமான ஒரு விளைவைத் தந்த ஒரு காரி யத்தை குறிப்பிடுகிறுரா? வெந்துதணிந்தது காடு என்பது போல் அழிந்த வேறு ஒரு விளைவை காட்டுகிறுரா? கண் கெட்டுப் போனபின் சூரிய நமஸ்கார யோசனை செய்பவ ஞக, தன் காரியத்தின் தன்மையை திடீர் விழிப்பு பெற்றவ ஞக உணர்கிற நிலையைக் காட்டுகிறுரா?

இந்த கேள்விகள் எல்லாம் இந்த கவிதையில் ஒரு யதார்த்த தரத்திலே நமக்கு உணாத்தப்பட்ட சாமானய உணமைக்கு மேலாக ஒரு குறியீடடுத் தரத்திலே கூடார்த்த தரத்திலே பாரதி எதையோ உணாதத உததேசிககிறுன் என்ற கருத்து நமககு விழ வகை செய்கினறன. இந்த இடத்தில் 'சிமபாலிஸம' குறியீட்டு வாததவதை, கூடாாதத வாதத்தைப் பற்றி கொஞசம விளககிக கொள்ள வேண் டும். ஏனென்றுல, இது ஒரு 'சிமபாலிக' கவிதையாக இருக்க கூடும் என்ற ஒரு நினைப்பு நிழல்தட்ட ஆரம்பிக்கிறது. உன் னதமான தலைசிறநத ஒரு யதார்த்ததத்தை, உணமையை தேடிப் போவது என்பது சிம்பாலிஸததில புதைநதிருக்கும் பொருள். இந்த ஞானப் பாாவையை நேரடியாக வெளி யிடுவது கலையில் சாத்தியம் இலலை என்பதை ஏற்றுக் கொண்டு, லௌகீக உலகத்திலே அதுக்கு இசைவாக இருப் பவைகள் மூலமே குறிப்புணர்த்தி, எணணம் எழுப்ப முடி யும் என்று காட்டுவது. இதை ஒப்புவமை மூலமும் குறியீ டுகள் (சிம்பல்) மூலமும்தான் நிறைவேற்ற முடியும்.

ஆகவே, குறியீடுகள் கவிதைக்கு ஒரு தலைசிறந்த அம் சப் பொருளாக ஆகின்றன. சொற்களால் தக்கபடி விளக்க முடியாமல் போகிற கருத்துக்களை இந்த குறியீடுகள் மூலம் குறிப்புணர்த்தவே அவை கையாளப்படுகின்றன. ஏனென் ருல் இந்த குறியீடுகள் தங்களுக்குள் அடக்கி இருக்கும் பல் வேறு தனித்த, கூட்டுக் கலப்பான விசேஷ குணங்களை எல் லாம் உடனடியாக தோற்றுவைக்கும் ஒரு போஷாக்கும்

சக்தியும் பெற்றவைகள். குறியீடுகளை, சங்கேதப் பொருள்களை உபயோகப்படுத்தி விட்டதாலேயே ஒரு கவிதை 'சிம்பாலிக்' கவிதையாக இருக்கவேண்டும் என்பதில்லை. இந்த குறியீடுகளைக் கொண்டு கவிதைக்குள்ளே இருக்கும் ஒரு யதார்த்தப் பொருளை பின்பற்றி, அதுக்கு ஒப்பான ஒரு உன்னதப் (நோடில்) பொருளை உணர்த்த, உணர சாத்யமாகிற போதுதான் அது 'சிம்பாலிக்' தன்மை வாய்ந்ததாக ஆகிறது.

இது ஒரு கூடார்த்தக் கவிதை என்றால் என்ன கூடார்த்தம் இதுக்குள்ளிருந்து நாம் அனுமானிக்க முடிகிறது? அக்கினிக்குஞ்சு ஒரு சின்ன நாசசக்தி. அதுமாதிரியான ஒரு நாச சக்தியை–சின்ன தீய எண்ணத்தை, அதன் உண்மை சொரூபம் சக்தியை உணராத நிலையில், தன் உடம்புக்குள் (காடு) தன் நெஞ்சுக்குள் (பொந்து) புகவிட்டுவிட, தானே முழுக்க அழிந்து விடுகிறான். அப்புறம் அவனுக்குப் படுகிறது: தீயதில் அளவு பெரியதில்லை; கடுகு அத்தனை தீயது மலை அத்தனை நாசம் விளைவிக்கும் என்பது. எனவே, பாரதி இந்த பேருண்மை உணர்த்தலை தன் உத்தேசமாகக் கொண்டிருக்கிறான், இந்த கவிதையில். சரிதானே? அதை அப்பட்டமாக தத்துவத் தகவலாக ஒரு தத்துவாசிரியன் வெளியிடலாம். கலைஞன் அதை அழகாகச் சொல்ல வேண்டியவன். கவிதை ஒரு அழகு வடிவம். இந்த அழகாகச் சொல்வதே இந்த கவிதையில் நாம் காண்பது. சொல்லாமல் சொல்லுதல் — கூடார்த்த கவிகளின் கவிதா தத்துவம். கவிதை எதையும் தெளிவாக, அப்பட்டமாக விளக்கி விடக்கூடாது. தூலப் பொருள்மூலம் சூக்குமப் பொருளை உணர்த்துவது.

இப்போது ஒரு நிலையிலிருந்து — அதாவது அக்கினி ஒரு அழிவு சக்தி என்ற நோக்கிலிருந்து நாம் பார்த்தோம். கவிதையின் உள் அர்த்தம் (இம்போர்ட்) நமக்கு யூகிக்க முடிந்துவிட்டது. அக்கினிக்குஞ்சு ஒரு ஆக்கசக்தி என்ற நிலை எடுத்துக்கொண்டால்? அக்கினி ஒளிதருவது. அதுமட்டுமல்ல, சுத்திகரிப்பு வேலை செய்வது, புடம் போடுகிறோமே அதுபோல என்று சொல்லலாம். 'அக்கினிக்குஞ்சை தன்

நெஞ்சுக்குள் வைக்க 'வெந்து தணிந்தது' காடு? காடுதானே வெந்து தணிந்தது. 'அக்கினிக்குஞ்சு' குறியீட்டின் வேறு வித குணங்களை முன்வைத்துப் பார்க்கிறபோது, காடும் இப்போது வேறுவித குணங்களை முன்னுக்குப் பிதுக்கிக் கொண்டிருக்கிறதை நாம் உணர்கிறோம். அப்போது நாம் காடு என்றால், நிறைந்து, செழித்து, பரந்து, சுதந்திரமாக வியாபித்து நிற்கும் ஒரு பொருளாக (வாழ்க்கை, உடல்) இருககக்கண்டோம். இத்தன்மைகளுக்காக அதுக்கு மதிப்பு கொடுத்து, அது நாசமாக்கப்பட்டு விட்டதே என்று நினைத்தோம். இப்போது அதே 'காடு' நமக்கு ஒரு முறையில்லா மலும் தன்னிச்சையாயும்வளர்ந்து,ஆபத்துக்களை உள்ளடக்கிய, இருண்ட, நுழைய பயமுறுத்துகிற, நாட்டுக்கு எதிர்ப்பான, மனித வாழ்வுக்கு பயன்படாத தன்மைகளைகொண்ட நாம் விரும்பாத ஒன்றாகப் படுகிறது. கவிதைகள் 'அக்கினிக்குஞ்சு' போலவே இந்த 'காடு' குறியீடும் இயல்பு மாறி தொனிக்கிறது. இதனால் கவிதையின் தொனி பாதிக்கப் படுகிறது. சுத்தப்படுத்தும் ஆக்க சக்தியுள்ள ஒன்றை, ஞான ஒளியை (அதுவும் அவன அறிந்து செய்ததாக சொல்வதற்கில்லை; விளைவிலிருந்துதான் உணர முடிந்தது) தனக்குள் புகவிட்டதும், தன்னுள் இருந்த இருள், அஞ்ஞானம் (காடு) விலகி தனக்கு சாந்தி ஏற்பட்டதை உணர்கிறான். 'தணிந்தது' என்பதை விசேஷமாக கவனிக்க வேணடும். முதல் நிலையில், முழுக்க வெந்து போனபிறகு தணியாமல் என்ன செய்யும்? மேற்கொண்டு எரிக்க எதுவும் இல்லையே என்ற அர்த்தத்தில் இடம் பெற்றிருக்கிறது. இப்போது தணிந்து விட்டது ஒரு மட்டுக்கு; இனி எனக்கு நிம்மதி எனகிற மனப் பாங்கை காட்டுவதாக இருக்கிறது. 'வெந்து எரிந்தது' என்று சாதாரணமாக சொல்லி இருக்கலாமே கவிஞன்.

'தணிந்தது' போலவே 'வீரம்' என்ற வார்த்தையும் இந்த இரண்டு நிலைகளுக்கும் அர்த்தஈடு கட்டுகிறது. அழிவு சக்தியான 'வீரம்' (விஷமருந்து) என்றது பொருத்தம் தானே? ஆக்கசக்தியான இடத்தில் அதை 'வீரம்' என்று சிலாகித்ததும் பொருத்தம்தானே?

இதற்கெல்லாம் சமாதானம் சொல்லிவிட்ட பிறகு கடைசி வரிக்கு வருவோம். 'தத்தரிகிட தத்தரிகிட தித் தோம்!' பாரதி எதுக்காக இந்த இசைப்பதங்களை போட் டான்? அப்படியாவது இந்த கவிதை அவரது வேறுபல கவிதைகளை, பாடல்களைப் போல் இசைக்குப் பொருந்த திட்டமிட்ட ஒன்ரு? இசை ஒத்திசைவுக்கும் தாளத்துக்கும் இட்டு நிரப்பும் ஒரு வரியாக அமைந்தது என்று சொல்ல? நிச்சயமாக இல்லை. இது 'வெர்ஸ்லிப்ரே' என்ற, புதுக் கவிதை என்கிற ரகத்தைச் சேர்ந்ததாக அல்லவா இருக்கி றது. சம்பிரதாய முறை உருவமாக இல்லையே? அப்படி இருக்க இந்த பொருள் எழுப்பாது ஒலிமட்டும் கிளம்பும் பதங்கள் எதுக்கு? கவிதையில் என்ன 'தீர்மானம்' கொடுக்க இது பயன்படுத்தப் பட்டிருக்கிறது?

நாலாவது வரியுடனேயே கவிதை உருவ நிறைவு பெற்றுவிடுகிறது. வியப்பில் ஆழ்ந்த ஒரு கேள்விநிலை உச்சக்கட்டமாக அமைந்து இருக்கிறது. கவிதையின் உள் ளடக்கமும் முழுமை பெற்றதாக ஆகி இருக்கிறது. 'தத் தரிகிட...தித்தோம்' திடீரென்று வெடித்துக் கிளம்புகிற மாதிரி இருக்கிறது.

> 'திக்குக்க ளெட்டும் சிதறி —
> தீம் தரிகிடதீம் தரிகிடதீம் தரிகிட
> பக்க மலைகளுடைந்து — வெள்ளம்
> பாயுது பாயுது பாயுது — தாம்தரிகிட
> தக்கத் ததிங்கிட தித்தோம் — அண்டம்
> சாயுது சாயுது சாயுது — பேய்கொண்டு
> தக்கையடிக்குது காற்று — தக்கத்
> தாம தரிகிடதாம் தரிகிடதாம தரிகிடதாம்.'

என்று தக்கை ஒலிகளை சொல்லுருவில் கொடுத்து, கவிதை யின் அமைப்பு, தொனி, பொருள், இதுக்கெல்லாம் நல்ல வளமும் வலுவும் தரும்படியாக இந்த மாதிரி பதங்களை வியக்கத்தக்க விதமாக அமைத்திருக்கிருர். அந்த கவிதை யில் அடங்கியுள்ள தூலத் தகவல்களுக்கு அவைகள் தங்கள்

ஒலி நிலையிலேயே இழையோட்டமாக அர்த்தம் சேர்க்கின்றன.

ஆனால், இந்த கவிதையில், நிறைவுக்குப்பிறகு ஏதோ ஒட்ட வைத்தமாதிரி வருகிறதாக முதலில் படுகிறது. ஆனால் இரண்டாவது வாசிப்பில் 'மழை' கவிதையில்போல இங்கும் அது தொனி ஏற்றுகிறதை உணர முடிகிறது. வீரத்திற் குஞ்சென்று மூப்பென்று முண்டோ, என்று புத்தி பூர்வமாக உணர்ந்த ஒரு அதைப்பு (ரியாக்ஷன்) எவ்வளவு ஓங்கி வெளித்தெரிகிறது! அந்த அதைப்பு என்ன விதமானது? வியப்பு நிலையில் அதிக நேரம் நிலைக்க முடியாது. அந்த நிலையும் அப்படி பயனுள்ளதல்ல; மதிப்புள்ளதல்ல. அப்போதைக்கு ஏற்பட்ட ஒருநிலை. அதிகம் நீடிக்கவும் சக்தி இல்லை அதுக்கு. எனவே, மனநிலை மாறுதல ஒரு தீர்மானத்தை நோக்கி, அந்த தீர்மானம் இதில் தெரிகிறது. ஒரு மனக்கிளர்சசி, 'புல்லரிப்பு', இறுதியாக களிப்பு ஏற்பட்ட நிலை, அந்த களிப்பைக் காட்டும் ஒரு சமிக்ஞை. 'தத்தரிகிட தத்தரிகிட தித்தோம்' ஒரு பேருண்மையை தன் அனுபவத்தில் உணர்ந்து விட்டதான அர்த்தம் கொடுக்கும் பூரிப்புக் குரல் அது.

கவிக்கு, உண்மை தேட்டம்தான் நோக்கு. அது ஒரு அழிவு சக்தியின் செயலால் தெரிய வந்ததானலும சரி, ஆக்க சகதியின் காரியத்தால் புலனுனலும சரி, அந்த வித்யாசம் அவனுக்கு கவலையில்லை. உணமை, உடனபாடான வழியிலும் தெரிய வரலாம்; எதிர் மறையான வழிமூலமும் உணர முடியலாம். உண்மை அறிதல்தான் நோககம்; சாதனையும்கூட.

மேல நாடுகளில் புதுக்கவிதை முயற்சியில இந்த நூற்ருண்டில் இறங்கிய கவிகள் தம் கவிதைகளில் இந்தவிதமாக உருவான வார்த்தைகள் மூலம் பொருள் அடங்காத, ஒலி கிளப்பு அட்சரச் சேர்க்கையான பதங்களை தங்கள் கவிதைகளில் வரியேற்றி கவிதையின்தொனியை புதுசுபடுத்தி, உள்ளடக்கத்தை தீவிரப்படுத்தி, உக்ரப்படுத்தி எல்லாம் செய்திருக்கிருர்கள். பாரதி அதெல்லாம படித்துப் பார்த்து

செய்யவில்லை. புதுக் கவிதை முயற்சி அவன் காலத்துக்குப் பிறகுதான் தீவிரம் பெற்றது. பா ர தி க் கு வால்ட் விட்மன் தெரிந்திருக்கலாம். இலியட்டோ, பவுண்டோ, லா போர்க்கோ (ஃபிரஞ்சு கவி) தெரிந்திருக்காது நிச்சயமாக. இருந்தாலும் பாரதி புதுக்கவிதை செய்தவன். இன்றைய தமிழ் புதுக்கவிதை தலைமுறைக்கு அவன் முன்னோடி. இது, இன்னும் ஆராய வேண்டிய விஷயம். இருக்கட்டும்.

இந்த ஆய்வை முடிக்குமுன் இன்னொரு விஷயத்தையும் குறிப்பிட்டாக வேண்டும். அதுதான், கவிதைக்கும் இசைக்கும் உள்ள உறவு, கவிதையில் இசையம்சம் இயற்கையாக அமைந்திருப்பதுதான். ஆனால் அடிநாதமாகத்தான் ஓடும். கவிதையை அமுக்கி, மெலெழுந்து ஒலிக்காது. அப்படி ஒலிக்கும் உருவம் பெற்றதுக்குப் பெயர் 'பாட்டு'. பாரதி பாட்டுக்களும் பாடி இருக்கிறார், இசையை முதன்மையாக வைத்து. அவைகள் கவி பாரதிக்கு சம்பந்தப்படாதவை; சாகித்யகர்த்தா பாரதி சம்பந்தமானவை. இந்த இரண்டையும் குழப்பி, சுளகில் போட்டு, பாரதியை புடைத்துப் பார்க்க வேண்டாம். கவி பாரதியை ம ட் டு ம் எடுத்துக் கொள்வோம்.

இசைத்தன்மை கவிதைக்கு இன்றியமையாதது — ஏன் முதன்மையானது என்றுகூட ஃபிரஞ்சு 'சிம்பாலிக்' கவிகள் அடித்துச் சொல்லி இருக்கிறார்கள். ஆன்மீக கருத்துக்களை வெளிச்சொல்ல இசைக்கு சக்தி அதிகம். ஒரு மனநிலையை (ஸ்டேட் ஆஃப் மைண்ட்) எழுப்பக்கூடிய சக்தி இசைக்கு உண்டு. அந்த தன்மையை கவிதையில் ஏற்ற வேண்டும். அதுக்காக முறைகளை கையாள வேண்டும் என்று வலியுறுத்துகிறார்கள். வெறுமனே மெட்டு, தாளம், ராகம் என்ற கருத்தில் சொல்லவில்லை. அவர்கள் சொ ல் லி இருப்பது இருக்கட்டும். நமக்கு அது புதுசு இல்லையே. மரபுவழியாக வந்துள்ள கருத்துதானே. பாரதி கவிதைக்கு வேண்டிய இசைத்தன்மையில் திடமான நம்பிக்கை வைத்தவன். அவன் அமைத்த சொற்களும், சொல் சேர்க்கைகளும், வரிகளும் இதை நிரூபிக்கும். ஆனால் பாரதி அபாயக்கோட்டை

பலதடவை தொட்டு கீழே விழுந்துவிட்டான். மட்டுமீறி செய்துவிட்டதன் விளைவை நன்ருக அனுபவிக்கிருன். எத்தனை இடங்களில் தொய்வைப் பார்க்கிறேம். ஆனல் அளவு அறிந்து கலந்து இருக்கிற இடங்களில் 'கடல் வீரத்திரை கொண்டு விண்ணையிடிக்குது'' என்கிற மாதிரி நல்ல உயரத்துக்கும் போயிருக்கிருன். பாரதி செய்தானே என்று இன்று கவிதையையும் இசையையும் குழப்பி அடிக்கும் கவிக்காளான்கள்தான் இன்று தமிழ்க் கவிதை உலகில் அதிகம். கவியரங்கங்களும், 'ஆண்டு மலர்'களில் கவிதைப் பக்கங்களும்இதைத்தான் நிரூபிக்கின்றன.

ஆக, அக்கினிக்குஞ்சு ஒரு 'சிம்:பாலிக்' கவிதை. 'மெடஃபிஸிகல்'கவிதையல்ல. 'டைடாக்டிக்' என்றுகூறமுடியாது. அறிவுபூர்வமான உள்ளடக்கத்தை திரைமறைவில் வைத்து உணர்ச்சி பூர்வமான ஒரு மன எழுச்சியூட்டும் வகையாக வெளிக்கு ஏதோ ஒரு வர்த்தமானத்தை சொல்வதுபோன்ற (ந்நரேடிவ்) பாங்கில் கற்பனையில் உருவான ஒரு கவிதை. ஒரு நல்ல கவிதை — அது ஸ்பஷ்டமாக உரைப்பதுக்கு (ஸ்டேட்)மேலாக மேற்கொண்டு சூசனையாக குறிப்பிடுதலை (ஸஜஸ்ட்) தன் இயல்பாகக் கொண்டிருக்க வேண்டும் — என்ருல், இது ஒரு நல்ல கவிதைதானே ?

## பருவ மழை

சாலிவாஹனன்

பகலில் இரவமைதி
பாலைவனப் பொட்டல்வெளி
நிழலுக்குப் பச்சையில்லை
நீருக்கோர் புகலில்லை
வெகுயுகத்துப் பெருவாழ்வை
வேண்டா தொதுக்கி வைத்து
வகைவகையாங் கம்பங்கள்
வாழ்வான கைத்திறங்கள்
சொல்லிசைத்து வாக்கியமாய்
ஜோடித் தெழுப்பியதாம்
கல்லடுக்குத் திருப்பணிகள்
காலாயிரச் சபைகள்
எல்லாம் புதைந்து மண்ணில்
ஏடாகிக் கொண்டிருக்க
செந்நெல் வனத் திறைவன்
ஜெயவல்லி தரிசனத்தாய்
பாழாகிப் பாழாகிப்
பெரும் பாழே யாகிவிட்ட
சின்னப் பிலக் கோவில்

சிதைந்த மதில் உதிர்ந்த சுவர்
கன்னக் கோலிட்டது போல்
கண்களுடைந்தாடு தளம்
இன்னும் அரை நொடியில்
இடிந்து விழும் போலுள்ள
வண்ணங்குலைந் தழிந்த
வடிவில்லாக் கோபுரத்துப்
பழங்காலக் கோயிலிலே
பாழுறக்கங் கொண்டிருந்தாள்.
பாரரசிக் கேனிந்தப்
பாழுறக்கம் வந்ததடா?
வந்து நிதம் பணிந்து
வரங்கேட்கும் மன்பதைக்குத்
தந்திடு நல் நவ நிதியாய்த்
தாரணிக்கு மழை பொழியும்
அருள் முகிலாம் வனதேவி
அழகி தரிசன வல்லி
ஆண்டிருந்து புகழ் பரப்பி
ஆயிரம் பல்லாயிரமாம்
காலம் புதுப்பித்துக்
கவின் கவிதை யாட்சி செய்து
கோடி பல கோடி வுயிர்
கோலாஹல மிழைக்க
ஆடி அசைந் தவளிவ்
வகில மெலாம் பவனிவரும்
திருவிழாத் திருத்துறந்து
தினமாறு கால மெனும்

செய்யவில்லை. புதுக் கவிதை முயற்சி அவன் காலத்துக்குப் பிறகுதான் தீவிரம் பெற்றது. பா ர தி க் கு வால்ட் விட்மன் தெரிந்திருக்கலாம். இலியட்டோ, பவுண்டோ, லா போர்க்கோ (ஃபிரஞ்சு கவி) தெரிந்திருக்காது நிச்சயமாக. இருந்தாலும் பாரதி புதுக்கவிதை செய்தவன். இன்றைய தமிழ் புதுக்கவிதை தலைமுறைக்கு அவன் முன்னோடி. இது, இன்னும் ஆராய வேண்டிய விஷயம். இருக்கட்டும்.

இந்த ஆய்வை முடிக்குமுன் இன்னொரு விஷயத்தையும் குறிப்பிட்டாக வேண்டும். அதுதான், கவிதைக்கும் இசைக்கும் உள்ள உறவு, கவிதையில் இசையம்சம் இயற்கையாக அமைந்திருப்பதுதான். ஆனால் அடிநாதமாகத்தான் ஓடும். கவிதையை அமுக்கி, மெலெழுந்து ஒலிக்காது. அப்படி ஒலிக்கும் உருவம் பெற்றதுக்குப் பெயர் 'பாட்டு'. பாரதி பாட்டுக்களும் பாடி இருக்கிறார், இசையை முதன்மையாக வைத்து. அவைகள் கவி பாரதிக்கு சம்பந்தப்படாதவை; சாகித்யகர்த்தா பாரதி சம்பந்தமானவை. இந்த இரண்டையும் குழப்பி, சுளகில் போட்டு, பாரதியை புடைத்துப் பார்கக வேண்டாம். கவி பாரதியை ம ட் டு ம் எடுத்துக் கொள்வோம்.

இசைத்தன்மை கவிதைக்கு இன்றியமையாதது — ஏன் முதன்மையானது என்றுகூட ஃபிரஞ்சு 'சிம்பாலிக்' கவிகள் அடித்துச் சொல்லி இருக்கிறார்கள். ஆன்மீக கருத்துக்களை வெளிச்சொல்ல இசைக்கு சக்தி அதிகம். ஒரு மனநிலையை (ஸ்டேட் ஆஃப் மைண்ட்) எழுப்பக்கூடிய சக்தி இசைக்கு உண்டு. அந்த தன்மையை கவிதையில் ஏற்ற வேண்டும். அதுக்காக முறைகளை கையாள வேண்டும் என்று வலியுறுத்துகிறார்கள். வெறுமனே மெட்டு, தாளம், ராகம் என்ற கருத்தில் சொல்லவில்லை. அவர்கள் சொ ல் லி இருப்பது இருக்கட்டும். நமக்கு அது புதுசு இல்லையே. மரபுவழியாக வந்துள்ள கருத்துதானே. பாரதி கவிதைக்கு வேண்டிய இசைத்தன்மையில் திடமான நம்பிக்கை வைத்தவன். அவன் அமைத்த சொற்களும், சொல் சேர்க்கைகளும், வரிகளும் இதை நிரூபிக்கும். ஆனால் பாரதி அபாயக்கோட்டை

பலதடவை தொட்டு கீழே விழுந்துவிட்டான். மட்டுமீறி செய்துவிட்டதன் விளைவை நன்ருக அனுபவிக்கிருன். எத்தனை இடங்களில் தொய்வைப் பார்க்கிறோம். ஆனால் அளவு அறிந்து கலந்து இருக்கிற இடங்களில் 'கடல் வீரத்திரை கொண்டு விண்ணையிடிக்குது'' என்கிற மாதிரி நல்ல உயரத்துக்கும் போயிருக்கிருன். பாரதி செய்தானே என்று இன்று கவிதையையும் இசையையும் கு ழ ப் பி அடிக்கும் கவிக்காளான்கள்தான் இன்று தமிழ்க் கவிதை உலகில் அதிகம். கவியரங்கங்களும், 'ஆண்டு மலர்'களில் கவிதைப் பக்கங்களும்இதைத்தான் நிரூபிக்கின்றன.

ஆக, அக்கினிக்குஞ்சு ஒரு 'சிம்:பாலிக்' கவிதை. 'மெடஃபிஸிகல்'கவிதையல்ல. 'டைடாக்டிக்' என்றுகூறமுடியாது. அறிவுபூர்வமான உள்ளடக்கத்தை திரைமறைவில் வைத்து உணர்ச்சி பூர்வமான ஒரு மன எழுச்சியூட்டும் வகையாக வெளிக்கு ஏதோ ஒரு வர்த்தமானத்தை சொல்வதுபோன்ற (ம்நரேடிவ்) பாங்கில் கற்பனையில் உருவான ஒரு கவிதை. ஒரு நல்ல கவிதை — அது ஸ்பஷ்டமாக உரைப்பதுக்கு (ஸ்டேட்)மேலாக மேற்கொண்டு சூசனையாக குறிப்பிடுதலே (ஸஜஸ்ட்) தன் இயல்பாகக் கொண்டிருக்க வேண்டும் — என்ருல், இது ஒரு நல்ல கவிதைதானே ?

தேனிசையும் திகட்டாத
தெள்ளமுதாம் நிவேதனமும்
தானே துறந்தழித்துத்
தனிக் காட்டு மோனத்தில்
தவம் பெரிதாய்ப் புரிகின்ருள்
தாயர்க்காய்த் தங்கையர்க்காய்
மானிடத்தின் உயிர்ப்பாதி
மங்கையர் தங்குல மோங்க
பலியோட்டுப் பரமசிவன்
பார்த்திருந்து காத்திருந்து
பற்பல நாளோடவிட்டு
சிவயோக லீலை யொன்றில்
சித்தம் நெகிழவிட்டான்.
தவக் கோல நாயகியாள்
தனிமோனத் துயில் மெல்ல
மலர்கின்ற பங்கயம் போல்
ம[illegible]ந் துணர்வு வரப்பெற்ருள்.
பளிச்சென்ற வெளிச்சத்தில்
பாழான மதிற் புறத்தில்
நெளிவொன்று மில்லாமல்
நீள வளர்ந்தோங்கிய தோர்
மரமல்லிகை மரத்து
மலரில்லாத் தழையில்லாக்
கிளையுச்சி மேலிருந்து
கின்னரன் போலொரு குயிலன்
தன்னுசை உயிரோலம்
தவிப்பு நினைப்பை யெல்லாம்

கிளர்ச்சி யிளம் பருவத்தின்
கீதக்குரல் மதுரச்
சோம ரஸமாய்ப் பிழிந்து
சொக்க வடித்துவிட்டான்.
நாத ‘மீதேது நமதருகே
என்றயர்ந்து குயிலாசை
ஏக்கக் குரலறிந்து
என் மோனங் குலைப்பதற்கு
ஏலுமோ இளங்குயிலால்
என்றதொரு ஐயத்தால்
இசைவல்ல குயிலியுரு
எடுத்தாள் தாய் எதிர்க்கிளையில்
அடுத்த கணமிருந் திசைத்தாள்.
இரண்டு குயிற் குரலும்
இணைந் திசையாய்ப் பொங்கிடவும்
வறண்டிருந்த மண்ணுக்கு
வானங் கனிவது போல
விரிந்த வான் முகடுருள
விண் முகில்கள் திரண்டுவரக்
கொதிக்கின்ற கானல் வெளி
குளிர்க் காற்றால் குதூஹலிக்க
வெள்ளி வெண் முல்லையென
வேனில் மழைத் துகளுதிரப்
பருவ விடாய் தீர்ந்தனபோல்
பாழ்வெளித் தாவர முயிர்க்க
பகல் நிலவாகியது
பகலவனே குளிர்ந்துவிட்டான்.

குயிலனிவன் யாரென்று
குறிப்பாகப் பார்த்தாள் தாய்
குளிர்ந்து நடுங்கியபின்
கோயிலுக்கே யேகிவிட்டாள்.
நாதம் பிழிந்த குயில்
நாதன் பரமசிவன்.
நாயகியின் தவமோனம்
நடக்கிறது மறுபடியும்.

ந. பிச்சமூர்த்தி

# ஞானப் பால்

லிங்கங் கட்டி சததிரத்துக்கு வந்து ஒரு வருஷ மாகிவிட்டது.

அவன் வந்தது தனககடித்த அதிருஷ்டம் என்றுதான் த்வசிப் பிள்ளை நினைத்துக் கொண்டான். எப்பொழுதுமே தனக்கு அதிருஷ்டம்தான் என்ற நினைப்பு அவன் நெஞ்சில் தடித்தே இருந்தது. 'அ'ஞ 'ஆ'வன்ஞ தெரியாத கரிக் கட்டைக்குப் பதினைந்து ரூபாய் சம்பளமும் சாப்பாடும், தினம் ஆறு பேருக்குச் சாப்பாடு போட்டுச் சமாளிக்கும் அதிகாரமும், எல்லோருககும் இலேசில் கிடைத்துவிடுமா, என்ன ? பிள்ளை குட்டி இருந்திருந்தாலாவது துரதிருஷ்டத் தைப் பற்றி நினைக்கவேண்டி இருக்கும் ; சத்திரத்து முதலி யாரை வையவேண்டி இருக்கும்.

தவசிப் பிள்ளையின் அதிருஷ்டம், அவன் ஒண்டிக் கட்டை. முதலெடுப்பிலேயே, முதலியாரை வாழ்த்தும் வாய்ப்பாகவே அமைந்துவிட்டது அதைத்தவிர, வாழ்த்து வதற்கு அதில் இன்னும் பல வாய்ப்புக்கள் இருந்தன. போகப் போகத்தான் தெரிந்தது. சத்திரத்துக்கு வேண்டிய கறிகாய் சாமான்கள் வாங்குகிற பொறுப்பு அவனைச் சேர்ந்ததுதானே ? அவன் முதலில் யோக்கியஞ கத்தான் இருந்தான். இருந்தாலும் கைக்கு உறையைப் போட்டுக் கொண்டு தேன் எடுக்க முடியுமா ? கையில் ஒட்டிக்கொள்வதை நக்காமல்தான் இருக்க முடியுமா ?

அவனுக்குத் தெரியாவிட்டாலும் சொல்லிக் கொடுக்க வதங்கிய கத்தரிக்காயும், தேசல் படிக்கல்லும், தக்கை போட்ட எண்ணெய்ச் செம்பும், கறிகாய்க் கடைக்காரியும், மளிகை மாணிக்கம் செட்டியாரும் இருக்கும்பொழுது அவனால் என்ன செய்துவிட முடியும்? முதலாளியை வாழ்த்துவதற்கான ஆதாரங்கள் இதில் எல்லாம் ஏராள மாக இருந்தன.

சத்திரத்துக்குத் தவசிப் பிள்ளைதான் சர்வாதிகாரி ஆகையால் சட்டமும் இல்லை, நெறிகளும் இல்லை. தானம் கொடுத்த மாட்டைப் பல்லைப் பிடித்துப் பார்ப்பார்களா? அங்கே வேலை செய்துகொண்டிருந்த ஆளுக்குத் தவசிப் பிள்ளை ஒருநாள் சீட்டைக் கிழித்துவிட்டான். ஆனால், பாவம்! தவசிப் பிள்ளை பேரில் மட்டும் குற்றம் சொல்லக் கூடாது. அதிருஷ்டம வந்து பிடரியில் குந்திக் கொண்டு கட்டளையிட்டால் நிறைவேற்ற வேணடியதுதானே!

ஒருநாள் எங்கிருந்தோ ஒரு லிங்கங் கட்டி அங்கு வந்து சேர்ந்தான். வந்தவனைத் தவசிப் பிள்ளை ஒன்றும் கேட்கவில்லை. சத்திரத்துக்கு வந்த பிறகு பெற்ற அனுபவத்தால் தவசிப் பிள்ளைக்கு 'எக்ஸ்ரே' பார்வை வந்துவிட்டது. ஆனால், அதன் உதவி இல்லாமலேயே தவசிப் பிள்ளையால் லிங்கங் கட்டியை எடை போட்டுவிட முடிந்துவிட்டது.

மழுக்கிய தலை, கழுத்திலே வெள்ளிப் பெட்டி மூடிய லிங்கம், இடுப்பிலே பழுப்பேறிய வேஷ்டி — நாலு முழ நீளம், இருபத்தி நாலு அங்குல அகலம்.

லிங்கங் கட்டி தலையை தடவிக்கொண்டு நின்றானே ஒழிய எதுவும் பேசவில்லை. ஆனால், தவசிப்பிள்ளை பதில் சொல்லிவிட்டான்:

"சமையல் ஆன பிறகு சாப்பிடலாம், இப்போது எங்கே இருந்து எங்கே போறீங்க?"

"பண்டாரத்துக்கு ஊரேது, பேரேது, போக்கிடமேது? சோறு கண்டால் சொர்க்கம். 'ஒரு கவளம் சோறு இங்கே

நெதம் கிடைச்சா இதுதான் போக்கிடம். அதை இதைச் செஞ்சிக்கிட்டுக் கிடந்துடுவேன்.''

தவசிப் பிள்ளைக்கு ஒரே யோசனை. ஆளைப்பார்த்தால் சுமைதாங்கி மாதிரி இருக்கிறான். எந்த வேலை வைத்தாலும் தாங்குவான்! சமையல்பாத்திரம் விளக்குகிற காத்தானோடு தினம் போராட்ட முடிகிறதா? அஞ்சு ரூபாய் சம்பளமும் மிச்சம் மீதம் சோறும் கிடைக்கிறதே—அது போதாதாம்! தினம் அடித்துக்கொள்கிறான்! சோறு கொடுத்தால், குழம்பில்லையா என்கிறான்; குழம்பு கொடுத்தால், கறி இல்லையா என்கிறான்; சோறு குழம்பு கறி கொடுத்தால், இவ்வளவுதானா என்கிறான்! இவன் வம்பே இல்லாமல் ஒழித்துவிட்டால்? சுமைதாங்கிதான் வந்திருக்கிறான்! ஒரு கவளம் சோறு செலவு! ஐந்து ரூபாய் மிச்சம்!

மறுநாள் காத்தான் சீட்டு முன்னறிவிப்பின்றிக் கிழிக்கப்பட்டுவிட்டது. லிங்கங் கட்டிக்கு அந்தப் பதவி அளிக்கப்பட்டதென்ற விஷயம் தெரியவே தெரியாது. சோற்றுக்காகத் தினம் ஊர் ஊராய் அலைய வேண்டாம். ஒரு மணி நேரம் பாத்திரம் தேய்த்துப் பண்டம் கழுவிக் கொடுத்தால் புண்ணியம்! நாவுக்கரசர் உழவாரப்படை வைத்திருக்கவில்லையா? பெரிய அதிருஷ்டம் அடித்து விட்டதாக லிங்கங் கட்டிக்கு அதிக மகிழ்ச்சி. தவசிப் பிள்ளையும் தனக்கு அதிருஷ்டம் அடித்ததென்று நினைத்துக் கொண்டான்.

வந்த புதிதில் எல்லாமே நன்றாக இருந்தன. ஒரு கவளம் கேட்ட ஆளுக்கு இரண்டு வேளையும் மூன்று நான்கு கவளமும் கிடைத்துவிட்டால் மனம் துள்ளாதா? பாத்திரங்கள் கரிபோகத் தேய்க்கப்பெற்றுப் பளபளப்பாக இருந்தன. கறிகாய் தூக்கிக் கொண்டுவர, மளிகைச் சாமான் தூக்கிவர, முனகாத நல்ல ஆள் கிடைப்பது ஒரு வாய்ப்புத்தான். சத்திரத்து வேலைக்குத்தான் புணையாம்! காத்தான் சாமான் தூக்கும் கூலிக்காரனல்லவாம்! என்ன ஓட்டி அடித்துக் கொண்டிருந்தான்! அப்பாடா என்றிருந்தது தவசிப்பிள்ளைக்கு. தினம் சாப்பிட்டுவிட்டுச் சத்திரத்து

திண்ணையில் லிங்கங் கட்டி படுத்துக்கொண்டபோது, 'ஆயாடீ' என்று சொல்லிக் கொண்டே ஆறுதலாகப் படுத்துக்கொண்டான் தவசிப் பிள்ளை.

அதோடு விஷயம் போய்விடவில்லை. சத்திரத்தில் வந்து போகிறவர்கள் லிங்கங் கட்டியைப் பாராட்டாமல் போவதில்லை.

'நல்ல ஆளு! பக்திமான! நாள் தவறாமல, மணி பிசகாமல திருக்குளத்தில் பல்லைத் தேய்த்துத் துணி துவைததுக் குளிதது விட்டுப் பட்டையாயத் திருநீறிட்டுக கொணடு கிழககே சூரியனைப் பாாததுத தவறாமல் செபம் செய்கிறாரே, அது ஒணணே போதும்! இந்த மாதிரி ஆளைப் பார்ககறதே அபூாவமாயிடுத்தே!' எனறு வியப்படைவார்கள்.

ஆமாம்! இந்தக் கிரியைகளை லிங்கங் கட்டி அலட்சியப் படுததுவதில்லை. அதறகுமேல் படிப்பு கிடிப்பு எனறு லிங்கங் கட்டி தொந்தரவெதுவும படடுககொளவதிலலை. 'ஒருகால் சிவசிதமபரம் எனறு சொன்னால இருககாது ஊழவினையே' எனறு மட்டும, பேச்சுநடுவில புகுததுவான. அதை நமபினானா இல்லையா என்று கேட்டால் அவனுககே சொலலத் தெரியாது. லிங்கங் கட்டி வெள்ளை வேட்டிப் பண்டாரமானபோது சமய அறிவு ஒனறையும சமபாதித்துக கொள்ளவிலலை லிங்கததைக கயிற்றிலகட்டி கழுத்தில் மாட்டிவிட்டுச் செயய வேண்டிய காரியங்களை எலலாம் சொல்லிக் கொடுத்துவிட்டு, 'பசுபதியும பரந்த உலகமும் இருக்குமட்டும் கவலையிலலை; கிழக்கே போ' என்றாகள். அனறு முதல் சொன்னபடி செயதுகொண்டு வந்தானே ஒழியத் தன கிரியைகளையும மனத்தையும் பிணைக்க வேண்டுமென்று அவனுககுத் தோன்றியதில்லை. இரண்டும் ஒன்றிய செயலநெறி காணவேண்டும் என்று துடித்ததில்லை.

எனவே, சத்திரத்துக்கு வந்து போகிறவர்களில் யாராவது இரணடனா நாலனா கொடுத்தால், அதை மறுப்பதில்லை. மறுககவேண்டும் என்று தோன்றியதில்லை.

அதற்கு மாருகக் காசு தேவையாக இருந்தால், 'கொஞ்சம் புதுக் காசாகக் கொடுங்கள்' என்று கேட்டு வாங்கிக் கொண்டு கெட்டியாக இடுப்பில் சொருகிக் கொள்ளுவான்.

வந்த எட்டு ஒன்பது மாதங்களுக்குள் புது விளக்கு மாறு தேய ஆரம்பித்துவிட்டது. லிங்கங் கட்டியின்பேரில் எவ்வித வஞ்சனையும் இல்லை. தவசிப் பிள்ளையோ பெரிய பேர்வழி. நாளாக ஆக லிங்கங் கட்டியின உணவில் ஒரு கவளம் இரண்டு கவளம் குறைய ஆரம்பித்தது. சில நாள் கறியோ குழம்போகூட இருக்காது, சதநிரத்துக்கு வந்தவர்கள் அதிகமாகச் சாப்பிட்டுவிட்டாாகள் போல் இருககிறது என்று நினைத்துக்கொணடான்.

அவனுக்கு ஆட்சேபணை இலலை என்ருலும், அவன் வயிறு புகார் செயதது இரணடொரு நாள் பல்லைக் கடித்துக் கொண்டிருந்தான். புண்யவான் தருமம் பணணி யிருக்கிருன' ஒரு கவளம் குறைநது போனுல் எனன பிரமாதம எனறு ஒருநாள் இரணடு நாள் நினைததுக் கொணடான் முடியவில்லை மூன்ருவது தினம முதல், சத்திரததுச சாப்பாட்டுக்குப பிறகு கருமாதி, கல்யாணம், மகேசுவர பூஜை என்று கேளவிபபடடால, தவருமல் அங்கு போயச் சாப்பிடுவதெனறு வழககப படுததிக் கொண்டான. கொளுத் தணணி ஊத்துவதாகக் கேள்விப்பட்டால்கூட அஙகு போய் வாசனையாவது பார்த்துவிட்டு வநதான! அங்கெல்லாம்கூட இரணடொ ஒரளுக கிடைத்தது.

லிங்கங் கட்டிக்குக் காசு கிடைக்கிறது என்று தெரிந்த வுடன்தான தவசிப பிள்ளை தேய்பிறை மரபை உணவில புகுத்த ஆரம்பித்தான். சத்திரத்தில் பண்டாரததுககு விருந்தா வைப்பார்கள்? ஏதோ புணணிய காரியததில் அப்படி இப்படித்தான் இருக்கும் எனறு சொல்லும் பொழுது லிங்கங் கட்டிகூடச் சகஜம்தான் என்று ஒத்து ஊதிவிடுவான். 'வேண்டுமானுல் ஏதாவது ஒட்டலில் வாங்கிச் சாப்பிடு, சாமியாரே!' என்று உபதேசம் செய்வான் தவசிப் பிள்ளை.

லிங்கங் கட்டிக்குக் காசு சேர்ந்து போய்விட்டதென்று எப்படியோ தவசிப் பிள்ளை கணக்குப் பண்ணி விட்டான். அதை எப்படியாவது கரைத்துவிட வேண்டும் என்ற விஷம எண்ணம் அவனுக்கு வந்துவிட்டது.

தவசிப் பிள்ளையினிடத்தில் பணத்தை வைத்திரு என்று லிங்கங் கட்டி கொடுத்திருந்தால் இந்த விஷம எண்ணம் தோன்றியிருக்குமா என்பது ரசமான கேள்வி. ஆனால், விடை எளிது. நிச்சயமாகத் தோன்றியே இருக்காது. இதில் வந்த கஷ்டம் என்னவென்றால் பாலுக்கு பூனையைக் காவல் வைக்க முடியாது என்பதுதான். லிங்கங் கட்டி ஏதோ குருட்டு சாமர்த்தியத்துடன் சில்லறை அடகு பிடித்துவந்த கிழவியிடம் இந்தப் பணத்தைக் கொடுத்து வைத்திருந்தான். கடவுள் பொய்யாகப் போனாலும்கூட அந்தக் கிழவி பொய்யாகப் போகமாட்டாள் என்று அந்த வட்டாரத்திலே அவளுக்கு நல்ல பேர்!

ஆனால் அந்த ரகசியம் தவசிப் பிள்ளைக்குத் தெரியாது. திருட்டுப் பயல் எனறு கறுவிக் கொண்டே எப்போதும் போல் அரை வயிற்றுச் சோறு போட்டு முழு வேலையையும் வாங்கிக்கொண்டிருந்தான்.

தவசிப் பிள்ளைக்கு ஒரு யோசனை தோன்றிற்று.

"என்ன, லிங்கங் கட்டி! உனக்குத்தான் பெண்டாட்டி இல்லையே!"

"பண்டாரமாச்சே!"

"அப்படின்னா, தொடுப்புக்கூட ?"

"அதென்னுங்க, நாக்கு அழுகிப் போயிடாது."

"கோவிச்சுக்காதே. ஒம் பணத்தைப் பின்னே என்ன செய்யறே?"

"பத்திரமா இருக்குங்க."

"நீ, நின்னா நெடுஞ்சுவரு, விழுந்தாக் குட்டிச்சுவரு. பெண்ணா பிள்ளையா பெண்டாட்டியா? ஒண்ணும்தான்

இல்லே. காலணுவுக்குக் காராபூந்தி கூட வாங்கிச் சாப்பிட மாட்டே. பணத்தைப் பத்திரமா வைச்சுக்கிட்டு என்ன பண்ணுவே?"

உள்ளபடியே லிங்கக் கட்டிக்குத் திகைப்பாய் போய் விட்டது. ஆமாம், பணத்தை வைத்துகொண்டு என்ன பண்ணுகிறது?

"பின்னே எறிஞ்சிடலாமா?"

"அதுக்குச் சொல்லவில்லே. ஒரு நல்ல காரியம் சொல்றேன். யோசிச்சுப் பாரு."

"ஓ!"

"கழுத்து லிங்கம் இருக்கல்லே?"

"ஆமாம்."

"இதைக் கவுத்தாலே கட்டிப் போட்டுக் கிட்டுக் கிடக்கிறியே! இருக்கிற பணத்துக்குப் பவுனைக் கிவுனை வாங்கிச் செயின் பண்ணி, லிங்கத்தை அதில் கோத்துப் பிடேன். கழுத்துக்கும் அழகாயிருக்கும், லிங்கமும் பார்வை யாயிருக்கும். திருக்குளத்திலே திறுநீறும் தங்கச் செயின் லிங்கமுமாகக் கிழக்கே சூரியனைப் பார்த்துக் கொண்டு நிக்கறதைப் பார்த்தால் அசல் சிவப்பழம் இம்பாங்க. நல்லா இருக்குமே?"

"என் கழுத்துக்கு என்னத்துக்குங்க?"

"ஒன் கழுத்துக்கா செயின்; இல்லே இல்லே. லிங்கத் துக்குச் செயின் செய்யச் சொல்றேன. செயின போட்ட லிங்கத்தை மடியிலே கட்டிக்கிறேன்கிறியா?"

"இல்லே, இல்லே."

"அப்படின்னு கழுத்திலேதானே போட்டுக்கணும்?"

"செஞ்சால் பாத்துக்குவம்" என்று லிங்கங் கட்டி சொல்லிப் பேச்சை வெட்டிவிட்டான். தவசிப் பிள்ளையும் அதோடு போய்விட்டான்,

தென்னம் நெற்று சீக்கிரமாக மூளைத்துவிடாது. கொஞ்சம் காலம் பிடிக்கும். அது மாதிரி லிங்கங் கட்டி மனத்திலே போட்ட தென்னம் நெற்று மெதுவாக முளைக்க ஆரம்பித்தது. கிழவி நல்லவள் தான். ஆனுல், வயசா யிடுச்சே! ஒரு சமயத்தைப் போல ஒரு சமயம் இருக்குமா ? அப்படி என்றுல் பணத்தை யாரிடம் மாற்றுகிறது ? ஆள் யாரும் தெரியவில்லையே! தவசிப் பிள்ளை சொல்றது நல்ல யோசனைதான். லிங்கத்துக்குச் செயின் பண்ணிஞல் நல்லாத்தான் இருக்கும் என்றெல்லாம் யோசனை செய்து கொண்டே இருந்தான்.

இதற்குள் வயது ஒரு வருஷம் கூடிவிட்டது. புகையி லையைப் போலக் காய்ந்து வந்த லிங்கங் கட்டி வெள்ளரிப் பழம் மாதிரி ஆகிவிட்டான்.

ஒருநாள் திடீரென்று ஆசாரியிடம் போய்த் தனக்குச் செயின் செய்ய எவ்வளவு பவுன் வேண்டுமென்று கேட்டான். ஆசாரிக்குச் சிரிப்பு தாங்கவில்லை. "இந்த வயதிலா கல்யாணம் செய்துகொள்ளப் போகிருய் ?" என்று கிண்டலாகக் கேட்டான்.

" இல்லை, இந்த லிங்கத்துக்கு " என்று காட்டினதும், வியாபார ரீதியில் ஆசாரி பேசத் தொடங்கிவிட்டான்.

" முக்கால பவுனிலிருந்து செய்யலாம். "

" அதுககுக குறைஞ்சி ?"

" முடியாது "

" கூலி ?"

" உனக்காகப் பதினைஞ்சு ரூபாய்."

" என்னையயா முககால பவுனுக்கு .."

" அதானய்யா — சின்ன செயினுக்குப் பெரிய கூலி, பெரிய செயினுககு சின்ன கூலி. பெரிய செயினுவே லிங்கத் துககுப பண்ணிக கட்டிககியேன்?'

" ஏதோ பாதது கூலி வாங்கிக்கோ அய்யா. பவுன் வாங்கியாரேன்" என்று திரும்பிவிட்டான்.

பதினைந்து நாள் கழித்துத் திருக்குளத்தில் நீராடி விட்டுத் திருநீறணிந்து தங்கச் செயினும் லிங்கமும் துலங்க, லிங்கங் கட்டி சத்திரத்துக்குத் திரும்பிவந்தான்.

தவசிப் பிள்ளை திண்ணையில் ஏதோ சில்லறை வியாபாரம் பண்ணிக்கொண்டிருந்தான். லிங்கங் கட்டியைப் பார்த்ததும் புதுமையாக இருந்தது. இன்னதென்று ஒரு நிமிஷம் விளங்கவில்லை. பிறகுதான் தெரிந்தது. "சபாஷ்! சபாஷ்! ரகசியமாக செஞ்சிட்டியே!" என்றான் சந்தோஷம் பொங்க.

"என்ன பிரமாத காரியம்! ஏதோ ஆண்டவனுக்கு உவப்பா யிருக்குமேன்னு..."

"நல்ல காரியம், நல்ல காரியம்" என்றான் தவசிப் பிள்ளை. கண்ணிலே படாத காசாக வைத்துக் கொள்வதை விட்டுத் திருட்டுப் பயலை வருந்தி அழைப்பது போன்ற காரியத்தைச் செய்துவிட்டானே இந்த ஆள் என்று நினைத்துக் கொண்டான், ஏன் இந்த யோசனை சொன்னேமென்று கழுவிரக்கத்தின் சாயல் கூடப் படர்ந்துவிட்டது.

செயின் போட்ட லிங்கங் கட்டி ஆகிவிட்டதற்காக அவன் ஒன்றும் மாறிவிடவில்லை. வழக்கம்போல சத்திரத்துக் காரியங்களைப் பார்த்துக் கொண்டான். கழிவிரக்கம் காட்டிய தவசிப் பிள்ளையும் மாறவில்லை. பண்டாரத்துக்குக கொடுக்கிற கவளத்தில் ஏற்றம் ஒன்றும் ஏற்படவில்லை.

இதற்குப் பிறகு நான்கு மாதம் இருக்கலாம். லிங்கங் கட்டிக்குத் திடீரெனறு ஒரு நினைப்பு வந்தது. "தம்பி! திருமுலைப்பால் உச்சவத்துக்குப் போகணுமின்னு தோணுது. போயிட்டு ஒரு வாரத்திலே வந்திடறேன்" என்றான் தவசிப் பிள்ளையிடம்.

"குடுத்து வச்சிருக்கணும். போயிட்டு வா."

"பாத்திரம் எல்லாம் விளக்கணுமே ?"

"யாரையாவது வச்சுப் பாத்துக்கிடறேன்."

மறுநாள் சீர்காழிக்கு லிங்கங் கட்டி புறப்பட்டுவிட்டான். ஒரு வாரம் லிங்கங் கட்டி இல்லாமல் பொழுதை ஓட்டவேண்டுமே என்ற கவலை கொண்ட தவசிப்பிள்ளை படுக்கப் போகுமுன் ஒரு நாளாச்சு என்று கணக்கிட்டுக் கொண்டு படுத்தான். ஒவ்வொரு தினமும் ரப்பர் மிட்டாய் மாதிரி நீண்டது.

நான்காம் நாள் காலை தவசிப்பிள்ளை காய் கறி நறுக்கிக் கொண்டிருந்தான். முற்றிலும் எதிர்பாராமல் லிங்கங் கட்டி எதிரே வந்து நின்றான். தவசிப் பிள்ளைக்குக் கனவா என்றுகூடத் தோன்றிவிட்டது.

"என்ன, லிங்கங் கட்டியா?"

"பின்னே?"

"அதுக்குள்ளார வந்துட்டியே?" என்று கேட்டுக் கொண்டே லிங்கங் கட்டியை மேலும் கீழும் பார்த்தான். கைம்பெண் கழுத்துப் போலிருந்தது.

"என்ன பண்டாரம், லிங்கம் சங்கிலி ஒண்ணையும் காணோமே?"

"ஆமாம்."

"எங்கே?"

"ஏமாந்து போயிட்டேன்."

"எப்படிப் போச்சு?"

"அதாங்க ஞானப் பால்."

"விளக்கமாகச் சொன்னு அல்ல தெரியும்?"

"திருவிழாப் பாத்துட்டு முந்தாநாள் ராத்திரி சத்திரத்து வாசல்லே குந்திக்கிட்டு இருந்தேன். வேறு யாரரோ திண்ணையிலே வாழைத் தோலைச் சீவிப்போட்ட மாதிரி தலைமாடு கால்மாடா விழுந்து கிடந்தாங்க.

"திண்ணையிலே யாரோ ரெண்டு ஆள் என்னவோ 'பதி பசு பாசம்' இன்னு சத்தம் போட்டுப் பேசிக்கிட்டு இருந்

தாங்க. நடுவிலே அதிலே ஒரு ஆள் பாடினுரு. கொஞ்ச நேரத்துக்கெல்லாம் பேச்சு அடங்கிப்போய், பாட்டே பாட ஆரம்பிச்சுட்டாரு. ரொம்ப நல்லாக் குயில் கணக்காப் பாடினுரு. அப்படியே சாஞ்சுக்கிட்டு இருந்தவன் அதிலே சொக்கிப் போயிட்டேன்.

**' மாங்காய்ப் பாலுண்டு**
**மலேமே லிருப்போர்க்குத்**
**தேங்காய்ப்பால் ஏதுக்கடி — குதம்பாய் '**

இன்னு ஒரு பாட்டுப் பாடினுரு. அப்படியே மெய்மறந்தே போயிட்டேன் பொறவு, பாட்டே காதில் விழவில்லே.

"அப்புறம் நெனேப்பு வந்தப்பொ கண்ணேத் துறந்து பார்த்தேன். கிழக்கு வெளுத்துக்கிட்டிருந்தது. திருவிழா அலுப்பும், அந்தப் பாட்டும் என்னே அப்படி அமட்டிவிட்டது. நல்ல தூக்கம் இன்னு நினேச்சுக்கிட்டபோது, ஒரு திகில் பிறந்தது. கழுத்தென்னவோ லேசாக இருந்தது. தொட்டுத தடவிப் பார்த்தேன். லிங்கமா, செயினு, ஒண்ணேயும காணேம். யாரோ தூங்கிக் கொண்டிருந்த பொழுது அடிசசிக்கிட்டுப போயிட்டார்கள்! சத்திரத்துத் திண்ணேயில் இருந்தவர்களே ஒவ்வொருவராகப் பார்த்தேன். திருடி இருப்பார்கள என்று அவர்களேப் பார்த்தால் தோணவிலலே.

" 'என்ன பாக்குறீங்க பண்டாரம்' என்று திண்ணேயில் இருநதவர்கள விசாரித்தார்கள்.

" நான் நடந்ததைச் சொனனேன். அவர்கள் சிரித் தார்கள்.

" 'சாமி எடுத்துக்கிட்டுப் போயிருக்கும். ஞானப் பால் குடுக்க வேணும் ?' என்ருர்கள்.

" எனக்குச் சுருக்கென்று பட்டது. 'லிங்கத்துக்குப் போய் மட்டி மாதிரி தங்கச் சங்கிலி செஞ்சேனே ? பைத் தியக்காரத்தனம் !" என்று நிலேத்துக்கொண்டே ஊருக்குத் திரும்பி வநதுவிட்டேன்.

"ஞானப் பால் கிடைச்சுப் போச்சு."

"அப்புறம் ?"

"நான் போறேன்."

"எங்கே ?"

"இப்படியே நீளமா."

"பின்னே, ஏன் வந்தே ?"

"சம்பளம் கொடுத்து வேறு ஆள் பார்த்து வச்சுக்குங் கன்னு சொல்ல வந்தேன்."

"அடப் பாவி ! நெசமாகவே ஞானப் பால் கிடைச் சுட்டுதா ?"

லிங்கங் கட்டி பதில் சொல்லவில்லை. மழுங்கிய தலை யைத் தடவிக்கொண்டே தெருவில் இறங்கிவிட்டான்.

என். எஸ். சிதம்பரம்

# ஆதி கவிஞன்

**கவிஞன்:** நீலவான் வெளியினையும்
நிலத்தினையும் கடலினையும்
கோலப் பொற் கதிரினையும்
குளிரொளிசெய் மதியினையும்
சீலமாய்ப் படைத்தவரார்?
சிந்தைக்கும் அப்பாலாய்க்
காலமெலாம் அண்டமெலாம்
கணக்கெல்லாம் வகுத்தவரார்?

குடங்கண்டே வனைந்தவனைக்
கூர்ந்தமதி தெளிவதுபோல்
இடங்கண்டே எழில்கண்டே
இணையில்லாத் திறன்கண்டே
திடங்கொண்டே அருள்கொண்டே
தேர்ந்தொருவன படைத்திட்ட
நடங்கண்டே உய்ந்திடுவார்
நல்லறிவின் மாந்தர்தாம்!

புல்லாகிப் பூடாகிப்
புழுவாகி மரமாகிக்
கல்லாகிப் புவிதனில்
கணக்கில்லாப் பிறப்பெய்திச்

சொல்லாகிப் பொருளாகிச்
  சூக்குமமாய் நின்றெளிரும்
வல்லோனின் அருளுணரும்
  வழுவில்லாப் பிறப்புற்றேன்!

புதுமையெனும் குரலெழுப்பிப்
  புத்துலகைக் கண்டின்பப்
புதுமையெனும் வாழ்வுணர்த்திப்
  பொன்னான பாதையினில்
புதுமையெனும் இசைபாடிப்
  புறம்பான நெறியகற்றிப்
புதுமையெனும் கலைபரப்பப்
  புவனமதில் பிறப்புற்றேன்!

கவிஞனாய் வாழ்கவெனக்
  கருவதனில் திருவேற்றிப்
புவியினிலே பகுத்தறியும்
  புண்ணியமாம் பிறப்பருளித்
தவியாத மனப்பண்பும்
  தண்ணருளாம் சக்தியதும்
அவியாத பேரறிவும்
  அளித்தென்னை அனுப்பியதார்?

பி. ஸ்ரீ.

# முத்து-முத்தம்-முக்தி

முத்து என்றதுமே தமிழன் உள்ளத்தில் எத்தனை சிந்தனை அலைகள் பொங்கி எழுகின்றன! பாண்டிய மன்னர்களின் ஏரிபோல் இருந்த தென் கடலிலே முத்துக் குளிப்பது வரலாற்றுப் புகழ்பெற்றதொரு பழைய செய்தியாகும். இந்த முத்துக்கள் மேற்குக் கடற்கரையிலுள்ள துறைமுகங்களில் விற்பனைக்கு வந்துசேரும் இந்தத் துறைமுகங்களுக்குப் பழைய உலகின் பல பகுதிகளிலும் இருந்து வியாபாரிகள் வந்து ஏராளமான விலை கொடுத்து முத்துக்களை வாங்கிக்கொண்டு போவார்கள். அதனால் பாண்டிய நாட்டிலே செல்வம் கொழித்தது.

## தூத்துக்குடி முத்துக்கள்

தென்கடலாகிய இந்துமகா சமுத்திரத்திலே இப்போதுள்ள தூத்துக்குடிக்கும் இலங்கைத் தீவுக்கும் இடையேயுள்ள ஆழமில்லாத பகுதிகளில், பாண்டியர்களின் மேற்பார்வையில், நடைபெற்ற முத்துக்குளிப்பு உலக வணிகர்களின் பேராசைகளையெல்லாம் ஒருங்கே தூண்டிவிட்டது அந்த வணிகர்கள் ஈ மொய்ப்பதுபோல் துறைமுகங்களில் வந்து மொய்த்துக் கிடப்பார்களாம். முத்துக்களின் மேலுள்ள பித்து அவர்களை நம்மவர் கேட்ட பொருளைக் கொட்டிக் கொடுக்கச் சித்தமாக்கிவிட்டது. எனினும், 'முத்து இல்லை' என்று மறுத்துவிடக் கூடுமல்லவா தமிழர்

கள்? எனவே, பொருளைக் கொடுத்தும் நம் அருளை வேண்டி நிற்பார்களாம் கப்பலும் தாமுமாய்.

இந்த முத்து வியாபாரத்தை நம் தேசீய மகாகவி பாரதியார் எவ்வளவு பெருமையோடு, எவ்வளவு குதூகலமாய்க் குறிப்பிடுகிறார் பாருங்கள் :

முத்துக குளிப்பதொரு
தென கடலிலே, — அங்கு
மொயத்து வணிகாபல
நாட்டினர் வந்தே,
நத்தி நமககினிய
பொருள கொடுத்தே,
நம் அருள வேணடுவது
மேல கரையிலே!

வசீகரமான கவிச சிததிரம? எதாாத்தமான வியாபார சித்திரமும்கூட. அநத நாள் போய, மேலே நாடுகளிலிருந்து குண்டூசிகளையும இறககுமதி செய்துகொண்டு பொருளைக கொட்டிக கொடுததவணணம் ஏங்கி வெள்ளையர் அருளை நாடித் தவித்த காலததையும் கண்டிருககிறது நம் வரலாறு. இப்போதுதானே சுதந்திர இநதியா வாணிபத் துறையிலும தொழில-துறையிலும சற்று தலை தூக்கப் பார்க்கிறது.

தெனனிநதியாவில் ஒரு முககியமான தேசீய தொழிலாக இருந்தது முததுக் குளிப்பு. முதது விளையும் மோகனப் பிரதேசமாகவே முககியமாகத் தெரிந்து கொண்டிருந்தனர் கிரேக்கர்கள். ரோமர்களும தெனனிந்தியாவுடன் முத்துக்களுக்காக முக்கியமாய் வாணிபம் நடத்தியதுண்டு. ரோமாபுரி ராணிகளுக்கும் மற்றச் சீமாட்டிகளுக்கும்கூட, முத்து என்றால் ஒரே பித்து; ஒரே மோகம்.

ஒருகாலத்தில் தூத்துக்குடி முத்துக்களின் விலை மதிப்பு மிகவும் அதிகமாக இருந்தது; இன்றும் இங்கே முத்துக்கள் கிடைக்கின்றன. முத்துக்குளிப்பதற்கு, ஒரு குறிப்பிட்ட

காலம் உண்டு. அப்போது மீனவர்கள் முத்துச் சிப்பிகளைச் சேகரித்த வண்ணமாயிருப்பார்கள். முழு அழகு வாய்ந்த முத்து ஒன்று கிடைத்துவிட்டால், அதுவே ஒருவனைச் செல்வனாக்கிவிடும் என்பதை அவர்கள் அறிவார்கள். முத்துச் சிப்பிகளை ஏலத்தில் விடுவதை இன்றும் நாம் அறிவோம்.

14-ஆம் நூற்றாண்டில் வாழ்ந்த வைணவ உரையாசிரியர் ஒருவர் முத்துக்களால் அதிர்ஷ்டசாலிகள் ஆவோரை குறிப்பிடுகிறார். முத்துக்குளிக்கும் துறையில முத்துக்களை மீனவர்கள் பசியின கொடுமையால் அந்நாளில நெல்லுக்குப் பண்டமாற்றாக விற்றுவிடுவார்களாம். ஆனால் அம்முத்துக்களை அப்படி வாங்கும் வணிகர்களோ பெரு விலைக்குத்தான் விறபார்கள். அமமீனவர்களுக்கு வயிற்றுப் பசி. இவ் வணிகர்களுக்கு ஆசைப் பசிதான். இவர்களிடமிருந்து பெரு விலைக்கு வாங்கிக்கொள்ளும் அரசர்களும் பெருஞ் செல்வாகளுமே எத்தகைய பெரு விலைககும முத்துககளை விற்கமாட்டார்களாம்; அவற்றை ஆசை தீர அணிந்து அனுபவிப்பார்களாம். இந்த நிலைமை நமது நாட்டில் ராமாயண-மகாபாரத காலம் முதல் நிலவி வந்திருக்கிறது என்று தெரியவருகிறது.

பழைய யவன ஆசிரியர்கள் தூத்துககுடி உப்புக்களைப் பிரசித்தமாகக் குறிப்பிட்டிருக்கிறார்கள். கிறிஸ்து பிறப்பதற்கு மூன்று ஆண்டுகளுக்கு முன்பே சந்திரகுப்த சக்கரவர்த்தியினிடம் கிரேக்க தூதனாக வந்த மெகஸ்தனீஸ் இந்திய முத்துக்களின் ஒளிச்சிறப்பை வியந்து பாராட்டியுள்ளான். அர்த்த சாஸ்திர ஆசிரியரான சாணக்கியர் சிறந்த முத்துக்களைத் 'தாம்பிர வர்ணிகா' என்ற பெயரால் குறிப்பிடுகிறார்., தாம்பிரவருணி ஆறு சங்கமமாகும் கடற்பகுதியில் அம்முத்துக்கள் சேகரிக்கப்பட்டதால், அப்பெயர் பெற்றிருக்க வேண்டும். இம்முத்துக்களின் வாணிபம் மதுரை, உறையூர், காவிரிப்பூம்பட்டினம், கொச்சி ஆகிய இடங்களில் நடைபெற்றதாகத் தெரியவருகிறது. இம்முத்துக்களை அணிவோருக்கு அதிர்ஷ்டதேவி அருள்

பொழிந்த வண்ணமாயிருப்பாள் என்ற நம்பிக்கையும் மக்களிடையே காணப்பட்டது.

விஜயநகரப் பேரரசின் வீழ்ச்சிக்குப்பின் தூத்துக்குடி முத்து வியாபாரம் முறையே போர்த்துகீசியர், டச்சுக் காரர், ஆங்கிலேயர் வசமாயிற்று. 17-ஆம் நூற்றாண்டில் வாழ்ந்த ஓர் அன்னிய வியாபாரி தூத்துக்குடி முத்துக்களை ஏராளமாக ரஷ்யாவுக்கு அனுப்பவே, அவற்றுள் சிறந் தவை அந்தச் சக்கரவர்த்திகளின் உடைமையாகி, அணி கலன்களை அழகுபெறச் செய்தன. சுதந்திர பாரதத்திலும் தூத்துக்குடி முத்துக்குளிப்பு நடைபெறத்தான் செய்கிறது. ஆனால், பல காரணங்களால் இம்முத்துக்கள் பழைய மோகன சக்தியை இழந்துவிட்டன என்றே கருதலாம்.

## தமிழ்ச் சொல்லா – வட சொல்லா ?

முத்தை வடமொழியில் 'முக்தா' என்பர். முக்தா என்பதுதான் தமிழில் முத்து என்று சிதைந்ததாகக் கருது வோரும் உண்டு. இவர்கள் முக்தா என்பதற்கு வடமொழி யில் 'விடுபடுவது' என்ற பொருள்படும் தாதுப் பொருள் இருக்கிறதே, தமிழ்ச் சொல்லுக்கு இப்படி வேர்ப்பொருள் ஒன்றும் இருப்பதாகத் தெரியவில்லையே என்று வாதிக்கிறார் கள். சிப்பியிலிருந்து விடுபடுவதால் முக்தா என்ற பெயரே பொருத்தமானது என்றும் சொல்லுகிறார்கள்.

ஆனால், இந்த வாதம் சரியானதா என்று சற்றுப் பார்க்கலாம். முத்து என்ற தமிழ்ச் சொல்லை சங்க இலக்கி யத்திலேயே காண்கிறோம். முத்தம் என்பது அக்காலத்துச் சொல் வடிவம் 'சீர்மிகு முத்தம்' என்று வருகிறது பதிற் றுப் பத்திலே. முத்து என்ற சொல் வடிவத்தை சிலப்பதி காரம், நாலடியார் முதலிய பழைய, பிரசித்தமான நூல் களில் காண்கிறோம். முத்துமாலையை முத்துத்தாமம் என் கிறது மணிமேகலை. முத்தினால் அலங்கரித்த மேலாடையை 'முத்து உத்தரீயம்' என்கிறது பெருங்கதை. முத்துப் போன்ற பனி நீர்த்திவலையை ''முத்துநீர்' என்கிறது பரிபாடல்.

இந்த நிலையில், 'நித்திலம்' என்ற' தமிழ்ச் சொல்லே பழைய காலத்தில் முத்தைக் குறித்தது என்றும், முத்து என்பது முக்தா என்பதன் சிதைவாகப் பிறகு வழங்கியிருக்கவேண்டும் என்றும் கருதுவது சரியன்று. முத்தம் என்ற சொல்லுக்குப் பின்பே 'நித்திலம்' என்பதும் அதே பொருளில் வழங்கலாயிற்று என்று ஊகிப்பதே பொருத்தம் என்று எனக்குத் தோன்றுகிறது. அகநானூற்றின் மூன்றாவது பகுதி நித்திலக் கோவை என்று பிரசித்தமாக வழங்குவதால்தான் இச்சொல் முற்பட்டதாக இருக்கக் கூடும் என்று சிலர் கருதுகிறார்கள்.

தமிழர்களின் தென்கடல் முத்தே 'முக்தா' என்ற பெயருடன் வடமொழிக்கும் வடநாட்டுக்கும் போயிற்று என்று கருதுவதே ஆராய்ச்சிப் பொருத்தம் உடையது எனத் தோன்றுகிறது. முத்துக்குளிக்கும் இடத்தில்தானே முத்துக்குப் பெயரும் ஏற்பட்டிருக்கவேண்டும்? முத்து 'முக்தா' என்று பரிணமிக்க அதற்கு வடமொழி மரபை ஒட்டி ஓர் வேர்ப்பொருளும் கற்பிக்கப் பெற்றிருக்க வேண்டும்.

## முத்தமிடுதல்

முத்துக்கே 'முத்தம்' என்பதுதான் மிகப் பழமையான சொல் வடிவம் என்பதை ஏற்கெனவே அறிந்துகொண்டிருக்கிறோம். அன்பிற்கு அறிகுறியாக இடும் முத்தமும் விலைமதிப்பிற்கரிய முத்தைப்போல், அன்பர்களால் கருதப் படுவது இயற்கைதானே? எனவே, முத்தம் இடுதலை 'முத்துதல்' என்கிறார்கள் சங்ககாலத் தமிழர்கள். முத்தம் கொண்டாள் என்பதை முததினள் என்கிறார்கள். 'முத்து' என்பதற்குக் கண்ணீர்த்துளி என்ற பொருளும் சிலப்பதிகாரத்தில் காணப்படுவது கூர்ந்து நோக்கத்தககது அன்புக் கண்ணீரும், முத்துப்போல் மதிக்கத் தக்கதுதானே?

'மணிவாயிடை முத்தம் தருதலும்' என்பது குலசேகர ஆழ்வாரின் மணிவாக்கு. சிவநேசரான சேக்கிழார் பெருமானும் 'தாய்வாய் முத்தம் கொள்ள' என்கிறார் தம் பெரிய

புராணத்திலே. முகத்திலும் கண்களிலும் கூட முத்தமிடுவ துண்டு. 'புதல்வர் பூங்கண் முத்தி' என்பது புறநானூற்றில் பழைய சங்கப் புலவர் வாக்கு. முத்தமிடுவதை முத்தாடு தல் என்று குறிப்பிடுவதும் உண்டு. 'முகத்தில் முத்தாடி யும்' என்பது காஞ்சிப் புராண வாக்கு.

குழந்தைக் கண்ணனை நோக்கி, 'என் குட்டனே! முத் தம் தா' என்று பெரியாழ்வார் தாயாகப் பரிணமித்துக் கண்ணன் முத்தமிடுவதற்குக் கன்னத்தைக் காட்டுவது போல் அமைந்திருக்கிறது ஒரு திவ்யப் பிரபந்தப் பாட்டு. பரம பக்தரான ஆழ்வாருக்கு இம்முத்தம் செல்வத்துள் செல்வமாகத் தோன்றுகிறது. குழந்தையையோ காதலி யையோ முத்தமிடுவதைக் காட்டிலும், 'நீ முத்தம் தா' என்று கொஞ்சி முத்தமிடப் பெறுவது மேலான இன்பம் என்பதைத் தமிழர்களின் பக்திப் பாடல்களும் குறிப்பிடு கின்றன.

பெரியாழ்வார் குழந்தைக் கண்ணனைக் கொஞ்சுவது போல், 'நீ முத்தம் தா' என்று சிவபெருமான் உமாதேவி யைக் கொஞ்சியதாக ஒரு சிவபக்தர் பாடியிருக்கிறார். ஒரு முத்துப் பந்தலில் மெத்தைமேல் உமையம்மையின் அருகே இருந்துகொண்டு அப்படிக் கொஞ்சுகிறாராம் சுவாமி. 'அந் தச் சமயம் பார்த்து, அம்மையே அடியேனுடைய குறை களை அப்பனுக்கு மெல்ல மெல்லத் தெரிவிக்க வேண்டும்' என்பது சிவனடியாரின் விண்ணப்பம் அப்படிச் சொன்னால் 'வாய் முத்தம் சிந்திவிடுமோ?' என்று அன்னையை நோக்கிக் கேட்கிறது பக்தமணியின் குழந்தை உள்ளம்.

## முக்தி தரவேணும்

'முத்தி' என்ற சொல்லும் முத்துடனும் முத்தத்துட னும் உறவாடுவது போலக் காண்கிறதல்லவா? முத்தி என்றால் மோட்சம்; வடமொழியில் முக்தி. இது முக்தா (விடுபடுதல்) என்ற வேர்ப் பொருளிலிருந்து பிறந்ததுதான் என்பது நிச்சயம். ஆசையோடு முத்துக்குளிப்பதற்கும், ஆசையிலிருந்து விடுபட்டு முக்தி பெறுவதற்கும் என்ன

தொடர்பு இருக்க முடியும்? முத்துச் சிப்பியிலிருந்து விடு படுவது முத்து; அப்படியே, பாசபந்தம் என்ற சிப்பி யிலிருந்து விடுபடுவது முத்தி. என்ன அதிசய உறவு, பாருங்கள்!

அப்படியே, முத்தம் பெறுவதற்கும் முக்தி பெறுவதற் கும்கூடத் தொடர்பு இருக்கிறது என்றால், அதிசயம் அதிகரிக்கத்தான் செய்கிறது.

'மணிவாயில் முத்தி தரவேணும்'

— என்று திருப்புகழ் ஆசிரியரான அருணகிரிநாதர் பாடுவ தைத்தான் கேளுங்கள். 'மணிவாயிடை முத்தம் தருதலும்' என்ற ஆழ்வாரின் வாக்கைத்தான் இதுவும் நினைவூட்டு கிறது. இங்கே முத்தி முத்தம்தான். முருகன் முத்தம் தருவதும் முத்தி தருவதும் ஒன்றே என்ற பெருந் தத்துவக் குறிப்பை இங்கே காண்கிறோம்.

## வெண்முகில்

கம்பதாசன்

1. கோலப பசும் பீலி
கொள்கண் கனவதுவும்,
கூட்டும் துயரென்றோ?
தந்தச் சிறகுடையாள்,
அந்த மயில் துத்தத்து
குழையும் சிரிப்புதிர்த்துக்
கொண்டே, புறந் துயர்ந்தாள்?
வெண்முகில் மௌனமகள்...!

2. பஞ்சுப பொதியினிலே,
பாலின் நுரைப்பினிலே,
வங்கத் திரை விளிம்பாய்
வானம் அளக்கின்ருள்!
திங்கள், பகல் மினுப்பு
சித்திரந் தீட்டிடினும்,
இங்கே, உள திழந்தாள்!
சங்கின் புனித மகள்......!

3. செய்கைத் தணல் கொழுந்தும்,
தீமைச் சுடர் விடுமோ?
உய்கை நினை வகன்று
ஓய்ந்த உணர்வின் நிழல்;

ஏங்கியத் தீநீறு ;
எடுப்பாரிலா இளஞ் சேய் ;
சோம்பலின் தோற்றம் ; வெண்
ஆம்பல் இதழின் மகள்...!

4. கிலந்திக் கரு தீவு ;
சிலிர்ப்பினுக் கிடும் சல்லா ;
கலைந்தப் பனிக்கோலக்
கவிதை விழிச் சோழி !
உலையாம் அமைதிக் கொடி ;
உண்மை ; எழில் ஆவி ;
சுத்த நிலை ; அன்னம் ;
முத்தின் நிறத்து மகள்...!

5. கண்ணுடி வெள்ளுருக்கு ;
காலத்தின் நிர்வாணக்
காட்சிக் களைந்த துகில் !
காதல் நசை மின்னல் ;
கந்தப் பொடி தூபம் ;
தன்நினைவு இல் குருடு ;
உலவும் உயிர் ரேகை ;
நிலவின் நரை மகள்...!

6. குந்தும் மத யானைக்
கும்ப மலையினிலே,
கோஷ அருவியிலே
கொள்கை தனை கரைத்தாள் !
கூவும் கனல் குழலாய்க்
கொத்த வரும் காற்றில்,
பாத சுவடிட்டாள்... !
சாதல் முகத்து மகள்...!

## விசுவரூபம்

அ. சீனிவாசராகவன்

பாத்திரங்கள்

[ஸ்ரீபாஷ்யம் அருளியதால் பாஷயகாரர் என்றும், எம்பெருமானுர் என்றும் வைஷ்ணவர்களால் பாராட்டப் பெறும் ஸ்ரீ இராமாநுஜர் ;

தாசரதீ என்று அவரால் அழைகக்கப்பெறும் அவருடைய சிஷ்யர் முதலியாணடான்;

மற்ருெரு சிஷ்யரான கூரேசர் என்ற கூரத்தாழ்வான்;

இன்ஞெரு சிஷ்யரான கிடாம்பியாச்சான்;

தம் மனேவியிடம் கொணட காதல் மிகுதியால் தெருவிலே அவளுக்குக குடை பிடித்துச் செல்லத் துணிந்து, பிறகு, இராமாநுஜா அருளால பகவத பகதியிலே ஊன்றிய உறங்காவிலலி எனற உறையூர் மல்லர்;

உறங்காவிலலியின மனேவி ஹேமாமபாள ;

திருவரங்கம பெரியகோயில அர்ச்சகர்களான வேங்கடாத்ரி, வரதராகவாசாரியாா,

பெரிய கோயில பரிசாரகனை சாரங்க நம்பி.]

முதற் காட்சி

[எண்ணூாற்றைம்பது ஆணடுகளுக்குமுன்.

திருவரங்கம வடக்குக் கோபுர வாசலுக்கெதிரே உள்ள சித்திரை வீதிப் பகுதி. விடியற்காலே வேளே. கீழ் வானில்

மிதக்கும் இரண்டொரு தங்கப் பாளங்கள், உருகிப் பொன் வெயிலாகச் சிதற இன்னும் நேரமாகவில்லை. சிதறினுல், திரட்ட வந்ததுபோல, கொள்ளிடக் கரையிலிருந்து, சில் லென்று மார்கழி வாடை விரைந்து வருகிறது. பெரிய கோயிலில், சங்கும் திருச்சின்னமும் மேளமும் இழை கின்ற ஒலிக்கலவை, தொலேவினுல் மங்கி, விட்டு விட்டுக் காதில் விழுகிறது.

பெரிய கோயில் அர்ச்சகர்கள் வேங்கடாத்ரியும் வரத ராகவனும், பரிசாரகன் சாரங்க நம்பியும் வருகிறுர்கள்.]

**வேங்கடாத்ரி.** இந்த உறையூர் மல்லனுக்கு வந்த வரி சையைப் பார்த்தீர்களா?

**வரதராகவன்:** ஏன் வராது? கலி முற்றுகிறது, ஸ்வாமி, கலி முற்றுகிறது! அந்த உறையூர்த் தடியனுக்கு இதுவும் வரும், இன்னமும வரும். பெண்டாட்டிக்குக் குடை பிடித் துக்கொண்டு, தெருவிலே பல்லிளித்து நின்ற பயலுக்கு, பாஷ்யகாரர் பக்கத்திலேயெ இடம். நாளைக்கு, கோஷ்டி யிலே முதல் தீர்த்தம் அவனுக்குத்தான் என்றுகூடச் செப்புப் பட்டயம் வரும். அட, ரங்கராஜா!

**வேங்க:** இருந்தாலும், அந்த மல்லனுக்கு, பாஷ்ய காரர் இவவளவு இடம் கொடுககப்படாது, ஸ்வாமி. உறை யூரிலே ஆடும் கோழியும் அடித்து, உள்ளே தள்ளிக் கொழுத்துக் கிடந்த அந்தப் பயலுக்குத்தான் என்ன யோகம அடிச்சுது, பார்த்துதோ? முதலியாண்டானைவிடப் பாஷ்யகாரருக்கு இந்த வெறும் பயல் பெரியவனுய்ப் போய் விட்டானே! முதலியாண்டான் சாமான்யமானவரா? நல்ல பரமம வித்து, அசாத்தியமான வித்வத்து, எல்லா வற்றுக்கும் மேலே தனதான்ய ஸம்பத்து.

**வரத:** (நாக்கை நொட்டை விட்டுக்கொண்டு) அதைச் சொல்லும். ஸம்பத்து என்றுல் உங்கள் வீட்டு ஸம்பத்தா எங்கள் வீட்டு ஸம்பத்தா? அடாடடாடடா! பணம் தங்க மலையா குவிஞ்சு கிடக்கிறது ஸ்வாமி, அந்த முதலியாண் டானுக்கு. என்னவோ பொல்லாத காலம், இந்தப்

*பாஷ்யகார ஸந்யாஸியைக் கட்டிண்டு அழறுர். ரங்கராஜா, ரங்கராஜா!*

**வேங்க:** *அப்பேர்ப்பட்ட முதலியாண்டான் கையைப் பிடிச்சுண்டு காவேரிக்குத் தீர்த்தமாடப் போற இந்தப் பாஷ்யகாரர், தீர்த்தமாடித் திரும்பறபோது, இந்த உறையூர் மல்லன் உறங்காவில்லி மேலே சாய்ந்தபடி வருர், ஸ்வாமி. நானே பார்த்தேன். ஊரெல்லாம் சிரிக்கிறது.*

**வரத:** *(கசப்போடு) நாளைக்குத் தோளிலேயே தூக்கிக்கொண்டு எழுந்தருளுவார், லோகசாரங்க முனியைப் போல. விட்டுத் தள்ளும், வேங்கடாத்ரி, விட்டுத் தள்ளும்!*

**சாரங்க நம்பி:** *ஸ்வாமி, எனக்கு ஒண்ணு படுகிறது.*

**வேங்க:** *நீ இரு, சாரங்க நம்பி, கேட்டுதா, வரத ராகவாசார்? வெறும் உறங்காவிலலி இப்பொழுது உறங்காவில்லி தாஸன் ஆயிட்டான்.*

**வரத:** *ஏன் ஆகபாட்டான்? முதல்லே பெண்டாட்டிக்குத் தாஸனுக இருந்தானேல்லியோ, அதுக்காக அவன் பேரோடெ 'தாஸ' சப்தத்தைச சேர்த்திருக்கா பெரியவா. நீரும் நானும் என்ன பேசி என்ன செய்ய? கலி முத்தருன், ஸ்வாமி, கலி முததருன்.*

**சாரங்க:** *வேங்கடாத்ரி ஸ்வாமி, அடியேன் ஒரு...அடியேன் ஒரு வார்ததை......*

**வேங்க:** *அடியேன் என்ன, அடியேன் நுனியேன்! சொலலேன். ஒரு வார்த்தை எனன, நூறு வார்த்தை சொலலு. எஙகளுக்குத்தான் வாயடைததுப் போச்சு. நீயாவது பேசு. இனிமேல், பரிசாரகனுக்கும் பயில்வானுக்குந்தானே காலம்?*

**வரத:** *அப்படித்தான். நூத்துலே ஒரு வார்த்தை. தேவரீா வாயக்குச் சர்க்கரை போடணும். பாஷ்யகாரருககு ஒரு பக்கத்திலே பரிசாரகன கிடாம்பியாச்சான, இன்னொரு பக்கத்திலே படுதடியன் உறங்காவில்லிதாஸன்; சரியாகத்தான் இருக்கு. அட, ரங்கராஜா, ரங்கராஜா!*

**சாரங்க;** ஸ்வாமி, வேங்கடாத்ரி ஸ்வாமி...

**வேங்க:** என்ன சாரங்க நம்பி, ஏன் விழிக்கிறே? சொல்ல வந்ததைச் சொல்லேன்.

**சாரங்க:** பெரியவாள் சொல்லக் கேட்டிருக்கேன், மேரு மலையைச் சேர்ந்த காக்கையும் பொன்னாகும்னு.

**வேங்க:** அடி சக்கை, அப்படிப் போடுடா, அனுமந்த தாஸா! கேட்டுதோ, ஸ்வாமி, வரதராகவாசார் ஸ்வாமி, கேட்டுதோ?

**வரத:** கேட்டேன், கேட்டேன். பரிசாரக ஸ்வாமி— உபயவேதாந்த சாரங்க நம்பி ஸ்வாமிக்கு வாக் தேவி பிரத்யக்ஷம் ஆயிட்டா. அஹோ பாக்யம், அஹோ பாக்யம். அப்பனே, பொன் காக்கை என்ன, வெள்ளிக் காக்கைதான் திருவரங்கம் வீதியிலே பட்டப் பகலிலே பறக்கிறதே! உனக்கு அடுப்புக்கரி மூளையிலே ஏறிவிட்டது, அப்பனே. வாயை மூடிக்கொண்டு பேசாமல் இரு. இல்லாவிட்டால் பரிசாரக ஸ்வாமியைப் பரமபதத்திற்கு எழுந்தருளப் பண்ண வேண்டியிருக்கும். ரங்கராஜா, ரங்கராஜா!

**சாரங்க:** ஓய், வாயை அடக்கிப் பேசும். வேங்கடாத்ரி ஸ்வாமி, இவர் பேச்சைக் கேட்டீரா? இந்தக் கரண்டியாலேயே கபாலமோக்ஷம் நடக்கும். ஆமாம்.

**வேங்க:** நீ பேசாமல் இரு, சாரங்கா. நீயும் என்ன, அந்த உறையூர் மல்லன் மாதிரி ஒரே முரடாய் ...

**சாரங்க:** வேங்கடாத்ரி ஸ்வாமி, அவனையும் என்னையும் ஒரே மூச்சிலே தேவாள் பேசலாமா? நான் என்ன அவனைப்போல ஆம்படையாளுககுக குடைபிடிச்சுண்டு, தெருவோடு அவளுககு விசிறிண்டா போனேன்?

**வரத:** எப்படிப்போகமுடியும்? உன அகமுடையாளுக்குக் குடையாகக் கோவர்த்தன கிரிகூடப் போதாதே! விசிறியா......? பெரிய திருவடியின் இறக்கையைத்தான் வெட்டிக்கொண்டு வரணும், அந்தப் பர்வதரூபிணிக்கு விசிற. ரங்கராஜா, ரங்கராஜா!

**சாரங்க :** *(கோபத்துடன்)* பா ர் த் து தா, ஸ்வாமி, வேங்கடாத்ரி ஸ்வாமி, பார்த்துதா?

**வேங்க :** வெ று ம னே இரு, சா ர ங் கா. ஏதோ விளையாட்டாப் பேசினுல், இப்படிக் கோபப்படலாமா? நம்முடைய குலம், கோத்ரம், சமூகம் எல்லாம் அழிஞ்சிண்டிருக்கு; அதைப் பார்க்காமல், ஏதோ கோபப்படறயே.

**வரத :** அவனை விடும். அ வ ன் பிராமணன் இல்லே; மேரு மலேயைச் சேர்ந்த காகம்.

**சாரங்க :** பார்த்துதா, ஸ்வாமி, மறுபடியும்?

**வேங்க :** சரி, சரி, விஷயத்திற்கு வருவோம், வரதராக வாசார் ஸ்வாமி. இ த ற் கு எனன செய்யலாம்? இந்த உறங்காவில்லி மல்லனுடைய தில்லுமுல்லுக்கு ஏதாவது ஒரு வழி செய்யணும்.

**வரத :** நாம் என்ன செய்ய முடியும்? அவன் தடிப்பயலாச்சே! நம்மாலே கிட்ட நெருங்க முடியுமா? நொறுக்கிப் போட்டுடுவனே! யானை மாதிரின்ன திமுதிமுன்னு கொழுத்துக் கிடக்கிறுன்; என்னை வி ட் டு டு ம், ஸ்வாமி, என்னை விட்டுடும்.

**வேங்க :** பெ ரி ய வ ர் கிட்டெடயே நேரில் சொல்லிப் பார்த்தால்?

**வரத:** பெரியவரா? அது யார்; பெரியவர்? பாஷ்யகாரர் கிட்டெடயா சொல்லிப் பார்க்கலாம் என்கிறீர்?

**வேங்க :** ஆமாம், ஊரே திரண்டு போய்ச் சொன்னுல் கேட்கமாட்டாரா?

**வரத:** உம்மோடேயும், என்னேடேயும் எவன் சேருவான்? ஊரையே அவர் மயக்கி வைத்திருக்கிறுரே! அவருக்கு வர்ணுசிரம தர்மம், வர்ஜாவர்ஜம் ஒண்ணும் கிடையாது. ஒரு சூத்ரன் திருக்கச்சி நம்பியைப்போய் ஆசார்யன் என்று வரித்தவர்தானே? அன்றைக்கு இதே இடத்தில் நின்றுகொண்டு பாடவேறு ஆரம்பிச்சுட்டார்.

**வேங்க:** என்ன பாடினுர்?

வரத: என்ன, பாடினுரா? அட, ரங்கராஜா, ரங்க ராஜா! இந்த கோபுரத்தைக் கேளும், அதற்குக்கூட உடம்பு குன்றிப் போயிருக்கும். தமிழ் வேதமாம், தமிழ் வேதம். தொண்டரடிப்பொடி பாடியதாம். யாருக்கு அந்த இழவெல்லாம் ஞாபகம் இருக்கு? இனிமேல், சதுர்த்த வர்ணததார் எறிகிற சேஷத்தை வேத வித்தாய் இருக்கிற த்விஜன சாப்பிடணுமாம்! அது அமுதமாம்!

சாரங்க: அப்படியெல்லாம் இல்லே. பக்திதான் பிர தானம். அது இருந்தா, குலம் கோத்ரம் எல்லாம் ஆரா யப்படாதுன்னுதான் பாடினுர். பாட்டைக் கிடாம்பியாச் சானைக் கேட்டுப் படிச்சு வைச்சிருககேன்.

வேங்க: அப்படியா ? பலே பலே, எங்கே சொல்லு, கேட்கலாம்.

சாரங்க: அவர் மாதிரி நெஞ்சுருகி என்னுலே பாட முடியுமா? ஏதோ பாடறேன்:

“வான்உளார் அறிய லாகா
வானவா என்பர் ஆகில
தேன்உலாம் துளவ மாலைச்
சென்னியாய் என்பர் ஆகில்
ஊனம் ஆயினகள் செய்யும்
ஊனகாரர்க ளேனும்
போனகம் செய்த சேடம்
தருவரேல், புனிதம் அன்றே.”

வரத: நீ வேறே அதைப் போய்ப் பாடம் பண்ணித் தொலைச்சயா?

வேங்க: ஏன் கூடாது ? பாட்டு அழகாய்த்தானே இருக்கு? அவர் சொல்றதைக் காதிலே போட்டுக் கொள் ளாதே, சாரங்கா. வெயில் வந்துடுத்து; உனக்குக் கோயில்லே வேலை இருக்கும் ; நீ போ.

சாரங்க: போகவா சொல்றக ? நான் இருக்கிறது இடைஞ்சலாய் இருக்கா?

**வேங்க :** சே, சே, அப்படியெல்லாம் எதுவும் இல்லே. நீ நம்ப பையன். பகவானுடைய கைங்கர்யம் தடைப் படப் படாது, பாரு. அதுக்காகச் சொன்னேன். நீ போய் வேலையைப் பாரு. கொள்ளிடக்கரை வரையிலும் போய், தசாவதாரச் சந்நிதி கைங்கரியத்தைப் பார்த்துட்டு நாங்கள் நொடியிலே வந்துடறோம்.

**சாரங்க :** சரி, அப்போ அடியேன் வரேன்.

> **"தேன்உலாம் துளவ மாலைச்**
> **சென்னியாய் என்பர் ஆகில்."**

[மெல்லப் பாடிக்கொண்டே போகிறான்.]

**வரத :** ஒரு வழியாய்ப் போயிட்டான். வேங்கடாத்ரி ஸ்வாமி, இந்த மடையனைக் கட்டிக்கொண்டு ஏன் அழறீர்?

**வேங்க :** உஸ்! இரைந்து பேசாதேயும். அவனுக்கும் தெரியாமல், அங்கே பாஷ்யகாரர் மடத்திலே நடக்கிற விஷயங்களை அவன் மூலமாய்த் தெரிஞ்சுக்கவே, அவனை வச்சுண்டிருக்கேன். நீர் என்னடான்னா, அவனைக் குத்திக் கிளறிவிடுறீர்.

**வரத :** வேணும்னுதானே அப்படிச் செய்தேன்? அப்போதுதானே அவன் மனசு நமக்குத் தெரியும்! சரி, இப்போ தேவரீர் என்ன சொல்றது?

**வேங்க :** உறங்காவில்லியை ஒழித்துக் கட்டணும். அது சுலபம். இப்போது அவன் ஒருவர் வழிக்கும் போற தில்லையாம். யார் எது செய்தாலும் 'நாராயணா'ன்னு சொல்லுவதைத் தவிர, இப்படி அப்படி அசையறதில்லை யாம்.

**வரத :** இந்தப் பெண்டாட்டிப் பித்தன் எப்படி, ஸ்வாமி, இப்படி மாறினான்? அதுவே ஒரு ஏமாத்தோன்னு தோணறது. அவன் பெண்டாட்டியை ஸ்வாமி பார்த் திருக்கோ? ரதின்னா ரதி, ஸ்வாமி, அப்ஸரஸ்! தேவ கன்னிகை! மின்னற் கொடி! அடாடாடாடா, என்ன அழகு என்ன அழகு! எப்படித்தான் இந்தப் பயல் அவளை விட்டு வந்தானோ? இப்போ, அவள் வீட்டுப் பக்கமேகூடப் போற

தில்லையாம். அவள் இளைச்சுத் துரும்பாய் இருக்காளாம், பாவம் !

**வேங்க :** என்ன ஸ்வாமி, இவ்வளவு இரக்கம்? இளமை திரும்பிடுத்தா என்ன? உறையூரிலே இவனுக்கு விரோதிகள் உண்டு நாச்சியார் கோவில் அர்ச்சகர் மூலமாய் நாலைந்து பேரை ஏற்பாடு செய்து இருக்கேன். இன்றைக்கு அமாவாசை. பொழுது சாய்ந்தவுடனே, திருமஞ்சனக் காவேரிப் பக்கமாய் இருப்போம். அவன் வழக்கம் போலே, அங்கே வருவான். அப்புறம என்ன? மர்த்தனந்தான். அதுதான் பரம ஔஷதம். அப்போதுதான் அந்தப் பயல் வழிக்கு வருவான்.

**வரத :** அதெல்லாம் வேண்டாம், ஸ்வாமி. நமக்கேன் இந்த வமபெல்லாம் ?

**வேங்க :** ஓய், ஓங்கிப் பேசினதெல்லாம் நீர். இப்போ பின்வாங்கப் பார்க்கிறதோ ? சாயங்காலம் நீர் மாத்திரம் வரல்லே, அப்புறம் என்மேலே குற்றம் சொல்லாதேயும். உம்ம வண்டவாளமெல்லாம் வெளியாயிடும் கெட்டுப் போன, பெரிய பெருமாள் சந்நிதி வெள்ளி வட்டில் எங்கே இருக்குன்னு அடியேனுக்குத் தெரியும்.

**வரத :** இரைஞ்சு பேசாதேயும். நான் வரேன். வந்துடறேன, ஸ்வாமி, வந்துடறேன். ஆனால், அந்த உறங்காவில்லியை நினைச்சாலே பயமாய் இருக்கு. அவன் ஒண்ணும் செய்யமாட்டானே!

**வேங்க :** அட, பிராமணு, இப்போதே நடுங்கறீரே! பயப்படாதேயும், அதுக்கெல்லாம் ஆள் வைச்சிருக்கேன். அவன் இப்போ கொடுக்கில்லாத தேள். ஊரை விட்டு ஓடப் போருன், பாருமே! இல்லாவிட்டால் இவன் பேர் வேங்கடாத்திரி இல்லை. ஊரையெல்லாம் ஒரு மாதிரி சரி பண்ணி வச்சிருக்கேன். பாஷ்யகாரர் மடத்தைப் புதுப்பிக்கணும்னு தொடங்கிஞர். அப்படியே அமுக்கிப் போட்டேன். ஊரிலே ஒரு காசு கூடப் பிரியாது. பணம் வேணும்னு உறங்காவில்லி தாஸன் கொடுக்கட்டுமே.

**வரத :** *சரி, சரி, நாழிகை ஆயிடுத்து.* **போவோம், போவோம்.** *கோயிற்காலம் காத்துக்கிடக்கும் ரங்க ராஜா, ரங்கராஜா!*

**வேங்க** *அடி சக்கை, ஆஷாடபூதிக்கு ஆயிரம் சொர்க் கம். வாரும், போகலாம்.* (போகிறார்கள்.)

[ சாரங்க நம்பி வருகிறான்.]

**சாரங்க :** *அட, பாவிகளா! இப்படியா சூழ்ச்சி! ஒண் ணும் தெரியாத மடையன்னு இந்தச் சாரங்க நம்பியை எண்ணி யிருக்கேளா? இருங்கோ, இருங்கோ. இப்பவே. கிடாம்பியாச்சான் ஸ்வாமியிடம் போய்ச்சொல்லி, உங்கள் வாலை நறுக்க வழி செய்யறேன்.*

"பஜரே யதிராஜம - மானஸ
பஜரே யதிராஜம ."
[பாடிகொண்டே போகிறான ]

## இரண்டாம் காட்சி

*[ மறுநாள் விடியற்காலை. பொழுது புலர நாலைந்து நாழிகை இருக்கும்.*

*திருவரங்கத்தில், ஸ்ரீ இராமாநுஜர் மடத்தில், இரண் டாம் கட்டில் ஒரு கூடம். பின்புறச் சுவரில், உயரத்தில் இருக்கும் அகன்ற சாளரத்தின் வழியே இருண்ட பின்மாலை இரவு வானமும், பளிச்சிடும் நட்சத்திரங்களும் தென்படு கின்றன. வலக் கோடியில், சுவருக்கு முன்னே, நாலைந்த டி தூரத்தில், திருப்பாணழ்வார் சிலையொன்று நிற்கிறது. அதன் முன் உள்ள பெரிய குத்துவிளக்கின் சுடர் நின் றெரிந்து தரும் ஒளியே கூடம் முழுவதும் நிரம்பியுள்ளது. இடப் புறம், சுவரிலிருந்து குறுக்கே கரும்பச்சைத் திரை. திரையின் மத்தியில் சக்கரப் பொறியின் வடிவம் பெரி தாகத் தீட்டப் பெற்றிருக்கிறது இடப் புறத்தில் திரைக்கு முன்னால் அமர்ந்து, முதலியாண்டான் பாடிக்கொண்டிருக் கிறார். சொற்களை நிறுத்தி நிறுத்தித் தெளிவாகப் பாடு கிறார்.*

திரை எழுவதற்கு முன், பாதிப் பாடலுக்குமேல் ஆகி விடுகிறது. பாடல் முடியும்போது, இடப் புறமிருந்து இராமநுஜர் வருகிறார்.]

முதலியாண்டான் :

" வங்தெங்கும் கோழி
  அழைத்தனகாண் மாதவிப்
பந்தல்மேற் பல்கால்
  குயிலினங்கள் கூவினகாண்.
பந்தார் விரலி உன்
  மைத்துனன் பேர்பாட,
செந்தாமரைக் கையால்
  சீரார் வளையொலிப்ப
வந்து திறவாய்
  மகிழ்ந்தேலோ ரெம்பாவாய்."

இராமாநுஜர் : தாசரதீ!

முதலியாண்டான் : அடியேன் (எழுந்து வணங்குகிறார்.)

இராமா : கிடாம்பியாச்சான் வந்துவிட்டாரா ?

முதலி : இன்னும் வரவில்லை, ஸ்வாமி.

இராமா : எங்கே போயிருப்பார் ? இப்படி அவர் ஒருநாளும் போனதில்லையே ! உறங்காவில்லி எங்கே ? அவரையும் காணோமே !

முதலி : ஆமாம். நேற்றுக் காலையிலிருந்து அவரையும் காணோம். காவேரியிலிருந்து தேவரீர் மடத்துக்கு எழுந்தருளிய பிறகு, அவரும் அந்தர்த்தானமாகிவிட்டார். உறங்காவில்லி அல்லவா? எங்கேயாவது உறங்கிக்கொண்டிருப்பார்.

இராமா : தாசரதீ, என்ன சொல்கிறீர் ?

முதலி : ஒன்றும் இல்லை, ஸ்வாமி.

இராமா : ஒன்றும் இல்லையா ? எல்லாம் இருக்கிறது என்பதல்லவா வேதமும் அருளி, செயலும் காட்டுகின்ற சித்தாந்தம்? அவன் இருக்கிறான். அவனுடைய நியமனப்

படி எல்லாம் இருக்கின்றன. உமக்கு உள்ள செல்வமும், உயர்குடிப் பிறப்பும் நிகரற்ற சாஸ்திர ஞானமும் அவனுடைய நியமனந்தான். நான் மறக்கவில்லை.

முதலி : மன்னித்தருள வேண்டும். ஒன்றும் தவருக...

இராமா : இல்லை, தவருகச் சொல்லவில்லை. உயிரின் உள்ளே முளைத்தெழுந்து அவனை மறைக்கின்ற அகங்காரத் திரையும் அவனுடைய அலகிலா மாமாயத்தின் ஒரு வீச்சுத் தான். யானை, வெறும் யானை, ஐந்தறிவுடைய மிருகம், அதற்குப் பணம் உண்டா, பகுத்தறிவு உண்டா, உம்மைப் போல் வேதியர் குலத்தில் உதித்ததா, வேதாத்யயனம் செய்ததா? இல்லையே! ஆனல் பகவான் அந்த யானைக்கு அருளியதை அல்லவா பெரியாழ்வார எண்ணுகிருர்?

“ஒப்பிலேனுகிலும் நின்னடைந்தேன்
ஆனைக்கு நீ அருள் செய்தமையால்!”

ஒப்பிலேன் என்று பெரியாழ்வார் தம்மைக் கூறிக்கொண் டால் நாம் எம்மட்டு? லோக சாரங்க முனிவர் திருப்பா ணாழ்வாரைத் தோளிலே தூக்கிச் சென்ருர்? நாம் நெஞ்சி லேயே தூக்கிச் செல்லவேண்டும். அகங்காரம் அழிவதற்கு அது துணை செய்யும்

முதலி : தேவரீரிடத்தில் உள்ள அன்பு என்னை என்ன வெல்லாமோ எண்ண வைக்கிறது. என் நெஞ்சிலே உள்ள வேதனையில் என்ன பேசுகிறேன் என்று தெரியவில்லை பொறுத்தருள வேண்டும்.

இராமா : அப்படி என்ன வேதனை உமக்கு?

முதலி : இன்று காலை விசுவரூப சேவைக்கு நம்மால் போக முடியாது.

இராமா : அப்படியா? பகவானுடைய நியமனம் அதுவானல், அதை ஏற்றுக்கொள்ளத்தான் வேண்டும். தன்னைவிட்டுப் பிரித்து, பரதாழ்வானையே எம்பிரான் நிறுத்தினன். அவன் கருணை கொடுமையாகவும் செயற் படும். ஆமாம், ஏன் விசுவரூப சேவைக்கு நம்மால் போக முடியாது?

**முதலி :** அர்ச்சகர்கள் வேங்கடாத்ரியும் வரதராகவா சாரியாரும் - கோயிலில் உள்ள கைங்கர்யபரர்கள்-எல்லோ ரையும் கட்டுப்பாடு செய்து வைத்திருக்கிறார்கள்.

**இராமா :** என்ன கட்டுப்பாடு ?

**முதலி :** மடத்திலிருந்து யாராவது கோயிலுக்குப் போனால், விசுவரூப சேவை நடைபெறாதாம். அர்ச்சகர்கள் எல்லோரும் உடனே கோயிலை விட்டுப் போய்விடுவார் களாம்.

**இராமா :** எதற்காக?

**முதலி :** இங்கே, இந்த மடத்தில், ஸநாதன தர்மத்தை குழி வெட்டிப் புதைக்கும் முயற்சி நடக்கிறதாம். யக்ஞோ பவீதம் சாத்தாதவர்களுக்கும், வர்ண எல்லைக்குள் அடை படாத குலத்தவர்க்கும் இங்கே நாம் இடம் கொடுக்கிறோ மாம். பிராம்மண சமூகத்தின் பேரில் ஏவி விடுகிறோமாம். திருவரங்கம் ஊர் முழுவதும் இதே பேச்சுத்தான்.

**இராமா :** யார் பிராம்மணன்? நீரா, நானா, திருக்கச்சி நம்பியா ? சாத்தாதவர்கள் மனிதர்கள் அல்லவா ? அவர் களை ஒதுக்கிவைக்க நமக்கு அதிகாரம் ஏது? ஒதுக்கி வைத் தால் அவர்களை மிருகங்களாக்க நாமே வழி செய்கிறோம். குறுகிய தன்னலம் அது; அகங்காரம் அது. உயர் குலம் என்று பேசப்படுகிறதே, அது, அப்போதுதான் தாழ்கிறது. ஒரு குலந்தான் உண்டு; தொண்டர் குலம், அடியவர் குலம், அதுவே மனித குலம்.

**முதலி :** அது அவர்களுக்குத் தெரியவில்லை நமது மடத்தில் உள்ளவர்களுக்குக்கூட......

**இராமா :** அவர்களும் இந்த அஞ்ஞானத்திற்கு அடிமை யாகி விட்டார்கள் என்றா சொல்கிறீர் ? அப்போது இந்த ஏழையின் பேரில், பரம காருணிகனான பகவானுக்குக் கருணை இல்லை என்றுதான் முடிவு செய்ய வேண்டும். வேறு யாரை நொந்துகொள்வது ?

**முதலி :** மடத்திலே உள்ளவர்கள் தங்கள் பரிவட்டங் களை வழக்கம்போல் கொடியிலே உலர்த்தி இருந்தார்கள்.

நேற்று மாலையில் அவை ஒன்றையும் காணோம். நேற்று சாயங்காலத்திலிருந்து உறங்காவில்லி தாஸரையும் காணோம் அவர்தாம் பரிவட்டங்களை எடுத்துப் போயிருக்க வேண்டும் என்று எல்லோரும் சொல்கிறார்கள்.

இராமா · நீர் என்ன எண்ணுகிறீர்?

முதலி அடியேன் தனிப்பட்ட முறையில் எண்ணுவதற்கு உரிமை ஏது? தேவரீரே உறங்காவில்லி தாஸரை விட அடியேனைக் குறைந்தவனாக எண்ணும்போது..

இராமா அப்படியா எண்ணுகிறேன்...

முதலி: அடியேன் ஒன்றும் சொல்லவில்லை. ஊர் முழுதுமே அப்படித்தான் முடிவு கட்டியிருககிறது. தீர்த்தமாடப் போகுமபோது, அடியேன்பேரில் சாய்ந்துகொண்டு தேவரீர் எழுநதருளுவது அடியேனுடைய பாக்யம். ஆனால், தீர்த்தமாடிப் பரிசுத்தமாகத் திரும்பும்போது, உறங்காவில்லி தாஸரின் பேரில் தேவரீர் சாய்ந்துகொண்டு வருவது பொருந்தாது என்று உலகம் எண்ணுகிறது.

இராமா. தாசரதீ, நீரும் அப்படி எண்ணுகிறீர். இல்லாவிட்டால் உலகம் எதைச் சொன்னாலும், நீர் அதைப் பற்றிக் கவலைப்பட மாட்டீர். இதைக் கேளும். உம்மைத் தொட்டால் என்னுடைய ஆசையெல்லாம் விலகுவது போல் உணர்ச்சி ஏற்படுகிறது. ஆகவேதான், காவேரிக்குப் போகும்போது உம்மைப் பிடித்துக்கொண்டு போகிறேன.

முதலி · ஸ்வாமி, ஸ்வாமி!

இராமா · ஆமாம், தாசரதீ, உண்மையைச் சொல்கிறேன். பணம், வீடு, வாசல், புலமை, அனைத்தையும் ஒதுக்கி வைத்து, இவனோடு சுற்றுகின்ற உம் தியாகத்தைப் பார்த்தாவது ஆசையை விலக்க நான் பழக வேண்டாமா? காவேரியிலிருந்து திரும்பும்போது, உறங்காவில்லியின் பேரில் சாய்ந்து, என் அகங்காரத்தைச் சாய்க்கிறேன். இந்தக் கிழவன், அதையும் செய்யப்படாதா? காலன் வந்து அழிப்பதற்கு முன்பே, நான் என்ற பேய் இவனை அழித்து வருகிறது. அதை இவன் விரட்டப்படாதா?

**முதலி :** *(கண்களில் நீர் தளும்ப) தேவரீரே எங்களுக்கு எல்லாம். ஏதோ பிதற்றும் இந்த ஏழையைப் பொறுத் தருள வேணும்.*

**இராமா :** *கவலைப்படாதேயும். நம் இருவரையும், பக வானுடைய கருணை அணைத்துக்கொள்ளும், காப்பாற்றும். ஆனால், அந்த அலகிலாக் கருணையில் உறங்கா வில்லிக்கும் இடம் உண்டு. சராசரம் அனைத்துக்கும் இடம் உண்டு. காப்பும் உண்டு.*

**வெளியிலிருந்து ஒரு குரல் :** *ஸ்வாமி, உள்ளே வர லாமா?*

**முதலி :** *கூரேசர் வருகிறார்.*

**இராமா :** *வாரும், கூரேசரே, வாரும்*

*[கூரத்தாழ்வார் வருகிறார்; கீழே விழுந்து வணங்குகிறார் ]*

*எழுந்திரும், எழுந்திரும், நாராயண, நாராயண! காவேரிக்குப் புறப்படுவோம் தாசரதீ, வாரும். இன்று போகும் போதும் வரும்போதும் நீரே எனக்கு ஆதரவு. உறங்காவில்லியைத்தான் காணோமே !*

**கூரத்தாழ்வான் :** *அதைத்தான் விண்ணப்பம் செய்ய வந்தேன். உறங்காவில்லியின் மனைவி ஹேமாம்பா வந் திருக்கிறார். ஸ்வாமியை உடனே காண வேண்டுமாம்.*

**இராமா :** *அப்படியா, உடனே வரச்சொல்லும். இல்லை, தாசரதீ, நீர் போய் அழைத்து வாரும்.*

*[முதலியாண்டான் போகிறார் ]*

**கூரத் :** *ஸ்வாமிக்குத் தெரிவிக்க வேண்டாம் என்று நினைத்தேன். ஆனால், மனம் கேட்கவில்லை. பரிவட்டம் காணோமென்று, இங்கே உள்ள ஸ்ரீவைஷ்ணவ சிகாமணிகள் பாடிய பாட்டும் ஆடிய ஆட்டமும் சகிககமுடியவில்லை. அத்தனை பேரும் உறங்காவில்லியையும் கிடாம்பியாச்சானை யும் பேசிய பேச்சுக் காதாலே கேட்கமுடியவில்லை*

**இராமா :** *கிடாம்பியாச்சானையும் சேர்த்துக்கொண்டு விட்டார்களா ? அப்போது இவனையும் சேர்த்துக்கொள்ள வேண்டாமா ?*

கூரத்: அது அடுத்தபடி. செய்தாலும் செய்வார்கள். அவர்கள் என்ன சொன்னார்கள் தெரியுமா? கள்ளுக்குடத்தில் காவேரி தீர்த்தத்தை விட்டால், கள்ளுக்குடம் சுத்தமாகாதாம். காவேரி தீர்த்தத்திற்குத்தான் கள் வாசனை வந்து சேருமாம்.

இராமா: எது கள்ளுக்குடம், எது காவேரி தீர்த்தம் என்பதில்தான அவர்களுககு மயக்கம். அது தெளிந்து விடும். நம்மைப் புனிதமாக்கவல்ல பகவானுடைய கருணை வெள்ளமே உறங்காவில்லி என்பது, விரைவில் அவாகளுக்கு தெரியப்போகிறது.

கூரத் அடியேனுக்கு அவ்வளவு நம்பிக்கை இல்லை. ஊரிலும் பலபடியாக எதிர்ப்பும வசையும் உருவாகி வருவதாகத் தெரிகிறது உறங்காவில்லியை, கொஞ்ச நாளைக்கு திருவரங்கத்தை விட்டு, எங்கேயாவது போய் இருக்கச் சொல்லலாம் என்று தோன்றுகிறது.

இராமா திருவரங்கத்தை விட்டா போகச் சொல்ல வேண்டும்? இந்த உலகமே திருவரங்கம்தானே? அது பகவானுக்குச் சொந்தம். யாரை எங்கே போகச் சொல்வது? போகச் சொல்ல இவனுக்கு உரிமை இல்லை. இருக்கிறது என்றாலும், சொன்னால் அதைவிடப் பயங்கரமான பாவம் இல்லை. கூரேசா, இதை நன்றாகத் தெரிந்து கொள்ளும். இவனுடைய நெஞ்சு வெடித்துவிடும். உமக்குத் தெரியுமா, விசுவரூப சேவைக்கு நாம் இன்று போக முடியாதென்று?

கூரத் : இது என்ன கூத்து?

இராமா : நீர் சொன்னதுதான், ஊரிலே எதிர்ப்பு; அர்ச்சகர்கள் செய்திருக்கும் கட்டுப்பாடு.

கூரத் : அவ்வளவு ஆணவமா இந்தப் பயல்களுக்கு? அதையுந்தான் பார்த்துவிடுவோம். ஸ்வாமி, காவேரிக்கு எழுந்தருளத் திருவுள்ளம் பற்ற வேணும். நேரமாகிவிட்டது. விசுவரூப சேவைக்குத் தேவரீர் எழுந்தருளியே ஆக வேணடும். யார் தடுக்கிறார்கள், பார்ப்போம். தேவரீருக்கு அங்கே இடமில்லையென்றால், பகவானே பைந்நாகப் பாய் சுருட்டிக்கொண்டு திருவரங்கத்தை விட்டுப் போய்விடு

வானே! அட, பாவிகளா! உங்கள் கொட்டத்தை அடக்கா விட்டால் இந்தக் கூரத்தான் இருந்தும் பயனென்ன? ஸ்வாமி, உடனே புறப்படக் கிருபை செய்யவேணும்.

**இராமா :** இரும், இதோ முதலியாண்டான் வருகிருர்.

*[முதலியாண்டானும் ஹேமாம்பாளும் வருகிருர்கள். ஹேமாம்பாள் கீழே விழுந்து வணங்குகிருள் ]*

நாராயண, நாராயண ! வா, அம்மா. உன்னை அடையாளமே தெரியவில்லையே ! ஏன், இப்படி இளைத்துப் போனுய்?

**ஹேமாம்பாள்:** (கம்மிய குரலில்) ஸ்வாமி..

**இராமா:** என்ன அம்மா, உனக்கு? இந்தப் பின் மாலை இருட்டிலே தனியாக வந்திருக்கிருய்? அப்படிச் செய்யலாமா? என்ன குறை அம்மா, உனக்கு?

**ஹேமாம்:** மிச்சத்தையும் கொண்டு வந்துவிட்டேன். இதோ இருக்கிறது. ஏற்றுக் கொள்ளுங்கள். அவரை... அவரை மாத்திரம் எனக்குத் தந்துவிடுங்கள்.

*[இராமாநுஜர் முன் சிறு பொட்டலம் ஒன்றை வைத்துவிட்டுக் கை கூப்புகின்றுள்.]*

**இராமா :** என்ன அம்மா இது? இது என்ன பொட்டலம்? மிச்சம் என்கிருயே, எதனுடைய மிச்சம்?

**ஹேமாம் :** ஸ்வாமிக்குத் தெரியாதா? மிச்சந்தான்; என் அசட்டுத்தனத்தின் மிச்சந்தான்; அவருடைய அன்பின் கடைசி அடையாளம். என்னிடம் வேருென்றும் இல்லை, ஸ்வாமி, வேருென்றும் இலலை. ஒரு நாள் அவர் விரும்பிப் பாராட்டிய இந்த உடம்பு நைந்து சுருங்கி விட்டது. உள்ளமோ, வறண்டு வறண்டு ... எனக்கு ஒன்றுமே தெரியவில்லை. *[ அழுகிருள் ]*

**இராமா :** அழாதே, அம்மா. கூரேசரே, இந்தப் பொட்டலத்தைப் பிரித்துப் பாரும்.

*[ கூரத்தாழ்வான் பொட்டலத்தை எடுத்துப் பிரிக்கிருர்.]*

ஏன் அழுகிறாய், அம்மா! அழாதே. உயிர்களின் கண்ணீரைத் துடைக்கும் தாய் ஜகந்நாயகி உனக்குக் கிருபை செய்வாள்.

**கூரத் :** ஸ்வாமி, கடாட்சிக்க வேணும். பொட்டலத்தில் நகைகள், வைரம், சிவப்பு முதலிய நவமணிகள் பதித்த நகைகள்

**இராமா** நகைகளா? உன்னுடைய நகைகளா, அம்மா?

**ஹேமாம்** · என்னுடையதில்லை ஸ்வாமி, அவருடையது. அந்தக் காலத்தில் அவர் தந்த நகைகள். நகைகள் எனக்கு வேண்டாம் அந்தக் காலத்தை மட்டும் திருப்பி எனக்குத் தந்துவிடுங்கள்

**இராமா** போன காலத்தைத் திரும்பியும் பெறவேண்டும் என்று ஆசைப்படுகிறாய்?

[ ஹேமாம்பாள் 'ஆம்' என்று குனிந்த தலையை அசைக்கிறாள் ]

ஆனால், அப்போது, அதை நீ விரும்பியதாக நினைவில்லையே! உறங்காவில்லியின் அன்பு உனக்கு அவமானமாக இருந்ததாக அல்லவா தோன்றியது? ஊரெல்லாம் அதைப்பார்த்துச் சிரித்ததை உன்னால் அப்போது பொறுக்க முடியவில்லையே! நீ போகுமிடமெல்லாம் கூடவே வந்து உன்னைத் தெய்வமாக வழிபட்டான் உன் கணவன். அதை வேண்டாமென்று ஒதுக்கினாய்.

**ஹேமாம்**· நான் ஒரு மனிதப் பெண்; என்னால் தெய்வமாக இருக்க முடியவில்லை.

**இராமா:** ஆனால், நீ தெய்வமாக மாறமுடியும் அம்மா, மாறி வருகிறாய்

**ஹேமாம்:** இப்போது பிணமாகத்தான் மாறி வருகிறேன. வெள்ளத்தில் அழுகிய பயிர், இப்போது தண்ணீரே இல்லாமல் சாகிறது. ஸ்வாமி, இது தேவரீருக்குத் தெரியவில்லையா?

**இராமா:** தெரிகிறது, அம்மா. இப்போதுதான் தெரிகிறது. உறங்காவில்லி உன்னை முழுவதும புறககணித்து வந்திருககும் செயதி இப்போதுதான் தெரிகிறது. 'பரநதாமா, உயிாகளை வாடடுவதுதான உனது விளையாட்டா!' ஆனால், குழந்தாய், இந்த நகைகள் எதற்கு?

**ஹேமாம்:** அவரிடம் சேர்ப்பித்துவிட வேண்டும்.

**இராமா:** உறங்காவில்லியிடமா? எதற்காக?

**ஹேமாம:** அவர் இவற்றை விரும்புகிறார்.

**இராமா:** உறங்காவில்லி நகைகளை விரும்புகிறாரா? உன்னையே வேண்டாம் என்று ஒதுக்கிய அவர் நகைகளின் பேரில் ஆசை வைததிருக்கிறார் என்றா சொல்கிறாய்?

**ஹேமாம்:** ஆம், அதை எப்படிச் சொல்வேன்? இங்கே...

**இராமா:** இங்கே யாரும் இல்லை. தாசரதியும் கூரேசரும் உன்னுடைய சகோதரர்கள், அம்மா; என்னைவிட உறங்காவில்லியுடன் அன்பு பூண்டவர்கள.

**முதலி:** ஸவாமி, ஸ்வாமி

**கூரத்:** என்னை என்ன சித்திரவதை செய்தாலும் தகும்...

**இராமா:** தகுதியை எண்ணினால் பகவானுடைய கருணை நமக்கு ஏது? ஆனால் நான் சொன்னது உண்மை. நீங்கள் இருவருமே என்னைவிட உறங்காவில்லியிடம் அன்புடையவர்கள். ஒளியும் நிழலும், குறையும் குணமும் நிழலாடும் இங்கேதான் அன்புக்கு இடமுண்டு. தழைக்கின்ற உள்ளத்தில்தான் அன்பு என்ற மலர் பூக்கும். இந்த ஸந்நியாஸியின உலர்ந்த நெஞ்சிலே அதற்கு இடமேது? பேசு அம்மா, இவர்கள் இருந்தால் குற்றமில்லை.

**ஹேமாம்:** நேற்று இரவு வந்ததும், அவர் வீட்டுக்கு வந்தார். நான்...நான்...வருவாரா என்ற வேதனையில் வற்றிப்போய் வெறும் மண்ணாய்க் கிடந்தேன். அவருடைய காலடிச் சத்தம் கேட்டதும் ஆனந்தத்தில் விம்மி...என்னால்

பேச முடியவில்லை, ஸ்வாமி. உறங்குவதுபோல் அப்படியே கிடந்தேன்.

**இராமா:** ஏன், அம்மா, எழுந்து அவரை வரவேற்க வில்லையா?

**ஹேமாம்:** ஏன் வருகிறார், ஏன் வருகிறார், இத்தனை நாளைக்குத் திரும்பியும் பாராமல் இருந்தவர் இப்போது என் அழகு வாடியபிறகு, ஏன் வருகிறார் என்று என் நெஞ்சு துடித்தது வேங்கடாத்ரி ஸ்வாமி சொன்னது உண்மை யாக இருக்குமோ என்று கலங்கிப் போனேன். அப்படியே இருந்தால்...

**இராமா:** எப்படியாய் இருந்தால்...? வேங்கடாத்ரி — பெரிய கோயில் அர்ச்சகர்தானே? அவர் என்ன சொன்னார்?

**ஹேமாம்:** அதை எப்படிச் சொல்வேன், ஸ்வாமி?

**இராமா** வேங்கடாத்ரி ஸ்வாமி என்ன சொன்னார், அம்மா?

**ஹேமாம்:** சொல்லக் கூசுகிறது, வேறு யாரோ ஒருத்தியிடம்...... [அழுகிறாள்.]

**இராமா** (சிரித்து) யார், உறங்காவில்லியா? அரங்கனைக் கண்ட கண்கள் மற்றொன்றினைக் காணுமா? பதறாதே, குழந்தாய், நீ நினைப்பதுபோல் ஒரு நாளும் இராது.

**ஹேமாம்:** பின் ஏன் எனக்குத் தெரியாதென்று நினைத்துக்கொண்டு என் நகைகளைக் கழற்றினார்? எனக்கு உடம்பு வெலவெலத்துப் போய்விட்டது. ஆனாலும், அவர் தந்தது அவர் எடுத்துக் கொள்கிறார் என்று இருந்தேன். அவர் கேட்டிருந்தால் அத்தனையும் கொடுத்திருப்பேன். யாருக்கு வேண்டும் இந்த நகைகள்? எனக்கு என் தெய்வந்தான் வேண்டும்; அவருடைய அன்புதான்வேண்டும். ஏன் ஸ்வாமி அவரை என்னிடமிருந்து பிரித்தீர்கள்? இவ்வளவு நரகவேதனைக்கும் நீங்களே காரணம். நான் அழகாய் இருந்தது குற்றமா? அவர் என்னிடம் அன்பாய் இருந்ததுதான் குற்றமா? ஐயோ! என்னால் தாங்க முடியவில்லையே! ஏன் இநதப் பெண்ணின் பாவத்தை எல்லோருமாகச்சேர்ந்து கொட்டிக் கொண்டீர்கள்? ஏன், ஏன், ஏன்?

**முதலி:** அம்மா, என்ன பேசுகிறீர், யாரிடம் பேசுகிறீர் என்று தெரியாமல் வாய்க்கு வந்ததை...

**இராமா:** தாசரதீ, பேசாமல் இரும். குறுக்கிடாதேயும். இந்தக் குழந்தை தன் மனம்விட்டுப் பேசட்டும்.

**ஹேமாம்:** ஏன், பேசப்படாது? நன்றாய்ப் பேசுவேன். உங்களுக்கென்ன, ஸந்நியாஸி, வயதாகி விட்டது. அவர் என் பேரில் வைத்திருந்த ஆசை உங்களுக்குத் தெரியுமா? ஐயோ! எனக்கு இதுவும் வேண்டும், இன்னமும் வேண்டும். அப்போது ஊரார் சிரிக்கிறார்களே என்று அவருடைய அன்பை அவமானமாக எண்ணினேன. ஆயிரம மலலர்களை வெற்றி கண்ட அவர், எனக்குத் தெருவிலே குடை பிடித்தார்; எனக்கு வெட்கம் பிடுங்கித் தின்றது. அவர் தமது அன்பைக் காட்டக் கூசவேயில்லை. எனக்குத்தான் வெட்கமாய் இருந்தது. வெட்கம் கெட்ட இந்தக் கட்டைக்குத் தான் வெட்கமாய் இருந்தது. இப்படியும் உண்டா, அன்பை மனத்திற்குள் வைத்துக் கொள்ளப் படாதா, ஊர்க் காக்கைகள் கொத்தும்படி நடந்து கொள்கிறாரே என்று குன்றினேன். அந்த அன்பைத் தாங்கமுடியாமல் அதை ஒதுக்கப் பார்த்தேன். ஆமாம், இறுமாப்போடு அதை ஒதுக்கினேன். எப்படித் தாங்க முடியும? தெய்வத்தின் அன்பை எப்படித் தாங்க முடியும்? இப்போது என் தெய்வம் என்னைக் கை விட்டுவிட்டது. உலகததிற்கெல்லாம் தெய்வத்தை நீங்கள் காட்டுகிறீர்களாம். எல்லோரும் சொல்கிறார்கள். எனக்கு மட்டும் இந்தக் கொடுமையை ஏன் செய்தீர்கள்? என் தெய்வத்தை எனக்குக் காட்டுங்களேன்· எனக்குத் திருப்பித் தந்து விடுங்களேன். [அழுகிறாள்]

**இராமா:** குழந்தாய், அழாதே. அழாதே, அம்மா. எடுத்துக் கொள்வதற்கும் தருவதறகும் அதிகாரம எம்பெருமானுக்குத்தான் உண்டு. அவன் அருளாளன். இவனுக்குத் தான உன் பேரில் இரக்கம் இல்லை என்று எண்ணுகிறாய். அவனுக்கும் இரக்கம் இல்லாமலா போய்விடும்? உன் கணவனைத் தெய்வமென்று எண்ணுவதாகச் சொன்னாயே!

**ஹேமாம்:** ஆமாம், அவரே என் தெய்வம், உடைந்து போன இந்த உடலும் உள்ளமும் அவருடைய பொருள்கள்.

**இராமா:** அப்படியானல் தெய்வம் உன்னைக் கை விடாது. நம்பு குழந்தாய், நம்பு. இந்த நகைகள்...?

**ஹேமாம்:** அவருடைய பொருள், என்னையும் இந்த நகைகளையும் அவரிடம் சேர்த்து விடுங்கள். உங்களுக்குப் புண்ணியம் உண்டு, ஸ்வாமி.

**இராமா:** நகைகளைத்தான் உறங்காவில்லி எடுத்துக் கொண்டு போனதாகச் சொன்னயே!

**ஹேமாம்:** ஆமாம். நான் ஒருக்களித்துப் படுத்திருந் தேன். ஆடாமல், அசையாமல் தூங்குவது போல் இருந் தேன். ஒரு பக்கத்து நகைகளை மட்டும் எடுத்துக்கொண்டு அவர் மெல்ல, அடிமேல் அடிவைத்துப் போனர். நான் எழுந்துவிடுவேனே என்ற பயமா? ஏன், ஸ்வாமி, என்னிடம் பயமா? என் உயிரையே அவருக்குத் தருவேனே; என் னிடமா பயம்? அவருடைய போக்கு, வேங்கடாத்ரி ஸ்வாமி சொன்னது உண்மைதானே என்று என்னைத் திகைக்க வைத்தது அப்படியே இருக்கட்டும்; வேறொருத்தியிடம் அவருடைய மனம் சென்றால்தான் என்ன? அதையெல் லாம் கேட்க எனக்குச் சுதந்தரம் இல்லை. தெரிகிறது, நன்றாய்த் தெரிகிறது எனக்கு அவருடைய அன்புப் பிச்சை கிடைத்தால் போதும். இந்த நகைகள் அவர் எடுக்காமல் சென்ற நகைகள்; அவரிடம் சேர்த்துவிடுங்கள். என்னையும், இந்த ஏழையையும், அழகிழந்து, அவருடைய அன்பிழந்து தவிக்கும் இவளையும் அவர் திருவடியில் சேர்த்துவிடுங்கள். [அழுகிறுள்.]

**இராமா:** பெண்ணிற் பெருந்தக்க யாவுள? பெண்ணிற் பெருந்தக்க யாவுள? எம்பெருமானே, இந்தக் குழந்தையின் துயரத்தை என்னல் தாங்க முடியவில்லை. நாராயண, நாராயண!

**கூரத்:** ஸ்வாமி, உறங்காவில்லி வருகிறார்.

**இராமா:** அழைத்து வாரும், உடனே அழைத்து வாரும்.

**ஹேமாம்:** வருகிறாரா, வந்துவிட்டாரா? என்னை ஏற்பாரா? ஸ்வாமி, என்னை ஏற்பாரா?

**இராமா** ஏன் மாட்டார்? அவருடைய அன்புள்ளம் இப்போது எதையும் ஏற்கும். பதறாதே, குழந்தாய். இந்தத் திரைக்குப் பின்னால இரு, பிறகு வா.

[ஹேமாம்பாள் போகிறாள். மறுபுறத்திலிருந்து உறங்கா வில்லி வருகிறான். கம்பீரமான தோற்றம். திரண்ட தோள்கள், அகன்ற மார்பு. உடம்பிலும் உடையிலும் திட்டுத் திட்டாக இரத்தக் கறை. கண்ணிலே கலங்க மற்ற தெளிவு. உள்ளே வந்தவன் இராமாநுஜரைக் கீழே விழுந்து வணங்குகிறான்.]

**இராமா:** (பதற்றத்துடன்) எழுந்திரும், எழுந்திரும். உறங்காவில்லி, இது என்ன உடம்பெல்லாம் இரத்தக்கறை? யார் உம்மை என்ன செய்துவிட்டார்கள்? பகவானே, திருவரங்கா, இது என்ன சோதனை?

**உறங்காவில்லி:** ஒன்றும் இல்லை, ஸ்வாமி. தேவரீருடைய திருவடி நிழலை விட்டுப் போனேன். அதற்குக் கிடைத்த பரிசு. இனிப் போகமாட்டேன். அவர்கள் என்னைக் கொன்றாலும் இனிமேல் போகமாட்டேன்.

**இராமா:** அவர்கள் என்றால்? யார் அவர்கள்?

**உறங்கா:** யாரோ, இருட்டிலே முகம் நன்றாய்த் தெரியவில்லை.

**கூரத்:** அட, பாவிகளா! உறங்காவில்லி, உம்முடைய வலிமையெல்லாம் எங்கே போச்சு? அவர்கள் உம்மை வதைக்கும்படி விடலாமா? உறங்காவில்லி மல்லரை எதிர்க்க அவர்கள் எப்படித் துணிந்தார்கள்?

**முதலி:** துணிவா? கயமை என்று சொல்லும்.

**உறங்கா:** ஸ்வாமிக்குத் தெரியாததா? ஸ்வாமியின் ஆக்ஞைப்படி ஏதோ நடக்கப் பார்த்தேன்.

**இராமா:** என் ஆக்ஞையா?

**உறங்கா:** ஆம், ஸ்வாமி. அன்று தேவரீர் சாதிக்க வில்லையா: பகைமைக்கு பதில் பண்பு, ஹிம்ஸைக்குப் பதில் அன்பு, தீமைக்குப் பதில் பொறுமை என்று? யார் எந்தக் கொடுமை செய்தாலும், நாராயண என்று சொல்லி அவன்பேரில் பாரத்தைப் போட்டு அடங்கி இருக்க வேண்டும் என்று தேவரீர் சாதிக்கவில்லையா? அதன்படி இருந்து பார்த்தேன். இன்பமாகத்தான் இருக்கிறது.

**இராமா:** நாராயண, நாராயண. தாசரதீ, இப்போதாவது வைஷ்ணவன் யார் என்று தெரிகிறதா?

[முதலியாண்டான் தலைகவிழ்ந்து நிற்கிறார்.]

உடனே உறங்காவில்லியை அழைத்துச்சென்று, காயங்களுக்கு ஏதாவது மருந்து வைத்துக்கட்ட ஏற்பாடு செய்யும். நீரே மருந்து போட்டு உறங்காவில்லியின் உடம்பைத் தேற்ற வேணடும். ஆனால், நீரோ பிராம்மணோத்தமர்.

**முதலி:** (நிமிர்ந்து பார்த்து) மருந்து கட்டுகிறேன். ஆனால், இவனுடைய உள்ளத்திற்கு மருந்து உறங்காவில்லி தான் தரவேண்டும்.

[உறங்காவில்லியை வணங்குகிறார்.]

**இராமா:** எம்பெருமான் கருணை இருந்தபடி இது. உறங்காவில்லியின் உடம்பிலே கறையை உண்டாக்கி, நமது நெஞ்சிலே உள்ள கறையை துடைக்கிறான். உறங்காவில்லி, நீர் போம்.

**உறங்கா:** ஸ்வாமி, இவனுடைய நெஞ்சிலும் கறை இருக்கிறது.

**இராமா:** அரங்கனுடைய கருணை விழியிலே தோய்ந்து, அவன் அழகிலே கரைந்து நிற்கும் உம்முடைய நெஞ்சிலும் கறையா? இவனால் நம்ப முடியவில்லை.

**உறங்கா:** இன்று ஹேமாம்பாளைப் பார்த்தேன்.

**இராமா:** தினந்தோறும் பார்த்துக் கொண்டுதானே இருக்கிறீர்? இன்று என்ன புதிது?

**உறங்கா:** புதிதுதான், ஸ்வாமி. அன்று முதல், பெரிய பெருமாளைச் சேவித்த அன்று முதல், இன்று வரை நான் அவளைத் திரும்பிக்கூடப் பார்க்கவில்லை.

**இராமா:** ஏன் அப்படி? அவள் என்ன குற்றம் செய்தாள்?

**உறங்கா:** அழகாக இருந்ததுதான் அவளுடைய குற்றம். எனனுடைய நெஞ்சிலே பயம். அவளைப் பார்த்தால், மறுபடியும் அழிகின்ற உடலுக்கு ஆராதனை செய்யும் அவலம் வந்துவிடுமோ என்ற பயம்.

**இராமா:** அதற்காக ஓடப் பார்த்தீர்! ஓடுவதற்கு இடமேது? உலகத்தை விட்டு ஓடிப்போனாலும் உம்மை விட்டு எப்படி ஓடமுடியும்?

**உறங்கா:** அதைத் தெரிந்துகொண்டேன். அவளைப் பார்த்தேன். நான் பயந்தது சரியாய்ப் போச்சு. இந்தப் பாழ் நெஞ்சின் ஆசை வாடவில்லை. இந்த உடம்பில் இன்று பட்ட காயம் போதாது, ஸ்வாமி. இதன் குரங்கு மனமும் பரிபவப்பாட்டுககு ஏற்றபடி ஆடுகிறது. இரண்டையும் வெட்டி எறிய வேண்டும். வழிதான் தெரியவில்லை.

**இராமா:** புத்தருடைய சித்தாந்தம் அது. அது தவறு; சாத்தியமும் இல்லை. பாலைக்காய்ச்சி வற்றும்படி செய்துவிடலாம். அதைக கடலில் கொட்டி, பால் என்ற தத்துவம் இல்லாமல் செய்துவிடலாம். இரணடாவது வழிதான் சாத்தியமானது. நான சொல்வது சரிதானே, கூரேசரே?

**கூரத்:** இவனையா கேட்கிறீர்கள்? ஸ்வாமி, அன்று தேவரீர் சாதிக்க, அடியேன் ஸ்ரீபாஷ்யத்தை எழுதிவந்த போது செய்த அபசாரத்திற்கு இந்தத் தண்டனை வேண்டியதுதான். ஸ்வாமியின் கருத்தை மறுக்கத் துணிந்தேன் அல்லவா?

**இராமா:** *மறுத்ததால் அல்லவா சத்தியம் உதித்தது? இந்த ஜீவனுக்குச் சுதந்தரம் இல்லையென்று, அன்று நீர் குறிப்பிட்டதுதான் உண்மை உயிர் எப்போதும் அவனையே சார்நது நிற்கிறது. ஆகவேதான ஒன்றையும் ஒதுக்க வேண்டியதில்லை என்று சொல்லத் துணிகிறேன். இவன் அனறு எபபோதோ செயத தவற்றைத்தான் உறங்கா வில்லி இன்று செய்திருககிறார்.*

**உறங்கா:** *ஸ்வாமியும் தவறு செய்யக்கூடுமா? அது எப்படி முடியும்?*

**இராமா:** *தவறு செய்யாதவர்கள் இல்லை. அதனால்தான் பகவானைப் பரமகாருணிகன் என்று பேசுகிறோம். இவனுடைய கதை எதற்கு? பகவானுடைய சௌந்தர்யத்திலே ஈடுபட்டு, அவனுடைய கண்ணழகிலே மயங்கி, இந்த உலகததை ஒதுகக முற்பட்டார். ஒதுகக முடியவில்லையே எனறு பயந்தீர் இநத உலகமெங்கும் பரந்து வெள்ளமாகப் பொங்கும அழகுதானே அவனுடைய கணைகள்? அதை நீர் ஏன் உணரவில்லை? பிரபஞ்சமெல்லாம் அவனுடைய விசுவ ரூபம் அல்லவா? வெயிலும, நிலவும, மழையும், நீல வானமும், காயாம்பூவும், மனிதர் முகமும் அவனுடைய தாமரை விழியின் ஒளிதானே? ஹேமாம்பாளைக் கணடு நீர அஞ்ச வேண்டியதில்லை; கவலைப்பட வேண்டியதில்லை.*

**உறங்கா:** *கவலைப்படவில்லை; ஆனாலும், அடியேனுடைய நெஞ்சிலே ஆசை மூள்வானேன்? தீயாகச் சுடுவானேன்?*

**இராமா:** *அது சுடும் நெருப்பன்று; சுத்தப்படுத்தும் கனல. உடம்பின அழகைப் பார்ப்பதும உள்ளத்தின் அழகைப் பார்ப்பதும் ஒன்றுதான். இரண்டும் ஒரே சத்தியப் பொருளின் இரு புறங்கள். அழகு, அன்பு என்ற சிறகிரண்டையும் வெட்டி எறிந்துவிட்டால், உயிர் எப்படி அவனை நோக்கிப் பறந்து செல்லும்? ஹேமாம்பாளை நீர் புறக்கணித்தது தர்மம் அல்ல. இந்தாரும், அவளுடைய நகைகள். எடுத்துச் சென்று அவளிடம் சேர்த்துவிடும்*

*[நகைப் பொட்டலத்தை எடுத்துத் தருகிறார்.]*

**உறங்கா:** (திகைப்புடன்) இங்கே இவை எப்படி வந்தன? வருகிற வழியிலே என்னிடமிருந்துதான் இவற்றைப் பிடுங்கிக் கொண்டார்களே! நான் எடுத்து வந்த நகைகள் அல்லவா? இங்கேயே அவை இருக்க வேண்டும், ஸ்வாமி; எப்படியோ என் மனோரதம் நிறைவேறிவிட்டது.

**இராமா:** ஏதோ நிறைவேறி வருகிறது. எது நிறைவேறி வருகிறது என்பதுதான் இவனுக்கு விளங்கவில்லை.

**உறங்கா:** மன்னித்தருள வேண்டும். இந்த நகைகளை இங்கே கொண்டு சேர்க்க வேண்டும் என்று வந்தேன். வரும் வழியில் இந்த அவலம் நேர்ந்தது. நகைகளைப் பறித்துக்கொண்டார்கள்.

**முதலி.** கொடுமையோடு, வழிப்பறியும் செய்தார்களா, அந்த நல்லவர்கள்?

**இராமா:** வழிப்பறி செய்வதற்கு வழி காட்டியவர் உறங்காவில்லிதானே?

**முதலி:** ஸ்வாமி!

**இராமா:** தாசரதீ, ஏன் படபடக்கிறீர்? உறங்காவில்லியே சொல்லட்டுமே! உறங்காவில்லி, நகைகளை எங்கேயிருந்து கொண்டுவந்தீர்?

**உறங்கா:** வீட்டிலிருந்துதான்.

**இராமா:** உம்முடைய மனைவி மனம் ஒப்பி அவற்றைத் தந்தளா?

**உறங்கா:** அவளுக்குத் தெரியாது, ஸ்வாமி. நான் நகைகளை எடுதது வந்தது அவளுக்குத் தெரியாது.

**இராமா:** பிறகு?

**உறங்கா:** அவள் தூங்கிக்கொண்டிருந்தாள். மெல்ல அவளுக்குத் தெரியாமல் கழற்றி வந்தேன். பாருங்கள், ஸ்வாமி, ஒரு தோடுதான் இருக்கிறது. இன்னொரு பக்கத்தில்

உள்ளதைக் கழற்றினால் விழித்துக்கொண்டு விடுவாளோ என்று பயந்து இதோடு வந்துவிட்டேன்.

இராமா: எதற்காக இப்படிச் செய்தீர்? இந்த நகைகள் எதற்கு ?

உறங்கா. ஊரிலே கட்டுப்பாடு செய்திருக்கிறார்களே! அடியேனால்தானே அது? தசாவதார ஸந்நிதி ஜீர்ணோத் தாரணத்திற்கு ஊரிலே உதவி எதுவும் கிடைக்காதுபோல் தோனறியது. அந்தத திருப்பணியை நிறைவேற்றுவதில் ஸ்வாமிககு உள்ள ஈடுபாடு தெரியும். ஆகவே எப்படியாவது பணத்திற்கு வழிசெய்ய நினைத்தேன்.

இராமா: ஆகவே, அணுகுவதற்குப் பயந்து பயந்து ஒதுங்கினீரே, அந்த வீட்டிற்குப் போனீர்; திருடினீர்! அழகு வெகு அழகு!

உறங்கா· திருடினேனா ?

இராமா: வேறென்ன, உறங்காவில்லி ? வேறு என்ன ?

உறங்கா: ஸ்வாமி, இந்த உடம்பை முறித்துத் திரட்டிய பணத்தைத்தானே நகைகளாகச் செய்து அவளுக்குப் போட்டேன்?

இராமா: கொடுப்பதற்குத்தான் உமக்கு உரிமை உண்டு.

உறங்கா· எடுத்துக்கொள்ள... தந்ததை எடுத்துக் கொள்ள உரிமை இல்லையா?

இராமா· உண்டு. எப்போது தெரியுமா? கொடுத்த போது இருந்த அன்பு எடுக்கும்போது இருந்தால். அதுதான் இல்லையே! உமக்கு உலக ஆசை மறுபடியும் வளருமோ என்ற பயம். அதோடு, அவள் விழித்துக் கொண்டுவிடு வாளோ, நகைகளைத் தரமாட்டேன் என்பாளோ என்ற பயம். உம்மிடம் உமக்கு நம்பிக்கையில்லை. அவளிடமும் இல்லை. பகவானிடமும் இல்லை.

உறங்கா: ஸ்வாமி, ஸவாமி., எனக்குத் தேவரீரிடம் நம்பிக்கை இருக்கிறது. மற்ற எதுவும் தேவையில்லை.

**இராமா:** அதுவும் சந்தேகம்தான். இருந்தால், இப்படிச் செய்திருக்கமாட்டீர். இதற்கு ஒரு பிராயச்சித்தந் தான் உண்டு. இவனை விட்டு, இந்தத் திருவரங்கத்தை விட்டு, நீர் உடனே போய்விட வேண்டும்.

**உறங்கா:** (சிறிது திகைத்து நின்று, பிறகு ஒரே வெறி யில்) என்ன வேண்டுமானாலும் இவனைச் செய்யுங்கள்; அடி யுங்கள், சித்திரவதை செய்யுங்கள். ஆனால், ஆனால்... இந்தத் திருவடி நிழலைவிட்டு மட்டும் போகச் சொல்லாதே யுங்கள். நான் போகமாட்டேன; கொன்றாலும் போக மாட்டேன்.

**இராமா:** கட்டளைக்குக் கீழ்ப்படிய மறுப்பதுதான் ஆசார்ய பக்தியோ?

**உறங்கா:** இல்லை, இல்லை. இவனுக்கு ஒன்றும் புரிய வில்லை. அறிவு குழம்பி விட்டது. ஆசார்யர் கட்டளையை மறுக்கிறேனா? ஆமாம், மறுக்கிறேன. அதற்கான நரகம் வந்தால் நாளைக்கு வரட்டும். இப்போது தேவரீரைப் பிரிந் திருக்கும் நரகத்தை அடியேனால் தாங்க முடியாது. வெறும் தசைப் பிண்டம், அறிவொன்றும் இல்லாத மல் லன, ஆசைக் கோட்டை, திருடன், ஆமாம், திருடன், திருடன்தான்!...

[ஹேமாம்பாள் பரபரப்புடன் வருகிறாள்.]

**ஹேமாம்பாள்:** ஸ்வாமி, ஸ்வாமி, யார் திருடன்? இந்த நகைகள், இந்த உடம்பு, இந்த உயிர் எல்லாம் உங்கள் உடைமை யல்லவா? (இராமாநுஜரைப் பார்த்து) ஸ்வாமி, தேவரீருக்கு என்ன கல் மனசா? உடம்பும் உயிரும் துடிக்க அவர் நிற்கிறாரே! உடம்பெல் லாம் ரத்தம் வழியத் துன்பப்படும் அவரை, அவரையா போய் இரக்கமில்லாமல் திருடன் என்று சொல்வது? யார் திருடன்? நீர் அல்லவா? முதலில் என்னிடமிருந்து அவ ரைத் திருடினீர். இப்போது அவருடைய உயிரையே திருடப் பார்க்கிறீர். யார் திருடன்? என் தெய்வமல்லவா அவர்? அவருக்கு இல்லாத உரிமை யாருக்கு உண்டு?

**இராமா:** உறங்காவில்லி, கேட்டீரா ?

**உறங்கா:** தெய்வமா ? யார், இவளா ? உன்னை ஒதுக்கி வைத்து, திரும்பிப் பார்க்கவும் பயந்த இவளா தெய்வம்? உனக்குத் தெரியாமல் உன் நகையைத் திருடிவந்த இவளா தெய்வம்? நம்முடைய தெய்வம் அதோ ஆசார்யனாக அருள் செய்ய வந்திருக்கிறது அந்தத் திருவடி நிழலே நமக்குத் தஞ்சம். இவன் பேரில் உள்ள அசட்டு அன்பினால் அவரைத் தூற்றவும் முற்பட்டாயா? ஐயோ! இந்த அபசாரத்திற்குப் பிராயச்சித்தம் உண்டா?

**இராமா:** உண்டு. இவளை முன்போல் ஏற்று, இவளோடு இருப்பதே நீர் செய்யவேண்டிய பிராயச்சித்தம்.

**உறங்கா:** அப்படியா? மறுபடியும்.. மறுபடியும்... அந்த...

**இராமா:** ஆமாம், இவளைத் தெய்வமென்று எண்ணி, இவள் உமக்கு அன்பு காட்ட வேண்டும் என்று எண்ணுகிறீர், இல்லையா? இவள் உம்மைத் தெய்வம் என்று எண்ணி வழிபடுகிறாளே, இவளுக்கு இரங்க வேண்டியது உம்முடைய கடமை அல்லவா? நம்மைச் சார்ந்து நிற்கும் உயிர்களிடத்தில அன்பு காட்டாமல், பகவானுடைய கருணையை எதிர்பார்ப்பது பேதைமை அல்லவா? அவனுடைய கருணை அலகில்லாததுதான். ஆனால் அதை ஏற்பதற்கு நம்முடைய உள்ளம் அன்பென்ற பாத்திரமாக அமைய வேண்டும். இல்லையென்றால், அவனுடைய கருணை – அவனுடைய கருணை கூட - நம்மிடத்தில தங்காமல் நம்முடைய ஓட்டை உள்ளத்தின் வழியாக ஓடிவிடும்.

**ஹேமாம்:** ஸ்வாமி, என்னை மன்னித்தருள வேண்டும். ஏதோ வெறியில் பேசினேன். என்ன பேசுகிறோம் என்று தெரியாமல்.. ஏதோ உளறிவிட்டேன்.

**இரமா:** குழந்தாய், நீ உலகெல்லாம் போற்றக் கடமைப்பட்ட பதிவிரதா தெய்வம். அன்பிலே தன்னை இழக்கத் தெரிந்தவள். அதுவே பெரிய சித்தி. பக்தி என்பது

பகவானிடத்திலே தன்னை இழப்பதுதானே? அது உனக்கு எளிதிலே கை வ ரு ம். உறங்காவில்லிக்கும் இ ன் று அது கைவந்துவிட்டது. உனக்காக அன்று தம்மை மறந்தவர், இன்று எனக்காகத் தம்மையும், உன்னையும் இழக்கத் துணிந்தார். அதனாலே, இன்று இரண்டையும், அதோடு பகவானுடைய அருளையும் பெற்றார். உங்கள் இருவருக்கும் நிகர் யார்? ஒருவரும் இல்லை.

[கிடாம்பியாச்சானும், அவரோடு சாரங்க நம்பியும் வருகிறார்கள்.]

**இராமா:** கிடாம்பியாசசானா? வாரும். நீர் எங்கே போயிருந்தீர்? இரவெல்லாம் காணோம என்று சொன்னார்களே!

**கிடாம்பியாச்சான்:** நேற்று அமாவாசையாச்சே. அடியேன் இங்கே செய்ய வேண்டியது ஒன்றும் இராது என்று......

[உறங்காவில்லி இருப்பதை ப பார்க்கிறார். அவரிடம் ஓடி, அவரை அணைத்துக்கொள்கிறார்.]

உறங்காவில்லி, உறங்காவில்லி, பிழைத்தீரா? அந்த அயோக்கியர்கள் கொன்று விட்டாகளோ என்று நினைத்தேன். இரக்கமற்ற பாவிகள்! அவர்களைச் செக்கிலிட்டு ஆட்ட வேண்டும். சாரங்க நம்பி, அழைத்து வா, அவர்களை.

[சாரங்க நம்பி போகிறான்.]

பொறுத்தருள வேண்டும். உறங்காவில்லியைப் பறிகொடுத்து விட்டோம் என்று நினைத்தேன். இங்கே வந்து ஸ்வாமியின் முகத்தில் எப்படி விழிப்பது என்று தெரியாமல் இடிந்து போனேன். ஓடிப் போய்விடலாமா என்று கூட எண்ணினேன்.

**இராமா:** (சிரித்துக் கொண்டு) உறங்காவில்லி ஊரை விட்டுப் போக மாட்டேன் என்கிறார். நீரோ சொல்லிக் கொள்ளாமல் ஓடப் பார்க்கிறீர். பகவானுடைய சந்நிதி என்ன அப்படிக்கசந்தாபோச்சு?

**கிடாம்பி:** பகவானுடைய சந்நிதியாகவா வைத்திருக்கிறார்கள்? அங்கே திட்டமிட்டுக் கொடுமையும் கொலையும் பயில்கிறார்கள்; கயமையை வளர்க்கிறார்கள். இவர்களை விட்டு வைத்தாலே திருவரங்கம் திருட்டரங்கமாகப் போகும். பெரிய கோயில் பேய்க் கோயில் ஆகிவிடும். காவேரியிலே இரத்தமே ஓடும். ஆம், ஸ்வாமி, அந்தக் கயவர்களை...இதோ. அவர்கள் வந்துவிட்டார்கள்.

[சாரங்க நம்பி வருகிறான். அவர்களோடு கைகள் பின்கட்டு முறையாகக் கட்டப்பெற்று, வேங்கடாத்ரியும் வரதராகவாசாரியாரும் வருகிறார்கள்.]

**இராமா:** (பதற்றத்துடன்) அடடா! கோயில் அர்ச்சகர்கள் அல்லவா? பகவானுடைய சந்நிதியில் கைங்கர்யம் செய்யும் பாக்கியம் பெற்றவர்கள் அல்லவா? கிடாம்பியாச்சான், இது என்ன கூத்து? அவர்கள் கைகளை அவிழ்த்து விடும்

**கிடாம்பி** (பலைப்புடன்) அவிழ்த்துவிட வேண்டும் என்பதா அவ்விடத்துத் திருவுளளம்? இவர்கள் என்ன செய்தார்கள தெரியுமா? உறங்காவில்லியின் பேரில் ஐந்நூறு மனித நாய்களை ஏவினார்கள். 'ஊரை விட்டுப் போய்விடடா சழுதை, உறங்காவில்லி, உன்னை உறங்க வைப்போம்' என்று கொக்கரித்தார்கள் ஸ்வாமி, ஸ்வாமி, அவர்கள் சொன்னதை யெல்லாம் இங்கே சொன்னால் நாக்கு அழுகிப் போகும். அவர்கள் செய்ததை யெல்லாம்... அதைச் சொல்லவானேன்? உறங்காவில்லியின் உடம்பைப் பார்த்தால் தெரியவில்லையா? இந்தக் காயங்களையும் இரத்தக் கறைகளையும் பார்த்த பிறகுமா, இவர்கள் கட்டை அவிழ்க்கத் திருவுள்ளம் பற்றுகிறது? இவர்களுடைய பாவக்கட்டை பகவானால்கூட அவிழ்க்க முடியாது.

**இராமா:** கிடாம்பியாச்சான்!

**கிடாம்பி:** முடியாது ஸ்வாமி, அடியேனால் முடியாது.

**இராமா:** இன்று பொழுது நன்றாகத்தான் விடிந்தது. முதலில் உறங்காவில்லி; இப்போது நீர்; இவன் சொல்லை

தட்டும்படி ஏற்பட்டது. இன்னும் எத்தனை சிஷ்யர்கள் இப்படிச் செய்யப் போகிறார்களோ? ஊரை விட்டுப் போக வேண்டியது உறங்காவில்லியோ, நீரோ, கிழிந்த துணிக்காகக் கிளர்ச்சி செய்த பக்தர்களோ அலல; ஊரை விட்டு இவன் தான் போகவேண்டும்.

**கிடாம்பி:** *(தழுதழுத்த குரலில்)* ஸ்வாமி, எங்கள் பேரில் இரக்கம் இல்லையா?

**இராமா:** உறங்காவில்லி, நீர் என்ன சொல்கிறீர்?

**உறங்கா:** *(கிடாம்பியாச்சானைப் பார்த்து)* ஸ்வாமி, தேவரீருக்குத் தெரியாதா? நான்தான் தவறினேன். தேவரீருமா, ஆசார்யருடைய கட்டளையை மீறவேண்டும்? ஆனால், இதைச் சொல்வதற்குக்கூட எனக்கு வாயில்லை.

**கிடாமபி:** *(அழாக் குறையாக)* சரி, சாரங்க நம்பி, அவர்கள் கட்டைத் தறித்துவிடும்.

**இராமா:** *(மெல்லிய குரலில்)* இரு, சாரங்க நம்பி. கிடாமபியாச்சானே அதைச் செய்வார்.

*[கிடாம்பியாச்சான் பரிதாபமாக இராமாநுஜருடைய சலனமற்ற முகத்தைப் பார்க்கிறார். பிறகு, மெலல ஆச்சகரிடம் போகிறார்.]*

**கிடாம்பி:** *(போகும் போது)* பாம்புக்குப் பால் வார்க்கிறோம். பாம்புக்குப் பால் வார்க்கிறோம்.

*[கட்டுக்களை அவிழ்க்கிறார்.]*

**இராமா:** பாம்புக்குப் பால் வார்க்கிறோம் என்று சொல்கிறீர்? அதையும், இல்லை, அதைத்தான் செய்ய வேண்டும். செய்யாவிட்டால் பாமபுக்கும் மனிதனுக்கும் என்ன வேற்றுமை? மனிதனுக்குத்தான் என்ன உயர்வு? ஆனால் கிடாம்பியாச்சான, இவர்களைப் பாம்புகள் என்று நினைக்கிறீர்?

**கிடாம்பி:** ஆம், விஷப் பாம்புகள். ஒரு பாவமும் அறியாத உறங்காவில்லியை வழிமறித்துக் கடித்த விரியன்கள். அவருடைய பொருளை விழுங்கப் பார்த்த மலைப்பாம்புகள்.

**இராமா:** பொருளா?

**கிடாம்பி:** இதோ இந்த நகைகளைப் பார்க்க வேணும். இவற்றை உறங்காவில்லியிடமிருந்து பறித்துக் கொண்டார்கள். நாங்கள் மாத்திரம் அந்த வேளையில் அங்கே போய்ச் சேராதிராவிட்டால் இன்னும் என்ன பயங்கரக் கொடுமைகள் நடந்திருக்குமோ?

**இராமா:** நீர் எப்படி அந்தச் சமயத்திலே அங்கே போய்ச் சேர்ந்தீர்?

**கிடாம்பி:** இதோ இந்தப் பிள்ளையாண்டான் சாரங்க நம்பி இருக்கிறானே, அவன் வந்து சொன்னான்; போனோம். போய்ச் சேருவதற்குள் இவர்களுடைய பேயாட்டம் தொடங்கிவிட்டது. இவர்களை அடக்குவதற்குள் உறங்காவில்லியைக் காணோம். ஏதோ தேடிப் பார்த்தோம். அதற்குள், ஸ்வாமி அடியேனை அழைக்கப் போகிறதே என்று வந்துவிட்டோம். நல்ல வேளை, உறங்காவில்லி உயிரோடு தப்பினார்! அந்த மட்டுக்கும் ரங்கநாதன் காப்பாற்றினை.

**இராமா:** ஆச்சான், அப்படியொன்றும் ரங்கநாதனை நம்பி அவனே காப்பாற்றட்டும் என்று, நீர் விட்டதாகத் தெரியவில்லையே! உறங்காவில்லிக்காக, உறங்கும் பெருமான் எப்படி வருவார் என்பது உம்முடைய சந்தேகம்.

**கிடாம்பி.** உண்மையைச் சொல்லி விடுகிறேன், ஸ்வாமி. அதைப் பற்றியெல்லாம் எண்ணவே இல்லை. எண்ண நேரமும் இல்லை. நேற்று அஸ்தமனம் ஆகி இரண்டொரு நாழிகை கழிந்தபிறகுதான் சாரங்க நம்பி செய்தி கொண்டுவந்தான். உடனே ஓடினேன்; அவ்வளவுதான் எனக்குத் தெரியும் ஏதோ உறங்காவில்லியும் தப்பினார்; அவருடைய நகைகளும் கிடைத்தன. ஸ்வாமியும் பெரிய பெருமாளும் கிருபை செய்ததாக இப்போது எண்ணுகிறேன்.

**இராமா:** முன்பின் ஒன்றையும் எண்ணாமல், தமக்கு வருவதைச் சிந்தியாமல், அன்பின் வேகத்தில் ஒவ்வொரு

வரும் உம்மைப்போல் தருமத்தை நோக்கி ஓடத் தலைப் பட்டால் உலகத்தின் தீமையெல்லாம் ஓடிவிடும். நகைகள் எங்கே? உறங்காவில்லி, இந்த நகைகளை இவன் விரும்பிய படி பயன்படுத்தலாம் அல்லவா?

**உறங்கா:** என்னைக் கேட்க வேண்டுமா, ஸ்வாமி?

**இராமா:** ஹேமாம்பா, நீ என்ன சொல்லுகிறாய், அம்மா?

**ஹேமாம்:** அவர் கொண்டு வந்தது, நான் கொண்டு வந்தது எல்லாம் ஸ்வாமிக்கே சொந்தம்.

**முதலி:** (தணிந்த குரலில) எத்தனை எத்தனை பிறப் பிலோ சேர்த்துக கொண்டு வந்ததை யெல்லாம், நாங்கள் ஸ்வாமியிடம் ஒப்படைத்து விட்டோம். எங்களுக்கு உரிமை எதுவும் இலலை; கவலையும இலலை.

**இராமா:** அப்படியா, தாசரதீ?

**முதலி:** ஆம், ஸ்வாமி.

**இராமா:** கூரேசரே, உம்முடைய கருத்து?

**கூரத்தாழ்வார்:** அதுவேதான்.

**இராமா:** கிடாம்பியாச்சான், நீர் என்ன நினைககிறீர்?

**கிடாமபி:** அடியேனுககு ஒன்றும் நினைககத் தெரி யாது. நமபுகிறேன; அதுதான் தெரியும்.

**இராமா:** வினைகள் யாவும் பகவத் கைங்கர்யத்தில் அழிகின்றன. அது சத்தியம். ஆகவே, பகவானுடைய சந் நிதியில் கைங்கர்யம செய்யும் பாககியம் பெற்ற உங்களு டைய திருவடிகளில் இவன் பணிகின்றான்.

[அர்ச்சகர்களைக் கீழே விழுந்து வணங்குகிறார்.]

**வேங்கடா:** (திகைத்து) ஸ்வாமி, ஸ்வாமி!

**வரத:** ஐயோ! சேர்த்த பாவம் போதும்! இதை எங் களால் தாங்க முடியாது.

**கிடாம்பி:** (கோபத்துடன் ஓடி, இராமாநுஜரைத் தூக்கிய வண்ணம்) இது என்ன, ஸ்வாமி, இவர்களை வணங்குவதா? இவர்களையா?

**இராமா:** (எழுந்து) கிடாம்பியாச்சான் ஏதோ உணர்ச்சி வசப்பட்டுப் பேசுகிறார். அதை மறந்துவிட வேண்டும். இந்த நகைகளைப் பெரிய கோயில் கைங்கர்யபரர்களான தேவரீர்களே ஏற்க வேண்டும். உறங்காவில்லி, சரிதானே?

**உறங்கா:** (பணிந்து) அடியேனைக் கேட்க வேண்டுமா?

**இராமா:** இந்த நகைகளைத் தசாவதார ஸந்நிதியின் ஜீர்ணோத்தாரணத்திற்காக உறங்காவில்லியும் ஹேமாம்பாளும் இவனிடம் தந்தார்கள். இவன் இப்போது அவற்றைத் தேவரீர்களிடம் ஒப்படைக்கிறான். ஸந்நிதியில் செய்யவேண்டிய திருப்பணி நிறைவேறினால் போதும்.

**வேங்க:** அடியோங்களையா அதை நிறைவேற்றும்படி பணிக்கிறது?

**வரத:** ஸ்வாமி, ஸ்வாமி, இந்தப் பாவிகளால் அந்தப் பொறுப்பைத் தாங்க முடியாது.

**இராமா:** (கனிவோடு) முடியும். ஆனால், ஓர் இடைஞ்சல் இருக்கிறது. அதை அகற்றிவிட வேண்டும். உறங்காவில்லி, அதற்கு நீர்தான் இவனுக்குத் துணை செய்ய வேண்டும்.

**உறங்கா:** அடியேனா? அடியேன், ஸ்வாமிக்குத் துணை செய்வதா?

**இராமா:** ஆம், நீர் திருவரங்கத்தில் இருப்பது, இந்த ஊரில உள்ள பலருக்குப் பிடிககவில்லை என்பது நன்றாய்த் தெரிகிறது. இந்தக கசப்பு, பலருடைய நெஞ்சில இருப்பதை இவனால் தடுக்க முடியவில்லை. அது இவனுடைய தோல்வி நாளடைவில் இநதக் கசபபு மாறும அது உறுதி. ஆனால் கசப்பு இருக்கும்போது, கோயிற் பணிக்கு அதனால் தடை ஏற்படுகிறது. ஆகவே, உறங்காவில்லி, நீர் ஊரை விட்டுப போவது நல்லது. என்ன சொலகிறீா? யோசித்துச் சொலலும்.

**உறங்கா:** ஸ்வாமியின் நியமனம் அப்படியானால்...... அடியேனால் தாங்காது. ஸ்வாமியின் திருவடியை விட்டுச்

செல்ல அடியேனால் தாங்காது. ஆனாலும், ஒருவன் அழிவினால், ஊர் பிழைத்தால், பகவத் கைங்கர்யம் நிறைவேறினால், அவன் அழிவென்ன பெரிது? ஸ்வாமியின் திருவுள்ளப்படியே அடியேன் நடந்துகொள்கிறேன். (அர்ச்சகர்களைக் கீழே விழுந்து வணங்கி) அடியேனால் ஏற்பட்ட துன்பத்தை மறந்துவிடக் கிருபை செய்யவேணும். இன்றே போய்விடுகிறேன். (இராமாநுஜரைப் பார்த்து) ஸ்வாமி, ஸ்வாமி, இந்த ஏழையை மறந்துவிடப் படாது. 'பெரிய வாய அந்தக் கண்கள் என்னைப் பேதைமை செய்தனவே.' இந்த உயிரை ஏன் எம்பெருமான் எடுத்துக்கொள்ள மாட்டேன் என்கிறான்?

**இராமா:** (பரிவோடு) உறங்காவில்லி, குழந்தாய்!

**கிடாம்பி:** ஸ்வாமி, அப்படியானால் அடியேனுக்கும் உறங்காவில்லியோடு போவதற்கு அனுமதி தரவேண்டும்.

**இராமா:** அவசரப்படாதேயும், ஆச்சான். இவனையும் கூட்டி அழைத்துச் செல்லுங்கள். இந்தக் கிழவனுக்கு நெஞ்சு இல்லையா? நீங்கள் இல்லாமல் இவன் மட்டும் இங்கே இருக்க முடியுமா? இருந்து...இருந்து...இருப்பதா? (அர்ச்சகர்களைப் பார்த்து) இவன் கோயிலுக்கு வந்தால் விசுவரூப சேவை நடத்துவதில்லை என்று தீர்மானித்ததாகக் கேள்விப்பட்டேன். ஸந்நிதி கைங்கர்யம் தடைப்படவேண்டாம். இவனே திருவரங்கத்தை விட்டுப் போய்விடுவான். பெரிய பெருமாளிடம் இவனுக்கு அருள் செய்யும்படி வேண்டிக்கொள்ள வேணும். உலகமெல்லாம் அவனுடைய திருவரங்கம். அதை உணர இவனுக்குச் சக்தி தரும்படி பிரார்த்திக்க வேணும்.

**வரத:** பிரார்த்திப்பதா? அதற்கு இந்தப் புழுக்களுக்கு வாயுண்டா? பழக்க வழக்கம் என்ற குட்டையிலே ஊறி, அகங்காரப் பாசி படிந்த முதலைகள், பகவானை நோக்கித் திரும்ப வழியுண்டா?

**வேங்க:** ஸ்வாமி, மன்னித்தருள வேண்டும் குருடர்களாய்ப் போனோம். பகவானுடைய கருணையின் ஒளியே இங்கே அடியோங்களை ஆட்கொள்ள வந்திருக்கிறது என்று

உணராமற் போனோம். இந்தக் குருட்டுத்தனம் விலகுவதற்குத் தேவரீருடைய அருள்நோக்கு வேண்டும். உறங்காவில்லி, நீர்தாம் சொல்ல வேண்டும். அடியோங்களுக்காகப் பரிந்து பேசவேண்டும். எங்களை மன்னித்துவிடும். இங்கேயே இரும். அகங்காரம் எங்களுக்கு வராமல் தடுக்கும் அரணாக நீர் இங்கேயே இரும். எம்பெருமானாரையும் இருக்கச் சொல்லும்.

**கிடாம்பி:** இவர்களையும் நம்பலாமா?

**வேங்க:** ஆச்சான் ஸ்வாமி, அடிபணிந்து வேண்டுகிறோம். செய்த பாதகத்தையெல்லாம் மன்னித்து, ஸ்வாமியிடம் அடியோங்களுக்காகப் பிரார்த்திக்க வேணும்.

**வரத:** என்ன தண்டனை வேண்டுமானாலும் ஏற்றுக் கொள்கிறோம் ஸ்வாமியும் உறங்காவில்லியும் திருவரங்கத்திலேயே இருக்க அருள்புரிய வேணும். கண் திறந்தது; இன்றுதான் எங்கள் கண் திறந்தது.

**இராமா:** இவனுக்கு யாரையும் நம்பாமல் இருக்கவோ, ஒதுக்கவோ உரிமை இல்லை. "ஏடு நிலத்தில் இடுவதன் முன்னம் வந்து எங்கள் குழாம் புகுந்து கூடுமனமுடையீர்கள் வரம்பொழிவந்து ஒல்லைக் கூடுமினோ" என்று அழைப்பதே இவன் கடமை. பரம காருணிகனான எம்பிரானே உங்களை இங்கே அனுப்பினான். இப்படி எல்லாம் எங்களைச் சோதனை செய்தான். திருவரங்கத்தில் மட்டுமல்ல, உங்கள் உள்ளத்திலேயே எங்களுக்கு இடம் அமைத்துக கொடுத்தான். இதைவிடச் சிறந்த இடம் ஏது? "ஏழை ஏதலன் கீழ்மகன் என்னாது இரங்கி மற்றவற்கின்னருள சுரககும்" திருவரங்கத்தம்மானுடைய அடியினைத் தவிர வேறு போக்கு வீடுதான் எது?

[திருச்சின்னத்தின் ஒலி கேட்கிறது]

**முதலி:** ஸ்வாமி, ஸ்வாமி, விசுவரூப சேவை முடிந்துவிட்டது. திருச்சின்னத்தின் ஒலி காதில் விழவில்லையா? இன்று ஏதேதோ பேசி விசுவரூப சேவையை இழந்துவிட்டோம்.

**இராமா:** இல்லை, தாசரதீ, பகவான் இங்கேயே இன்று அவனுடைய விசுவரூபத்தைக் காட்டினன். அர்ஜுனனுக்குத் தேர்த்தட்டிலே; இந்த ஏழைக்கு இங்கேயே, இந்தச் சிறு குடிலிலே. இன்று இங்கே கண்முன் நடைபெற்றது அவனுடைய விசுவரூபந்தான். அவனுடைய கருணைக்கு, அதை அவன் வெளிப்படுத்துகிற ஆயிரம் ஆயிரம் மாயத்திற்கு வரம்பேது? அவன் சரணாரவிந்தமே நமக்குக் கதி. நமோ நாராயணாய!

**அனைவரும்:** நமோ நாராயணாய!

[ திரை ]

## வருகை

"துறைவன்"

எப்பொழுதாயினும் வருவாள்—அவள்
இன்னபொழுது வருவதென்றில்லை
(எப்பொழுதாயினும்)

நீலங்கரைந்த செவ்
வானத்திலே ஒரு
நித்தில வெள்ளி
முளைத்ததென
(எப்பொழுதாயினும்)

பங்குனி சித்திரை
வெய்யிலிலே ஒரு
பத்து மழைத்துளி
வீழ்ந்ததுபோல்
(எப்பொழுதாயினும்)

ஓங்குமலை முகட்
டுச்சியிலே ஒரு
ஒற்றைஇலைச் செடி
தோன்றுதல் போல்
(எப்பொழுதாயினும்)

கப்பல் கவிழ்ந்து
கடலினில் சாய்ந்திடக்
கட்டுமர மொன்று
வந்தது போல்
(எப்பொழுதாயினும்)

கொச்சையும் வாய்பாடும்
கூத்தாட, இசை
கொஞ்சும் அருட்கவி
வந்தது போல்
(எப்பொழுதாயினும்)

காலமெல்லாம் மழை
ஓய்தலின்றிப் பின்னர்
கண்ணில் இளவெயில்
தொட்டது போல்
(எப்பொழுதாயினும்)

இன்னபடி இவள்
எண்ணிடுவாள் என
எத்தனையோ விதம்
எண்ணி நின்றேன்

பின்னும் புதுமை
திருப்புகின்ருள் ; என்றன்
பேதைமைக்கே இவள்
மாலையிட்டாள்.
(எப்பொழுதாயினும்)

# தரிசனம்

கு. அழகிரிசாமி

மழை கொட்டு கொட்டு என்று கொட்டிக்கொண்டிருந்தது. ஐந்து நாட்களுக்குமுன் பிடித்த மழை இன்னும் நிற்கவில்லை. வெளியே தலைகாட்டவோ கால்வைக்கவோ முடியாத நிலையில் கிராமத்தில் ஒவ்வொருவரும் வீட்டோடு கிடந்தார்கள். அந்தி சந்திகளில் கூடத் தெருவில் மனித நடமாட்டத்தைக் காண முடியவில்லை. எங்கு பார்த்தாலும் ஒரே வெள்ளக் காடு. இரண்டொரு வீடுகளில் பலஹீனமான மண் சுவர்கள் விழுந்துவிட்டன. அன்றாடக் கூலி வேலை செய்து ஜீவித்து வந்த மக்கள் ஒவ்வொரு நாளையும் எப்படித்தான் கழித்தார்களோ?

மளிகைக் கடை ஆறுமுகம் பிள்ளை வீட்டின் தெருத் திண்ணையில், தட்டி வைத்துக் கட்டப்பட்ட ஒரு மூலையில் இரண்டு மனித ஜீவன்கள் தூங்கிக் கொண்டிருந்தன. இரண்டும் அனாதைகள்; ஆனால் எங்கெங்கோ பிறந்த இந்த இரண்டு அனாதைகளும் சந்தர்ப்ப விசித்திரத்தால் ஒரே திண்ணையில், ஒரே பாயில் படுத்துறங்கும்படி நேர்ந்தது.

அந்த இடம் முத்துப் பிள்ளையின் வாசஸ்தலம். பத்து வருஷங்களாக அந்த மூலையில்தான் அவர் படுத்து உறங்குகிறார். ஒருவருக்குத்தான் தாராளமாக படுத்துக் கொள்ள அங்கே இடம் உண்டு. அந்தக் குறுகிய பகுதியில், ஊருக்குப் புதியவனான ஆண்டியப்பனும் பங்குக்கு வந்து சேர்ந்துவிட்டதற்கு இந்த மழைதான் காரணம்.

# தரிசனம்

ஆண்டியப்பன் ஏதோ ஒரு தூரத்துக் கிராமத்தைச் சேர்ந்தவன். வயது பதின்மூன்று இருக்கும். அவனுக்குத் தாயுமில்லை; தகப்பனுமில்லை. அனாதையாக வயிற்றுப் பிழைப்புக்கு வழிதேடி அந்தக் கிராமத்துக்கு வந்து சேர்ந்தான். ஒரு பெரிய வீட்டில் மாடு மேய்க்கும் வேலை கிடைத்தது. இரண்டு நேரக் கஞ்சியும் ஒரு நேரச் சாதமும் தான் சம்பளம். தொழுவிலேயே உட்கார்ந்து சாப்பிட்டு விட்டுத் தொழுவிலேயே ஒரு மூலையில் படுத்துக் கொள்வான். இப்படியே இரண்டு மூன்று மாதங்கள் கழிந்தன. அப்புறம் அடைமழை பிடித்துக் கொண்டு விடவே தொழுவில் படுத்துக் கொள்ள முடியாமல் போய்விட்டது. மண்தரை யெல்லாம் ஈரச் சதுப்பேறிப் பனிக்கட்டியாகக் குளிர்ந்தது. சுவாகளோ அதைவிட மோசம். மாட்டையே கடித்து ரத்தத்தை உறிஞ்சும் பெரிய பெரிய கொசுக்கள் ஏகமாகப் பெருகி முகம், முதுகு, கைகால்கள் என்று அவன் உடம்பு முழுவதையுமே சித்திரவதை செய்து கொண்டிருந்தன. இந்தச் சூழ்நிலையில், போர்த்துக் கொள்ள ஒரு கந்தைகூட இல்லாமல ஓலைப் பாயில் தூங்குவது எப்படி ? இம்சை பொறுக்க மாட்டாத அந்தப் பையன் தன் துயரக் குரலுக்குப் பைத்தியக்கார முத்துப் பிள்ளை ஒருவர் தான் செவிசாயப்பார் என்று நம்பி அவரிடம் வந்தான்.

"தாத்தா! ராத்திரிக்கு நான் திண்ணையில் வந்து படுத்துக் கொள்ளட்டுமா ?" என்றான்.

முத்துப் பிள்ளை அவன் முகத்தைப் பார்த்துக் கொண்டிருந்தாரே ஒழிய, பதில் சொல்லுவதற்கு வாயைத் திறக்கவில்லை.

ஆண்டியப்பன் மறுபடியும் தன் வேண்டுகோளைத் தெரிவித்தான். மொத்தம் ஆறு தடவைகள் அவன் வாய் திறந்து கேட்ட பிறகுதான், "திண்ணையா...?" என்றார் முத்துப் பிள்ளை.

"ஆமாம்..."

"படுக்கவா ?"

"உம்."

"...திண்ணையில்தானே ?...படுத்துக்கோயேன் !" என்று அனுமதி கொடுத்தார் முத்துப் பிள்ளை.

அப்புறம் " நீ யாரு ?" என்று அவனை மெதுவாக விசாரித்தார்.

ஆண்டியப்பன் தன் பிறப்பு வளர்ப்பு பற்றியும், தான் வேலை செய்யும் வீட்டுத் தொழுவில் தூங்க முடியாமல் படும் கஷ்டத்தைப் பற்றியும் விரிவாக எடுத்துச் சொன்னான்.

அன்றிரவு முத்துப் பிள்ளை ஒரு கோடியிலும் ஆண்டியப்பன் மறு கோடியிலுமாகப் படுத்துத் தூங்கினார்கள். இது திண்ணையின் சொந்தக்காரருக்கும் தெரியலந்தது. உடனே அவர் ஆண்டியப்பனை விரட்டாததற்குக் காரணம் அவனுடைய முதலாளி அவருக்கு மிகவும் வேண்டியவராகவும், அதைவிட முக்கியமாக அந்த ஊரிலேயே பெரும் புள்ளியாகவும் இருந்ததுதான்.

பையன் இரண்டாவது நாள் படுத்துத் தூங்கும் போது, மழையோடு காற்றும் சேர்ந்துகொண்டது சுழன்று பேயாட்டம் போட்டு அடித்த முரட்டுக் காற்றில் சில வீடுகளின் கூரைகள் பறந்துவிட்டன. சில மரங்களும் சாய்ந்தன. அப்போது ஆறுமுகம் பிள்ளை வீட்டுத் திண்ணையிலும், திண்ணையை ஒட்டிய சுவரிலும் மழைத்துளிகளை விசிறி அடித்தது காற்று தூங்கிக்கொண்டிருந்த ஆண்டியப்பன் சவுக்கடி பட்டவனைப்போல் துள்ளி எழுந்தான். அவனால் கண்ணைத் திறக்கவே முடியவில்லை. என்ன நடக்கிறது என்றே புரியாமல் புத்தி பேதலித்து நின்றான். சுய உணர்வு தட்டுவதற்கு முன்பே, ஈரத் துணியுடன், முத்துப் பிள்ளை படுத்திருக்கும் மறைவிடத்துக்கு ஓடினான். போன வேகத்தில் அவன் உடம்பிலிருந்து தெறித்த மழைத்துளிகள் அவரையும் எழுப்பிவிட்டன. அவர் "என்ன, ஏது ?" என்று விசாரிப்பதற்கு முன்பாகவே, ஆண்டியப்பன் பேய்க்குப் பயந்து ஓடிவந்தவனைப் போல் வாய் குழறிக் கொண்டே, "மழை ! மழை !" என்று புலம்பினான்.

"சரி, சரி" என்று சொல்லிவிட்டுச் சும்மா இருந்தார் முத்துப் பிள்ளை.

அவர் குரல் கேட்டபிறகுதான் அவனுக்கு சுய உணர்வு வந்தது. சிறிது நேரம் நின்றுகொண்டேயிருந்தான். பிறகு, கட்டியிருக்கும் கந்தையைப் பிழிந்தான்.

"தாத்தா! ஒரு துண்டு இருந்தால் கொடுங்கள். காலையில் அதைத் துவைத்துக் கொடுத்து விடுகிறேன்" என்று ஆண்டியப்பன் கேட்டான்.

முத்துப் பிள்ளை, "என்னது?" என்றார்.

"ஒரு துண்டு இருக்குமா?"

"துண்டு இல்லை...இந்தா, இதைக் கட்டிக்கோ" என்று ஒரு பழைய துணியைக் கொடுத்தார் கிழவர்.

ஆண்டியப்பன் அதை வாங்கிக் கட்டிக் கொண்டு, அவருக்குப் பக்கத்திலேயே படுத்தான். அவருடைய துப்பட்டியின் ஒரு பகுதியை தூக்கத்திலேயே எப்படியோ இழுத்துத் தன் உடம்பின் ஒரு பகுதியை மூடிக்கொண்டான். புயல் காற்றின் ஒலம் தொடர்ந்து கேட்டுக் கொண்டேயிருந்தது பத்துப் பதினைந்து நிமிஷங்கள் கழித்து, "நீ யாரு?" என்று முத்துப் பிள்ளை கேட்டதும், அவனுக்கு அந்தக் கஷ்ட நிலையிலும் சிரிப்புத்தான் வந்தது.

'ஊர்க்காரர்கள் இவரைப் பைத்தியக்காரக் கிழவன் என்று சொல்வதில் தப்பில்லை. நேற்றுச் சாயங்காலம்தான் நம் கதை முழுவதையும் சொன்னோம். அதற்குள் இன்று திரும்பவும் யார் என்று கேட்கிறாரே?" என்று எண்ணி உள்ளுக்குள் சிரித்துக் கொண்டான். பிள்ளை மறுபடியும் அந்தக் கேள்வியைக் கேட்டால் பதில் சொல்லலாம் என்று நினைத்தான். ஆனால் அவரிடமிருந்து அப்புறம் வார்த்தை வரவில்லை. குறட்டைதான் வந்தது. குறட்டை ஒலி கேட்டு ஆண்டியப்பன் வாய்விட்டுச் சிரித்தான். 'அப்பாவி, பாவம்!' என்று அவருக்கு இரக்கம் காட்டவும் செய்தான். அனாதைக்கு அனாதை உதவுவது, உதவிய அனாதைக்கே உதவி

யைப் பெற்றுக்கொண்ட அனுதை இரக்கம் காட்டுவது, இப்படிப்பட்ட ஒரு நம்பமுடியாத நாடகத்தை நிகழ்த்தின அன்றைய இரவின் மழையும் புயலும்!

முத்துப் பிள்ளை பத்து வருஷங்களாகவே பைத்தியக் காரக் கிழவராக, அப்பாவியாக வாழ்ந்து வருகிறுர். ஆனுல்அவர் நாலுபேரைப்போல் வாழ்ந்தகாலமும் உண்டு. அது இந்தத் தலைமுறையினருக்குத் தெரியாது. முந்திய தலைமுறையினர், அவருக்குச் சமமான வயதுடைய சிலர் அறிவார்கள். ஆனுல், அவர்கள் அந்தக் காலத்தையே இப்போது மறந்துவிட்டார்கள். அதனுல் முத்துப் பிள்ளை பிறக்கும்போதே இப்படி அறுபது வயதுக் கிழவராக, அப்பாவி மனிதராகப் பிறந்து, பிறந்த நாள்முதல் மளிகைக் கடை ஆறுமுகம் பிள்ளையின் வீட்டுத் திண்ணையிலேயே வசித்து வருவதுபோல எல்லோருக்கும் தோன்றியது

பத்து வருஷங்களுக்குமுன் முத்துப் பிள்ளையின் பூர்வா சிரமம் விட்ட குறை தொட்டகுறையின்றி முடிவடைந்து விட்டது. மனைவியும் மக்களும் காலமாகிவிட்டார்கள். மூத்த மகனின் மகள், தன் தாயோடு, தாயின் பிறந்த வீட்டுக்குப் போய்ச் சேர்ந்தாள் கடைக்குட்டி மகன் வறுமையைத் தாங்க முடியாமல் வீட்டைவிட்டுச் சொல்லாமல் கொள்ளாமல் எங்கோ போனவன்தான்; அப்புறம் ஊர் திரும்பவே இல்லை இவ்வளவும் ஐம்பது வயதுக்குள் நடந்து முடிந்துவிட்டன. கடைசியில் குடியிருந்த மண்வீட்டை— தம்முடைய ஒரே சொத்தை — மளிகைக் கடை ஆறுமுகம் பிள்ளையின் ஆதினத்துக்கு விட்டுவிட்டு, அவர் திணணையில் வந்து தமக்குப் புகலிடம் தேடிக் கொண்டார் முத்துப் பிள்ளை.

ஆறுமுகம் பிள்ளை, அந்தக் கிழவருடைய அத்தையின் மகன் வயிற்றுப் பேரன். அவர் கொஞ்சம் நிலம் நீச்சு வைத்துக் கொண்டிருக்கிறுர்; ஒரு மளிகைக் கடையும் நடந்து வருகிறது அவரும், அவர் மனைவியும் அனுதையாக வந்து சேர்ந்த கிழவருக்குத் தம்முடைய வீட்டுத் திண்ணையில் இடம் கொடுத்தார்கள்; அவர் அன்றுடம் கூலி வேலைக்குப்

போய்ச் சம்பாதித்துக் கொண்டுவரும் காசை வாங்கிக் கொண்டு சாப்பாடு போட்டார்கள். அவரால் அந்தக் குடும்பத்துக்கு எந்த விதமான நஷ்டமும் இல்லை; ஆனால், கொடுமைப்படுத்துவதற்கு நஷ்டமோ கஷ்டமோ காரணமாக இருந்தாக வேண்டும் என்ற அவசியம் ஏதாவது உண்டா?

காசு கொடுத்துச் சாப்பிடுகிறவர் என்றாலும், வலிய வந்தவர்; வேறு கதியில்லாதவர். ஒருவனைக் கொடுமைப் படுத்துவதற்கு இந்தக் காரணங்களே போதும் என்று ஆறுமுகம் பிள்ளையும், அவர் மனைவியும் நினைத்துவிட்டார்கள். முத்துப் பிள்ளை சாப்பிட வரும் போதெல்லாம் வசை மாரிதான். 'பேய்த்தீனி தின்கிறார்' என்பதிலிருந்து, 'எதிரே வந்தால் சகுனத் தடை' என்பதுவரை எத்தனையோ நிஷ்டூர வார்த்தைகள். தண்ணீர் கொடுக்கும் பாத்திரம் தரையில் வைக்கப்படும்போது ஏழு வீட்டுக்குச் சத்தம் கேட்கும். பாதித் தண்ணீர் கீழே சிந்திப் போகும். மறுதட்வை தண்ணீர் கேட்டுவிட்டாலோ, மீண்டும் ஒரு மணி நேரத்துக்கு வசைமாரிதான்.

இத்தனை அவமானங்களைச் சகித்துக்கொண்டு அங்கே கிடக்க வேண்டிய அவசியம் எதுவுமில்லை. அங்கே கொடுக்கும் காசை வேறு இடத்தில் கொடுத்தால் நல்ல சாப்பாடு போடுவார்கள் என்பதும் உண்மைதான். இது சிறு குழந்தைக்கும் தெரியக்கூடிய சாவ சாதாரணமான விஷயமே. ஆனால், இவ்வளவு தூரத்துக்கு அவரால் சிந்திக்க முடியவில்லை. கஷ்டமோ நஷ்டமோ உறவு முறைக்குள் கிடந்தால்தான் மரியாதை என்று ஆரம்பத்தில் நினைத்துக் கொண்டு வந்துசேர்ந்தாரே, அந்த முடிவு அவரை அப்படியே தளையிட்டு நிறுத்திவிட்டது. பொறியும் புத்தியும் கலங்கிவந்த மனிதனைக் கொடுமையும், கொல்லும் சொற்களும் சேர்ந்து அறவே பைத்தியமாக்கிவிட்டன. விரட்டினாலும் போகாமல், விளக்கிலேயே வந்துவிழும் பூச்சியாக மாறிவிட்டார் முத்துப் பிள்ளை. இதை நன்றாகவும், தெள்ளத் தெளிவாகவும் அறிந்துகொண்டார்கள், ஆறுமுகம்

பிள்ளையும் அவர் மனைவியும். என்றாவது ஒருநாள் ஒரு வார்த்தை அன்பாகப் பேசிவிட்டால் — அப்படியெல்லாம் அவர்களால் பேசவும் முடியாது — முத்துப் பிள்ளை புத்தி சுவாதீனம் அடைந்து, வீட்டைவிட்டுப் போய்விடுவார். அவர் வருமானத்தின் மூலம் மாதாமாதம் மிஞ்சும் பத்துப் பதினைந்து ரூபாயை இழக்க வேண்டியிருக்கும் என்ற பயம் கூட அவர்களுக்கு உண்டாகிவிட்டது. 'அதை அதை வைக்க வேண்டிய இடத்தில் தான் வைக்க வேண்டும்' என்று அவர்கள எத்தனையோ தடவைகள் பரஸ்பரம் சொல்லிக் கொண்டார்கள்.

முத்துப் பிள்ளை நாள் தவறாமல் கூலி வேலைக்குப் போவார். வேலையில்லாத நாட்களில் வீட்டு வேலைகளை ஒய்வொழிச்சல் இல்லாமல் செய்துகொண்டிருப்பார். வேலையே அவரது இயற்கையாக, அவர் உயிரோடு இருப்பதை அவருக்கே சுட்டிக் காட்டும் சின்னமாக இருந்தது. இப்படிப்பட்ட மனிதர் சோர்ந்தாற்போல நாலைந்து நாட்கள் கையைக் கட்டிக்கொண்டு உட்கார்ந்து இருக்கும்படி நேர்ந்துவிட்டது, இந்த அடைமழையினால். இது, பத்து வருஷ காலத்தில் அவருக்கு ஏற்பட்ட மிகப்பெரிய சோதனை என்றே சொல்ல வேண்டும். வேலையில்லாமல், வருமானமில்லாமல் பழியாகக் கிடந்து, தண்டச் சோறு சாப்பிடுவதாக ஆறுமுகம்பிள்ளையும் அவர் மனைவியும் அவரை மாற்றி மாற்றி நெருப்பில் வாட்டி எடுத்தார்கள். நல்ல வேளையாக அவரை நெருப்பு அதிகம் சுடவில்லை. ஏற்கனவே உடம்பும் மனசும் உணர்விழந்து போயிருந்தது, அவருக்கு அந்தச்சமயத்தில் ஓரளவு பாதுகாப்பாக இருந்து உதவியது.

ஒருநாள் இரவு மழை சற்று மட்டுப்பட்டது. சிறு தூறல்மட்டும் லேசாகத் தூறிக்கொண்டிருந்தது. அமைதியான நேரம். பக்கத்தில் ஆண்டியப்பன் தூங்கிக்கொண்டிருந்தான். எப்படியோ விழிப்புத் தட்டி எழுந்த முத்துப் பிள்ளை, சிறிதுநேரம் பாயில் உட்கார்ந்துகொண்டிருந்தார். தூங்குகின்ற பையன் யார் என்பது அவருக்கு அப்போது பளிச்சென்று ஞாபகத்துக்கு வரவில்லை. வெகுநேரம் சிரமப்

பட்டு யோசித்த பிறகுதான், அவன் யார், எப்படி அங்கு வந்து சேர்ந்தான் என்பவையெல்லாம் நினைவுக்கு வந்தன. அவன் மேல் கலைந்து கிடந்த துணியை எடுத்து, நன்றாக விரித்துப் போர்த்தினார். அந்தச் சமயத்தில் சுவா மூலையில் ஓட்டுத் தாழ்வாரத்துக்கும் சுவருக்கும் இடைப்பட்ட ஒரு சிறு பொந்திலிருந்து 'சிலுக்', 'சிலுக' என்று குருவிக் குஞ்சுகள் கத்துவது காதில் விழுந்தது. ஒரு பெரிய குருவி பொந்திலிருந்து வெளியே வந்து சிறகடித்துப் பறப்பதும் திரும்பவும் பொந்துக்குள் போவதும் ஒரு நிமிஷத்தில் பழையபடி வெளியே வந்து வட்டமிட்டுப் பறப்பதுமாக இருந்தது. அந்த இருட்டு மூலையில் அது கண்ணுக்குத் தெரிய விட்டாலும், காதில்விழும் சத்தத்தைக்கொண்டு ஊகிக்க முடிந்தது. ஒரு சமயம், குருவி முத்துப் பிள்ளைக்கு வலதுகைப் புறத்தில், வெகு சமீபமாகப் பறந்து வந்து ஐந்தாறு இடங்களில் உட்கார்ந்துவிட்டு, விருட் என்று பறந்து மேலே பொந்துக்குப் போனதை முத்துப் பிள்ளை அண்ணாந்து பார்த்துவிட்டுத் திரும்பவும் கையைக் கட்டிக்கொண்டு உட்கார்ந்தார். குருவிக் குஞ்சுகள் தொடர்ந்து கத்திக் கொண்டேயிருந்தன.

கடைசியாகக் கிழவர் பாயில் படுத்தார். அப்புறம் அவர் தூங்கவில்லை என்பதுடன் ஒரேயடியாகப் பெருமூச்சு விட்டு விம்மவும் தொடங்கிவிட்டார். உடம்பெல்லாம் கொதித்தது சூழ்நிலையின் குளிர் உடம்பைத் தொடவில்லை. துப்பட்டியைத் தனியே எடுத்து, ஆண்டியப்பனுக்குப் போர்த்துவிட்டு வெற்றுடம்புடன் கிடந்தார்.

விடியும் வரையில் மழையும் ஓயவில்லை; குருவிக் குஞ்சுகளின் கத்தலும் நிற்கவில்லை.

மறுநாள் இரவுச் சாப்பாட்டுக்காக வீட்டுக்குள்ளே போன முத்துப் பிள்ளையை, "சாப்பாடு மணி அடித்துவிட்டதா ? மணிப் பிரகாரம் வயிற்றுக்குப் போடாவிட்டால் உயிரா போய்விடும்? அப்படிப்போகிற உயிர்தான் போகட்டுமே! இருந்து எந்த ராஜ்யத்தை ஆளப் போவுது?" என்று சொல்லிக் கொண்டே வரவேற்றாள் ஆறுமுகம் பிள்ளையின்

மனைவி. இந்த வரவேற்புரை பழைய பல்லவிதான். இதற்கு பயந்துகொண்டு கொஞ்சம் நேரங்கழித்துப் போனாலோ, "உமக்குக் காததிருந்து படைக்க, இங்கே என்ன கட்டின பெண்டாட்டியா இருக்கிறாள்? உம்முடைய முகத்தில்விழித் தாலும் ஆகாதென்றுதானே அவள் காலாகாலத்தில்போய் சேர்ந்துவிட்டாள?" என்ற வரவேற்புரையைக் கேட்க வேண்டிவரும். அதனால நேரத்திலேயே போய்ச் சாப் பாட்டுக்கு உட்கார்ந்தார் கிழவர். தட்டில் போடப்பட்ட சாததில பாதி தரையில் விழுந்தது. அவர் அதை அள்ளி நடுததட்டில் போட்டுக்கொண்டிருக்கும்போதே தட்டைப் பார்க்க ல அவருடைய குனிந்த தலையையே வெறுப் போடு பார்த்துக்கொண்டு நநத அவள கொதிக்கிற குழம்பை அவருடைய புறங்கையில் ஊற்றிவிட்டாள்.

"ஐயோ!" என்று சூடு பொறுக்காமல் கையை இழுத் தார முத்துப் பிள்ளை.

'கண என்ன அவிஞ்சா போச்சு? குழம்புக் கரண்டி கூட வா கண்ணுக்குத் தெரியாமல் போய்விடும்?" என்றாள். அடுதத நிமிஷம், "அப்படிப் பறக்கப் பறக்க வெறும் சோற்றை எடுக்து விழுங்க நாள் பூராவும் பட்டினியா கிடநதீர்? காலையில் ஒரு சட்டியும் மத்தியானம் ஒரு சட்டி யும் கொண்டுவந்து நான்தானே கொட்டினேன்?" என்று சொன்னாள்.

அவள் அந்தப் பக்கம் போனபிறகு ஐந்தாறு கவளத்தை எடுச்து விழுங்கினார் முத்துப் பிள்ளை பாதித் தட்டு காலி யானதும் அப்படியே எழுந்து தட்டோடு வெளியேவந்தார். இடது கையால் மடியிலிருநத ஒரு பழைய காகிதத்தை எடுதது, அதில் மீதியிருந்த சாதக்தைக் கொட்டினார். தட்டைக் கழுவி உள்ளே கொணடுபோய் வைத்துவிட்டு வெளியே வந்தார். காகிதத்தில் இருந்த சாதத்தைப் பொட்டலமாகக் கட்டித தாம் படுக்கும் இடத்தில் மாடக் குழியில் கொண்டுபோய் வைத்துவிட்டுப் பாயை விரித்து படுத்துக் கொண்டார். அப்புறம் ஆண்டியப்பனும் மழை

யோடு மழையாகத் தலையில் ஒரு துணியைப் போட்டுக் கொண்டு வந்துசேர்ந்தான்.

"தாத்தா! இந்த அடைமழை எப்பத்தான் நிற்கப் போகிறது? கீழத்தெருவிலே நாலு வீடு இடிஞ்சு விழுந்திட்டதாம்" என்று சொல்லிக்கொண்டே அவனும் படுத்தான்.

ஆறுமுகம் பிள்ளை விட்டுத் தெருவாசல் கதவு சாத்தப் பட்டது.

மழை இரைச்சலில் குருவிக் குஞ்சுகள் கத்தியது கேட்க வில்லை. தாய்க்குருவியையும் காணவில்லை.

பதினொரு மணிக்கெல்லாம் மழை சற்று நின்றது; வெறித்தது என்றே சொல்ல வேண்டும் நம்ப முடியாத அதிசயம்போல் வானத்தின் ஒரு பகுதி வெளிவாங்கி, மங்கலாக நிலவொளியும் வீசியது அப்போது, சொல்லி வைத்ததுபோல் தாய்க்குருவி வெளியே பறந்து வந்தது. குஞ்சுகளின் கூச்சல் தெள்ளத் தெளிவாகக் கேட்டது

அவ்வளவு நேரமும தூங்காமல் படுத்திருந்த முத்துப் பிள்ளை அதிவேகமாக எழுந்து உட்கார்ந்தார். தாய்க்குருவி தெருவுககுப் பறந்துபோய், சிறிது நேரத்துக்குப் பிறகு வந்து சேர்ந்தது. திண்ணையின் பல பகுதிகளிலும், சுவரில் இரண்டொரு இடங்களிலும் பூச்சி புழுக்களைக் கொத்துவது போல் எதையோ கொத்தியது. அபபுறம் குஞ்சுகளிடம் சென்றது. தாயைக் கண்டதும் குஞ்சுகளின் கூச்சல் பெரிதாயிற்று.

முத்துப் பிள்ளை மாடக்குழியிலிருந்து பொட்டலத்தை எடுத்துத் திண்ணையின் மறு கோடியில — தாய்க்குருவி பயமில்லாமல் வந்து போகக்கூடிய தூரத்தில் — கொண்டு போய் நன்றாகப் பிரித்து வைத்துவிட்டுப் பாயில் வந்து உட்கார்ந்தார்.

தாயககுருவி அம்பைப் போல் சாதத்தை நோக்கிப் பாய்ந்து வந்தது. வாய் நிறையச் சோற்றுப் பருக்கைகளைக் கவ்விக் கொண்டு பொந்துக்குப் பறந்தது குஞ்சுகளின் கும்மாளமும் படபடப்பும் கூச்சலில் பிரதி

பலித்தன. நிமிஷத்துக்கு ஒரு தடவை பொந்துக்கும் பொட்டலத்துக்குமாகக் குருவி பறந்துகொண்டிருந்தது.

முத்துப் பிள்ளை, உட்கார்ந்த நிலையிலேயே இரண்டு கைகளையும் தலைக்குமேல் உயர்த்திக் குவித்தார். கண்களை மூடிக்கொண்டு, "அம்மா!... முருகா!" என்று சத்தம் போட்டுச் சொன்னார். அரைத் தூக்கத்துடன் கிடந்த ஆண்டியப்பன் உடனே விழித்துவிட்டான். கும்பிட்ட கையோடு கிழவர் உட்கார்ந்திருப்பதை அநத மங்கலான நிலவு வெளிச்சத்தில் பார்த்தான. அவனுக்கு ஒன்றுமே புரியவில்லை.

"என்ன தாத்தா?..." என்று மெதுவாக விசாரித்தான்.

"முருகா!......முருகா!. ...." என்று வாய்க்குள்ளேயே ஜபித்துக்கொண்டு அழுதார், முத்துப் பிள்ளை.

அவருடைய தோளைப் பிடித்துக் குலுக்கி, "தாத்தா, ஏன் அழுகிறீங்க? என்ன சங்கதி?" என்று அவன் கேட்கவே, "பாவம், பத்து நாட்களாய் மழை அதுதான் என்ன செய்யும் ?" என்று பதிலளித்தார் கிழவர்.

"எதுதான் என்ன செய்யும்? என்ன சொல்றீங்க தாத்தா ?"

"எல்லாம் பொடிப் பொடிக்குஞ்சு ... அந்தத் தாய்க் குருவியைப்பாரு, ஆண்டியப்பா!" என்றார் முத்துப் பிள்ளை.

பையன் திரும்பிப் பார்த்தான். குருவி பறப்பது, குஞ்சுகள் கத்துவது, காகிதத்தில் சாதம் கிடப்பது ..அவனுக்கு விஷயம் புரிந்துவிட்டது. கிழவர்தான பொட்டலம் கட்டிச் சாதத்தைக் கொண்டுவந்து வைத்திருக்கிறார் என்பதையும் புரிநதுகொண்டான். ஆனல், அவர் எதற்காகக் கும்பிட வேண்டும்? ஏன் அழுகிறார்? அது மட்டும் அவனுக்குப் புரியவில்லை.

எவ்வளவோ காலத்துக்குமுன் இதே போன்று மழை பெய்துகொண்டிருந்த ஓர் இரவில்தான், திருக்கோவிலூரில் சிறு மனையொன்றில், குறுகலான இடைகழியில் நின்று, 'பாட்டுக்குரிய பழையவர் மூவர்'—மூன்று முதலாழ்வார்கள்

— அந்தாதி ரூபத்தில் மெய் விளக்கேற்றித் திருவிக்கிரம மூர்த்தியைத் தரிசித்தார்களாம். ஆனால் இங்கே இப்போது அந்தாதி விளக்கில்லை ; பழைய காகிதத்தில் சிறிது சாதம் தான் கிடந்தது. இந்த விளக்கின்முன் அன்பும், சத்தியமும், நம்பிக்கையும், தெய்வ சாந்நித்யமும் குஞ்சுக்கு இரை யூட்டும் குருவியாகக் கண்காணச் செயல்பட்டுக் கொண்டிருந்தன. இத்தனை குணங்களும் இத்தனை இயல்புகளும் இன்னும் உலகத்தில் இருக்கின்றனவா?

முத்துப் பிள்ளையால் இந்தத் தரிசனத்தைத் தாங்கவே முடியவில்லை. கண்ணீர் விட்டு அழுதார்; கைகளைக் குவித்துக் கும்பிட்டார். 'பைத்தியக்காரக் கிழவன் தன்னையே கும்பிட்டுக்கொள்ளாமல் வேறு எதையோ போய்த் தொழுகிறானே' என்று ஆண்டியப்பனின் அந்தராத்மா எண்ணியதோ என்னவோ, அவரை நோக்கிக் கரங் கூப்பித் தொழும்படி அவனுக்குக் கட்டளையிட்டது.

## காவேரிக் கரை

கவி கா. மு. ஷெரீப்

பொன்னியிரு மருங்கிலேயும் தென்னைக் கூட்டம்
புதுப்பெண்ணின் கொங்கையென இளநீர்தன்னை
சென்னியிலே சுமந்திருக்கும் தெளிபுனலிற்
சேல்வரால் இனமகளும் அடிப்புறத்து
மண்ணிலே வெண்சங்கம் பொன்னேர் உழும்
மட்டிலா நித்திலங்கள், மூன்றும் கொம்புச்
செந்நெல்லின் முனைகளென சிரிப்புகுக்கும்
சேர்ந்த இருகரையிடையும் அடர்ந்துஉள்ள

'செடிச்சிறுர்' தளிர்க்கரத்தால் அலையெழுப்பித்
திளைத்திடுவெர் உவகையுடன் நீந்தி நீந்தி!
கொடிப் பெண்ணுள் மரக்கிளையில் காலைமாட்டிக்
குப்புறவே பாய்ந்து தண்ணீரை மொள்வாள்
வெடித்தபொன் கொன்றைப்பூ மிதக்கும்வண்டு
வெகுதூரத் திலிருந்து அதைத் துரத்திவரும்
தடித்தமாப் பாம்பினங்கள் மரத்தின் வேரை,
தன்னினந்தான் எனநினைத்து அருகணையும்

கொம்பிலே தொங்குகின்ற தேன்கூட்டினைக்
குரங்கொன்று பிய்த்தெறிய, மீன்குஞ்சுகள்

வம்பிலே உடல் மாய்க்கும், அமுதம் உண்ண
வாய்ப்பிருந்தும் உணர்வில்லாக் காரணத்தால்
அம்புவியில் உடல்வருந்தும் தொழிலாளர்போல்!
அருகிருக்கும் புதர்தனிலே நரியும் நின்று
"தம்பியுங்கள் சண்டையிலே எனபக்கமாய்த்
தாவியொரு பொடியரேனு விழமாட்டீரா?"

என்றெண்ணி மீனிற்காய் ஏங்கிநிற்கும்
இசை பாடிக குயிலினங்கள் காத்திருக்கும்
குன்றுமணி காய்த்திருக்கும்; வெடிகளச்சிக்
கொடியோடிப் படர்ந்திருக்கும்; கரைதனிலே
கன்றுபசு மடிசுவைக்கும; மேய்க்கும பிள்ளை,
கமழ்மதுரத் தனித்தமிழில் கீதம் பாடித்
தென்றலுண்டு புங்கநிழல் சாய்ந்திருப்பர்.
தெவிட்டாத இன்பமிது கவிகளுக்கே!

# எது தமிழ்?

வ. ரா.

கிரேக்க தத்துவ சாஸ்திரி அரிஸ்டாட்டில் அவர்கள் ஒருநாள் இளைஞன் ஒருவனோடு பேசிக்கொண்டிருந்தார். பேச்சு வளர்ந்துகொண்டு போகையில், மனிதன் என்பவன் யார்? என்ற கேள்வி பிறந்தது. உடனே அந்த இளைஞன், "இறக்கையில்லாத இரண்டு கால் பிராணி, மனிதன்" என்று சற்று பதட்டமாக பதில் சொன்னான். அரிஸ்டாட்டில் சிரித்தார். வீட்டுக்குள்ளேபோய் இரண்டு இறக்கைகளையும் கத்தரித்து, ஒரு கோழியை எடுத்துக்கொண்டு வந்து, "உன்னுடைய வர்ணனைப்படிக்கு, இது மனிதன் தானே?" என்று கேட்டார்.

பிறகு, இருவரும் சேர்ந்து மனிதனுக்குரிய லட்சணங்களை விஸ்தரித்துக்கொண்டே போனார்கள். கட்டுபடியாக வில்லை. மனத்துக்கு திருப்தி தரக்கூடியபடிக்கு, மனிதன் என்பவனை அளந்து சொல்ல முடியாது என்ற முடிவுக்கு வந்தார்கள். மனிதனைப் பார்த்தால் தெரிந்துகொள்ளலாம்; வர்ணிக்கலாம். ஆனால், எல்லை கட்டி, இப்படி இருந்தால்தான் மனிதன் என்று சொல்ல முடியாது.

## நேதி வாதம்

உபநிஷத்தில் "கடவுள் யார்?" என்று ஒரு பிரச்னை எழுந்தது. இருவர் வாதம் செய்கிறதுபோல, அந்த பிரச்

ளேயைப்பற்றி பேச்சு நடக்கிறது. "அது கடவுளா?" என் கிறார் ஒருவர். 'இல்லை' என்கிறார் மற்றவர். வடமொழியில் இதற்கு 'நேதி' (அது இல்லை) என்று பெயர். கடவுள், அது இல்லை, இது இல்லை, மற்றொன்றும் இல்லை என்று சொல்ல முடிந்ததே யொழிய, கடவுள் இதுதான் என்று வகுக்க முடியவில்லை.

எது தமிழ்? என்ற கேள்வியும் இதைப்போலத்தான்; தமிழ்—இங்கிலீஷ் அல்ல, உருது அல்ல, லத்தின் அல்ல, ஜெர்மன் அல்ல என்றுதான் எளிதிலே சொல்ல முடியும். தமிழ் என்பது இதுதான் என்று சொல்லுவது கஷ்டம்.

தமிழ் எழுத்துக்களில் எழுதுவதை தமிழ் என்று சொல்லலாமா? முடியாது. எந்த பாஷைச் சொற்களேயும் தமிழ் எழுத்துக்களால் எழுதலாம்; அதைக் கொண்டு, அவைகளே தமிழ் என்று சொலல முடியாது.

தமிழர்கள் பேசும் பாஷை தமிழ் என்று சுருக்கமாக சொல்லிவிடலாமே என்று சிலர் சொல்லலாம். இது யோசனையில்லாத பேச்சு. ஏன? தமிழர்கள் யார் என்று கேட்டால், இரண்டு விதமாகத்தான் பதில் சொல்ல முடியும் தமிழ் நாட்டில் வசிப்பவர்கள் என்று ஒன்று சொல்லவேண்டும். அல்லது தமிழ் பேசுபவர்கள் தமிழர்கள் என்று சொல்லவேண்டும். பயித்தியம் தெளிந்தால் கல்யாணமா? கல்யாணமானால் பயித்தியம் தெளியுமா? என்பதைப்போல், இது விநோதமாகிறதே யொழிய, விஷயம் சரியாக விள்ளவில்லை,

எது தமிழ்? யாழ்ப்பாணத்தில் பேசுவது தமிழா? பாண்டி நாட்டவர் பேசுவது தமிழா? கொங்கு நாட்டில் பேசுவது தமிழா? சோழ நாட்டில் பேசுவது தமிழா? அல்லது சென்னைப்பட்டினத்தில் பேசுவது தமிழா? இந்த ரகங்களில், எதைத் தமிழ் என்று சொல்லுவது? அசல் தமிழ் இது, இமிடேஷன் தமிழ் இது, என்று பிரிக்கிறதா?

எது தமிழ்? பண்டிதர்கள் பேசுவது தமிழா? பாமரர் கள் பேசுவது தமிழா?

ஜாதிகள் அதிகமாயிருக்கும் இந்நாட்டில் ஒவ்வொரு வகுப்பினர், தமிழை ஒவ்வொரு விதமாகப் பேசுகிறார்கள். எந்த வகுப்பினர் பேசுவது அசல் தமிழ்? இதை நிர்த்தாரணம் செய்ய முடியுமா?

இங்கிலீஷ் படித்த நண்பர்கள், "என்ன சார், வாக்கிங் போனால, ஹெலத் இம்ப்ருவ் ஆகும் என்று சொல்கிறார் களே, அதைப்பற்றி தங்கள் ஒபினியன(கருத்து) என்ன?" என்று பேசினால், இது தமிழா? தமிழ் இலலையாயின, அது என்ன?

வேறு நாடுகளிலிருந்து, பல ஜோலிகள் காரணமாக, தமிழ் நாட்டிற்கு வருபவாகள விதம் விதமாக தமிழ் பேசுகிறார்கள. "உனகக நான் சொல்றுன; நமக்கு, அவனுக்கு பொலலாத கோபம்" என்று பேசும்பொழுது, இதை எந்த வகுப்பில சோக்கிறது?

தமிழிலேயே, பேசுகிற பாஷை, எழுதுகிற பாஷை என்று இரணடு வகைகள இருககின்றன. பேசுகிற தமிழ் தமிழா? எழுதுகிற தமிழ் தமிழா? எது தமிழ்? இப்படியே பேசிக்கொணடு போனால, சிக்கலகளும் பின்னலகளும் தான் வளரும். கேள்விக்கு நேரான பதில் கிடைக்காது.

## சாது கேள்வி!

பார்வைக்கு இந்த கேள்வி ரொம்ப சாதுவாக இருக்கிறது. பதில் சொல்ல ஆரம்பித்தால், சுற்றிச்சுற்றி வர வேண்டியிருக்கிறது. இதற்கு விமோசனம் கிடையாதா? தீர்க்கதரிசி மாஜினி, "கனவானைப் பார்த்த அளவிலே தெரிந்துகொள்ளுவதைப்போல, கவிதையையும் தெரிந்து கொள்ளலாம். ஆனால் கவிதையை வர்ணனைக்குள் கட்டுப் படுத்தி எல்லை கட்ட முடியாது" என்று சொன்னதைப் போல நானும் கையை விரிக்க வேண்டியதுதானா?

தமிழை சிறிது நேரத்துக்கு மறந்துவிடுவோம். இன்னொரு கேள்வியை எடுத்துக்கொள்வோம். சொத்து என்

பது என்ன ? ஒரு காலத்தில் ஆடு மாடுகள்தான் சொத்து. ஒரு காலத்தில் நகை நட்டுகள்தான் சொத்து. ஒரு காலத்தில் பூமிதான சொத்தாக கருதப்பட்டது. தங்கம் வெள்ளி நாணயங்களைக்கொண்டு சொத்தை மதிப்பிட்ட காலமுண்டு. இப்பொழுது, செக் புத்தகம, ஷேர்கள் இவைகளைக்கொணடு சொத்தை மதிப்பிடுகிறார்கள். அதாவது, ஆடு மாடுகளும் சொத்துத்தான்; தோட்டம் துரவுகளும் சொத்துத்தான்; நகை நட்டுகளும் சொத்துத்தான்; ஷேர்களும சொத்துத்தான. சொத்தை அந்தந்தக காலத்தின் போக்கைக்கொணடு நிர்த்தாரணம் செய்வதுதான் முறை.

ஆகவே, "கம்பன் எழுதியதுதான் தமிழ். காளமேகம் பாடியது தமிழ் அலல; புகழேந்தி பாடியதுதான் தமிழ், அண்ணாமலை ரெட்டியார் பாடிய காவடிசசிநது தமிழலல" என்று சொலலுவது முடியாது. சொத்து சமபநதமாக எப்படி அபிப்பிராயம் மாறிகொணடே வந்ததோ, அதே மாதிரி தமிழ் இன்னதுதான என்பதைப் பற்றியும் அபிப்பிராயம மாறிக்கொணடேவரும். சுமார் நூறு வருடங்களுக்குப் பிறகு, நான் இப்பொழுது உங்களிடம் பேசிக்கொணடிருக்கிறேனே, இதுவே தமிழ் இல்லை என்று அபிப்பிராயம் வந்துவிடலாம். ஆயிரம் வருடத்துககு முன் பேசின இங்கிலீஷுக்கும், இப்பொழுது பேசுகிற இங்கிலீஷுக்கும ஏணி வைத்துத்தான் பார்ககவேண்டும்? ஒனறுக்கொன்று சம்பந்தமே இலலைபோல, அவ்வளவு விததியாசமாக இருக்கிறது. ஆகவே, எது இங்கிலீஷ் என்று கேட்டால் என்ன சொல்லுகிறது? 'ஆயிரம் வருடத்துக்கு முந்தி பேசினதும் இங்கிலீஷ்தான்; இப்பொழுது பேசுகிறதும் இங்கிலீஷ்தான்' என்று சொல்லுவதுதான் புத்திசாலித்தனமாகும்; நேர்மையுமாகும்.

## இரண்டும் தமிழ்

ஆயிரம் வருடத்துக்கு முந்தி பேசின தமிழ்தான் தமிழ்; நான் இப்பொழுது உங்களோடு பேசுவது தமிழல்ல என்று

சிலர் பிடிவாதமாக, தொண்டைத் தண்ணீர் வற்றிப் போகும்படியாக கட்சி பேசக் காத்திருக்கலாம். ஆனால், அதைப்போல் அபத்தமான கட்சி வேறு எதுவும் இருக்க முடியாது.

தமிழ் வார்த்தைகள் இன்னதுதான், இவ்வளவுதான் என்று எண்ணிப் பார்த்து, பொட்டணம் கட்டுவது தவறு. பண்டிதன், பறையா, தோப்பு, டால், பான்சுபாரி போன்ற அயல்நாட்டு வார்த்தைகளையெல்லாம் இப்போது இங்கிலீஷ் வார்த்தைகளைப்போல, இங்கிலீஷ்காரர்கள் நவமாக உபயோகித்துப் பேசும் அற்புதம் உங்களுக்குத் தெரியாதா? தோப்பு என்பது தமிழ்ச் சொல் என்றும், அதன் பேரில் இங்கிலீஷ்காரர்கள் ஆக்கிரமிப்புச் செய்தது தவறு என்றும் எந்தக் கோர்ட்டிலாவது தமிழர்கள் தாவா போட முடியுமா? தாவா போடலாமா?

ஒவ்வொரு பாஷையும் பிறக்கிற காலத்தில், அதற்கென்று பல நூறு தனிச் சொற்கள் இருக்கலாம். ஆனால், காலம் போகப்போக அந்த தனித்தன்மை அடியோடு மாறி விடுகிறது. குடகில் உற்பத்தியாகிறது காவிரி ஆனால், பின்னால், அதோடு, நொய்யல, பவானி, அமராவதி என்ற நதிகள் சேருகின்றன. இவைகள் சேர்ந்து காவிரியைக் கலக்கிய பிறகும், 'காவிரியைக் காவிரி என்று பெயர் கொடுத்து அழைக்கலாமா? "அது குடகில உற்பத்தியான அசல் காவிரி அல்லவே?" என்று அசட்டுவாதம் செய்யலாமா? செய்யவே படாது. இந்த மாதிரியான கட்சியைக்கொண்டு பார்த்தால், அயல் நாட்டு அறிவு நம் நாட்டுக்கு வரப்படாது, அயல் நாட்டு நாகரிகம் நம் நாட்டுக்கு வரப்படாது. அயல் நாட்டுப் பணம், நம் நாட்டுக்கு வரப் படாது.

இது எவ்வளவு கேவலமான கட்சி என்று இப்பொழுதும் எல்லோரும் சொல்லமாட்டார்கள்?

ஏதோ, இரண்டொரு குறிப்பிட முடியாத அம்சங்களைத் தவிர, எந்த பாஷைக்கும் தனித்தன்மை கிடையாது.

எந்த பாஷைக்கும் இலக்கணம் உண்டு. உச்சரிப்பு வித்தியா சங்களைத் தவிர, சப்த பேதங்கள் ரொம்பவும் குறைவு. வாக்கிய அமைப்புகள், அநேகமாய் எல்லா பாஷைகளிலும் ஒன்று போலத்தான் இருக்கின்றன. உலகமே ஒன்றாகப் போகவேண்டும் என்ற உணர்ச்சி ஓங்கிவரும் இக்காலத்தில் எந்த நாட்டுக்கும் எந்த பாஷைக்கும் தனிததன்மை பெரு மையையும் பாத்தியத்தையும் கொண்டாடுவது புத்தி சாலித்தனமல்ல.

இருந்தாலும் ஒரு பாஷையைப் பேசும்போது, குரலில், பாவங்களில், கேலி செய்யும் வகை, போன்றவைகளில் வித்தியாசங்கள் இருக்கினறன இதனாலேதான் எது தமிழ் என்ற கேள்வியும பிறந்திருககிறது.

## செலாவாணித் தமிழ்

• எது நாணயம் என்று உங்களைக் கேட்டால், நீங்கள் என்ன சொல்லுவீர்கள்? எது செல்லுகிறதோ, அதுதான் நாணயம் என்று நீங்கள் தயஙகாமல சொலலுவீர்கள். பழைய காலத்து 'ராமடங்' இப்பொழுது செலலுமா? தங்கம் என்ற ஹோதாவிலே அதற்கு மதிப்பு இருக்கலாம். ஆனல், செலாவணியாகும் நாணயம் என்ற வகையில் அதற்கு மதிப்பு இருக்காது ஆகவே, எது தமிழ்? எது தெருவிலும் சந்தையிலும, கச்சேரியிலும் கலகலவென்று செல்லுபடியாகிறதோ, அதுதான் தமிழ்

நான் மனோராஜ்யம் செய்வது தமிழ் அல்ல! நீங்கள் மனோராஜ்யம் செய்வது தமிழ் அல்ல, தமிழ் உலகம் என்ற சங்கப் பலகையில், தங்குதடையின்றி நடமாடிக்கொண்டி ருப்பதுதான் தமிழ். தமிழ் உலகத்தின் மதிப்பிடும் சக்தி கெட்டுக் கிடந்தால் அப்பொழுது அந்த உலகம் பேசுவது தமிழ் ஆகுமா என்று கேட்கலாம். 'மார்ஜோரி பாங்க்ஸ்' என்று இங்கிலீஷ் எழுத்துக்களில் இருப்பதை 'மார்ஷ் பாங்க்ஸ்' இங்கிலீஷ்காரர்கள் உச்சரிக்கிறார்கள். அது தவறு என்று சொல்ல மற்றவர்களுக்கு அதிகாரம் கிடையாது.

அதுபோலவே, தமிழ் உலகம் ஏற்றுக்கொண்ட சொற்கள் எல்லாம் தமிழ். அப்படிச் சொல்லப்படாது என்று சொல்ல யாருக்குமே அதிகாரம் கிடையாது.

இதுதான் இயற்கையான அளவு. இதுதான் நிரந்தர மாக நிறகககூடிய அளவு.

'குடிப்பதறகு காப்பி தயாராகிவிட்டதா?' என்பது தமிழ்தான. காப்பி, தயார், இந்த இரண்டு வார்த்தை களும் தமிழ் அல்லவே என்று சொலலுவது அபத்தம். ஜீரணசக்தி இல லா த வ ன் எ ல் லா ஆகாரங்களைப் பற்றியும நிஷ்டூரமாகப் பேசுவது இயற்கை. இது அந்நியச் சொல் எனறுல, அதை ஏற்று அனுபவிக்கும் சக்தி தமிழுக்கு இல்லையென்று சொலவதுபோல ஆகும். விஷத்தையும் மருந்தாக்கலாம். எதுவும தமிழாகலாம். எதையும் தமி ழாக்கலாம். அது வல்லவர்களின கைவேலைப்பாடு ஆகும்.

இனித் தமிழ் என்பது என்ன? ப ச் சை த் தமிழும் தமிழ்தான். கொ ச் சை த் த மி ழு ம் தமிழ்தான். சந்தைத் தமிழும் தமிழதான். குழநதைகள் வாய் குளறிப் பேசும் பித்தக்க தமிழும் தமிழ்தான்; மணிப்பிரவாள கதம்பத் தமிழகூட, ஒரு வகையில் தமிழ்தான்; சிறிது ஓசைக் கட்டையான நாணயம் எடுத்துக்கொள்ளப்படு வதைப்போல. ஆனல், மணிப்பிரவாளத் தமிழில் ஜாக்கிர தையாக இருக்க வேண்டும். ஒண்டவந்த பிடாரி ஊர்ப் பிடாரியை விரட்டிவிட்ட சங்கதியாக ஆகிவிடக் கூடா தல்லவா?

## பு ரி யு மா ?

வாக்கிய அமைப்புகளிலே, தமிழ்த் தன்மை இருக்க வேண்டும் என்று இப்போழுது சிலர் கடுமையாக வாதம் செய்கிறார்கள். பண்டைக் காலத்தில், ஜன்னல்கள் இல்லா மல் வீடு கட்டினார்கள். இதைப் பண்டைத் தனித் தமிழ்த் தன்மை என்றுகொண்டு இப்பொழுதும், வீடுகளை ஜன்னல் களில்லாமல் அமைக்கிறதா? அமைக்க வேண்டும் என்று

சொல்லுபவர்களைப் பார்த்து, அசடு என்று உலகம் பரிகாசம் செய்யாதா? கால தேச வர்த்தமானத்துக்கும், சீதோஷ்ண ஸ்திதிக்கும், செல்வத்துக்கும் ஏற்றவாறு வீடுகளை அமைத்துக் கொள்ளுவதுதான் பொருத்தமாகும். வாக்கிய அமைப்புக்கு தனியாக தமிழ்த் தன்மை தேவையில்லை. அமைப்பில் முக்கியமாக கவனிக்க வேண்டியது ஒன்று உண்டு அது சுதேசியா, அல்லது அந்நியமா என்பதல்ல; அந்த மாதிரி வாக்கியத்தை அமைத்துப் பேசினல் அல்லது எழுதினல், அது லேசாகப் புரியுமா என்பதைத் தான் கவனிக்கவேண்டும்.

அந்திய நாட்டு பாஷைகள் சிலவற்றில வாக்கிய அமைப்பில் சொல்செட்டை இயல்பாகக் காணலாம். அழகு குறையாமல, இந்த சொல் செட்டையும், தமிழில் ஏற்றிவிடத்தான் வேண்டும். அந்நியம் என்று ஒதுக்கித் தள்ளிவிடக் கூடாது. உதாரணமாக, அதன் அழிக்க முடியாத தன்மை என்பது தமிழ் அமைப்பல்ல என்று சிலர் சொல்லுகிருர்கள். சொல் செட்டைக் கருதி, இதைத் தமிழாக்கிவிட வேண்டியது அவசியமாகும்.

இதுவரையில் தமிழ்ச் சொல், தமிழ் அமைப்பு, தமிழ்த் தன்மை என்பதைப்பற்றி சொன்னேன. நல்ல வேளையாக தமிழ்க் கருத்து என்று ஒன்று தனியாக இல்லை என்பதைக் கண்டு, நான் சந்தோஷப்படுகிறேன். நல்ல கருத்துக்கள், நாகரிக கருத்துக்கள் எல்லாம தமிழக் கருத்துக்களதான். ஆகவே, கருத்தையும் தமிழாக்க வேண்டும் என்று தமிழர்களுக்குள் சண்டை ஏற்படாது என்பது நிச்சயம்.

## பூச்சாண்டி

இனி ஒன்றை மட்டும்தான் கவனிக்க வேண்டும். ஒவ்வொரு பாஷையை அளந்து தடைக்கட்ட ஒரு கருவி இருக்கிறது. அந்தக் கருவிக்கு இலக்கணம் என்று பெயர். பாஷைக்கு, அதாவது பேச்சுக்குப்பின் வந்தது இலக்கணம். பாஷைக்கு முன் வந்ததல்ல. ஒவ்வொரு தேசத்திலும், இந்த இலக்கணம் காலத்தின் தேவைக்கும் பாஷையின்

முற்போக்குக்கும் தக்கவாறு மாறிக்கொண்டு வந்து, இலக்கியத்திற்கு அனுசரணையாக இருந்து, பேருதவி செய்து கொண்டிருக்கிறது. வாக்கியங்களுக்கு எளிதிலே பொருள் விளக்கம் ஏற்படக்கூடிய ஒழுங்கு முறையை வற்புறுத்துவதுதான் இலக்கணத்தின் நோக்கமா யிருக்கவேண்டும்

இந்த நோக்கத்தை விட்டுவிட்டு, பூச்சாண்டி வேஷம் போட்டுககொண்டு, குழந்தைகளை பயமுறுத்துவதைப் போல இலக்கணத்தை அமைக்கக் கூடாது. இலக்கணம் சிறைக் காவலாளி வேலையை மேற்கொள்ளக்கூடாது. நிற்க, தமிழிலும் ஒரு இலக்கணம் இருக்கிறது. அது நீண்ட காலமாக, பூச்சாண்டி வேஷம் போட்டுக்கொண்டு நாட்டில் நடமாடி வருகின்றது. நன்னூலைக் கண்டு பயப்படாத தமிழனே இல்லை என்று சொல்லலாம். அழகான காரிய முறையை கற்பிப்பதற்காக ஏற்பட்ட சட்டம் அச்சத்தை உண்டாக்க தலைப்பட்டால் என்ன செய்கிறது? இயல்பான வளர்ச்சிக்கு, சட்டம் குறுக்கே நிற்குமாகில், அந்த சட்டத்தை மாற்றிததான ஆகவேண்டும.

நன்னூலின் துணையைக் கொண்டுதான் தமிழை எழுத வேண்டும எனறால், தமிழாகளுக்கு சமுதாயமாக புரியும் தமிழை எழுத முடியாது. பண்டிதர்களுக்குள் விலைபோகும் குழூஉககுறி பாஷையைததான் எழுத முடியும். நன்னூலின கட்டளைகள மரககட்டை போன்ற கட்டளைகள். இது தமிழ அமைப்பிலலை என்று சொலலுவார்களோ எனறு பயப்படுகிறேன். தமிழ பாஷையை ரொம்பவும் தோல் சுருக்கம் ஏற்படும்படியாகச் செய்துவிட்டது. இலக்கணத் தமிழ் நமமுடைய தமிழ் அல்ல என்று எண்ணும்படியான நிலைகது சாதாரண தமிழர்கள் வந்துவிட்டாாகள். அந்த நிலைமைக்கு அவர்களை வரும்படியாகச் செய்தது தமிழின் துர்ப்பாக்கியமாகும்.

எதற்காக இதை நான் விஸ்தாரமாகச் சொன்னேன் என்றால், ஒரு சிலருக்கு [illegible] பொருள் விளங்கக்கூடிய இலக்கணத் தமிழ், தமிழல்ல என்று சொல்லுவதற்குத்

தான். இலக்கணத் தமிழிலே, தமிழ் வார்த்தைகள் இருக் கலாம். தமிழ் அமைப்பு இருக்கலாம். இலக்கணம் வண் டிக் கணக்கில் இருக்கும் என்று சொல்லத் தேவையில்லை. ஆனால், அதில் தமிழ் மணம் கமழாது.

## தமிழ் மணம்

அப்படியானால் தமிழ் மணம் என்பது என்ன? என்று நீங்கள் கேட்கலாம், எல்லோரும் சந்தோஷத்தோடு ஏற்றுக் கொள்ளக்கூடியதும், எல்லோருக்கும் இயல்பாக களிப்பை உண்டாக்கக் கூடியதுமான வாசனைக்கு மணம் என்று பெயர். தமிழர்கள் எல்லோரும் விருப்புடனும் களிப்புட னும் இயல்பாகவும் ஏற்றுக்கொள்ளக்கூடிய பாஷையிலே தான் தமிழ் மணம் கமழும், கமழ முடியும் என்று சொல்ல லாம். ஆகவே, தமிழ் மணம் கமழும் தமிழ்தான் தமிழ்.

நாட்டில் மாளிகைகள், மச்சு வீடுகள், குச்சு வீடுகள், இருப்பதுபோல தமிழிலும் பச்சைத் தமிழ, கொச்சைத் தமிழ், மழலைத் தமிழ், சக்தி வாய்ந்த தமிழ் முதலிய ரகங் கள் இருக்கத்தான் செய்யும். ஜன சமுதாயத்தில் செல் வம், நாகரிகம் முதலியவற்றுள், ஒரு கூட்டத்துக்கு ஒரு கூட் டம், மேடுபள்ள நிலைமையிலே இருக்குமளவும், பாஷை யிலும் பச்சை, கொச்சை, பண்டித போன்ற மேடுபள்ளங் கள் இருந்தே தீரும். அதற்காக மச்சு வீடுதான் வீடு, குச்சு வீடு வீடல்ல என்று சொல்லிவிட முடியுமா? தனவந்தன் தான் மனிதன், மற்றவர்கள் மனிதர்கள் அல்ல என்று சொல்லலாமா? படித்தவன்தான் கணக்கில் சேர்த்தி என்று படிக்காதவனை ஒதுக்கித் தள்ளிவிட முடியுமா?

நாகரிக முன்னேற்றத்தால், ஜன சமுதாயத்தில் காணப்படும் மேடுபள்ளங்கள் நீங்கிப் போகுமாகில், பாஷையிலும் வித்தியாசங்கள் இருக்கமாட்டா. ஜன சமுதாயம் எல்லா வகைகளிலும் செழித்துக் கொழித்து வளர்ச்சி பெற்றால், அப்பொழுது எல்லா மக்களும் அநேக மாக சராசரி நிலையில் இருப்பார்கள். அப்பொழுது எது

தமிழ் என்று கேட்க வேண்டிய நிர்ப்பந்தமே ஏற்படாது. எல்லோரும் பேசுவது தமிழாயிருக்கும். எல்லோரும் ஏசுவதும் தமிழாயிருக்கும். எல்லோரும் களிப்புடன் கேலி செய்வதும் தமிழா யிருக்கும். கவிதைத் தமிழ் வேறு, காவியத் தமிழ் வேறு, கொச்சைத் தமிழ் வேறு என்ற பாகுபாடுகள் இருக்கவே இருக்காது.

எது தமிழ்? முடிவாகச் சொல்லுகிறேன்: தற்போதைய தமிழர்கள் இயல்பாக வலுக்கட்டாயமில்லாமல் வாழ்க்கைக்குத் தேவையென்று ஏற்றுக்கொண்டு, அமுலில் கொண்டுவந்திருக்கும் வார்த்தைகள் அனைத்தும் தமிழ். எல்லாத் தமிழர்களுக்கும் லேசாக அர்த்தமாகும் தமிழ் தான் தமிழ். சொல் செட்டுக்காக அமையும் வாககிய அமைப்புகளும் தமிழ் அமைப்புததான்.

சுரதா | **காடு**

கார்த்திகை தீபமெனக்
காடெலாம் பூத்திருக்கும்
பார்த்திட வேண்டுமடீ — கிளியே
பார்வை குளிருமடீ!

காடு பொருள் கொடுக்கும்
காய்கனி ஈன்றெடுக்கும்
கூடிக் களித்திடவே — கிளியே
குளிர்ந்த நிழல் கொடுக்கும்.

குரங்கு குடியிருக்கும்
கொம்பில் கனி பறிக்கும்
மரங்கள் வெயில் மறைக்கும் — கிளியே
வழியில் தடையிருக்கும்.

மாவும் பழுத்திருக்கும்
மலர்கள் விழித்திருக்கும்
பூவின் மதுசுரக்கும் — கிளியே
போவா ரடிவழுக்கும்.

பச்சை மயில் நடிக்கும்
பன்றி கிழங்கெடுக்கும்
நச்சர வங்கலங்கும் — கிளியே
நரியெலாம் ஊளையிடும்.

கல்லுரல் போன்ற முகம்
காட்டிடும் பன்றிகளை
மெல்லிய மான்தடுக்கும் — கிளியே
வேஙகைகள் வால்நிமிர்க்கும்.

அதிமது ரத்தழையை
ஆனைகள் தின்றபடி
புதுநடை போடுமடீ — கிளியே
பூங்குயில் கூவுமடீ!

காட்டின் சிறுநெருப்பு
காந்தள் மலர்ச் சிரிப்பாம்
நாட்டின் பெருநெருப்பு — கிளியே
நம்பிக்கை மோசமடீ!

இலைகள் உதிர்ந்த மரம்
ஏந்தும் கிளைகளெல்லாம்
வலைநிழல் போன்றிருக்கும்—கிளியே
வறுமை நிலை குறிக்கும்.

சிங்கம் புலிகரடி
சிறுத்தை விலங்கினங்சள்
எங்கும் திரியுமடீ — கிளியே
இயற்கை விடுதியிலே!

ஆர். சூடாமணி

# நிலவும் இருக்கிறது

எவ்வளவுதான் யோசிப்பது?

கணவனும் மனைவியும் ஒருவர் முகத்தை ஒருவர் பார்த்துக் கொண்டார்கள். பார்த்துப் பயனில்லை; பேசிப் பயனில்லை. இதயத்துக்கு விடையே கிடைக்கவில்லை.

"அப்படித்தானா அது?" என்றாள் கோமதி.

"ஆமாம். இம்மாதிரி சந்தர்ப்பத்தில் குழந்தை ஏதாவதொரு ஊனத்தோடு பிறப்பது எதிர்பார்க்கக்கூடிய விஷயம்தானாம்."

கோமதிக்கு வாய் வறண்டது. "அப்படியானால்...அப்படியானால்...என்ன செய்வது?"

"என்ன செய்வது?"

எதிரொலியா அவனிடம்? இருவருக்கும் எதிரொலிதான். செவியென்ற புலனைக் கடந்து, தவிப்பின் முடிவிலாத சிக்கல்களில் இடறிக் கொண்டிருந்த உணர்ச்சியின் வட்டமிடும் கேள்விக்கு இருவரிடமும் எதிரொலியைத் தவிர வேறு என்ன பதில் இருந்தது?

அனந்தன் மனைவியை இரக்கத்துடன் பார்த்தான். நெஞ்சில் பெண்மை என்று நிறைந்திருந்த பொருளையெல்லாம் சேர்த்துக்கொண்டு, கனவு நிலை தாண்டி, காத்தல்

நிலை தாண்டிக் களிப்பு நிலையில் முழுமை பெற்று ஒளிர்ந்தது அவள் உடல். ஏழு மாதங்கள் ஆகியிருந்தன. இருவரும் வரவேற்ற சம்பவம் திருப்தியுடன் எதிர்நோக்கிய நிறைவில், இனிதாய் முகிழ்க்காமல் அரும்பாகவே ஆசையாகவே மடிந்துவிட வேண்டியதுதானு ?

"தெய்வம் விட்ட வழி ஆகட்டும்" என்று முணுமுணுத்தாள் கோமதி.

"அதற்காக ஊனமுள்ள குழந்தையை உலகில் தெரிந்து கொண்டு வரலாமா ?"

"நம் அதிருஷ்டம் அப்படி என்று நினைத்துக்கொள்ள வேண்டியதுதான்." கோமதி எழுந்து ஜன்னலருகில் சென்றாள். அவனுககு முதுகுதான் தெரிந்தது. அவனும் மௌனமானுன். இரு மௌனங்களும் கலந்தன.

"ஐயோ, எனக்குக் குழந்தை வேண்டும்." கோமதியின் திடீரென்ற கதறலில் அந்த மௌனம் விம்மிவிட்டது.

"எனககும்தான் வேண்டும்."

"பொன்னுக்கு வீங்கி குழநதைகளுக்குத்தான் வரும். பெரியவர்களுக்கு எங்கேயாவது சகஜமாய் வருவதுண்டா? என் போதாத வேளைதான்." நினைத்து நினைத்துப் பொங்கி விம்மினுள் கோமதி. உணர்ச்சி விரிப்பில் வேறெந்த எண்ணமும் நிழலிடவில்லை. ஒரே நினைவுதான்: 'கர்ப்ப நிலையில் போன மாதம் எனக்கு ஏன் பொன்னுக்கு வீங்கி வந்தது? அதனுல்தானே என் வயிற்றிலுள்ள உயிர், ஒளி காணும் முன்பே இருளில் அமிழ வேண்டும்?'

"வேண்டாம், அவசியமில்லை. இருந்துவிட்டுப் போகட்டும்..."

"கோமதி, இதோ் பார். இப்படி அலண்டு போகலாமா? ஏது விவேகமோ, அதைச் செய்ய வேண்டும்..."

"சொல்லுங்கள், எது விவேகம் ?"

"தெரியவில்லையே."

"குறையில்லாமலும் பிறக்கலாமல்லவா?"

"குறையோடும் பிறக்கலாம்."

செயலற்று அவள் கண்களைத் துடைத்துக் கொண்டாள்.

"கோமதி!"

' மீனு மாமியா? வாருங்கள்."

இழுபட்ட திரையாய் நெஞ்சுள் எண்ணம் சுருண்டது.

"என்ன மாமி?"

"நான் கொஞ்சம் அவசரமாய்க் கடைத்தெரு வரை போகவேண்டியிருக்கிறது. ஹரி என்னமோ சுரத்தில்லாமல் இருக்கிறான். இன்று அவனைத் தனியாய் விட்டுவிட்டுப் போகப் பயமாயிருககு. நான திரும்பி வரும் வரையில் நீ கொஞ்சம் அவனோடு போய்ப் பேசிககொண்டிருக்க முடியுமா?"

• தயங்கியபடிதான் கேட்டாள் அடுத்த வீட்டு மீனாட்சி. சக்கர நாற்காலியிலேயே வாழ்ந்துகொணடிருக்கும் தன் மகன் ஹரிஹரனோடு வந்து இருககுமாறு யாரைக கேட்ப தானாலும அவளுக்குத தயக்கம்தான்.

"இதென்ன பிரமாதம மாமி? இதோ போகிறேன்."

"நானும் போய் பேசிககோண்டிருக்கிறேன்" என்றான் அனந்தன.

மீனாட்சிக்கு வியப்பும் ஆறுதலும ஒன்றையொன்று மிஞ்சின.

"ரொம்ப சந்தோஷம்" என்று தடுமாறினாள்.

கணவனும் மனைவியும பக்கத்து வீட்டு மாடியை அடைந்தார்கள். ஹரியை எவ்வளவு காலமாய் அவர்களுக்குத் தெரியும்! ஆயினும், இன்று புதுத் துடிப்பு. இப்போது அவர்கள் பார்வைக்கு அவன் குறையில் புதியதொரு காட்சி! காட்சியில புதியதொரு அர்த்தத்தின் விழிப்பு. ஊனம் என்பது அடுத்த வீட்டு அனுதாபமாய் மட்டும்

இருந்த நிலை மாறிவிட்டது. வெளியில் தெரியும் அந்த ஊனத்தை நெஞ்சோடு அணைத்துத் தன் உயிரின் உயிராக, சதையின் சதையாக, ரத்தத்தின் ரத்தமாக, கனிந்த கண்ணீராக, உள்ளத்தின் துடிப்பில் வலிக்க வலிக்க வைத்து நிறை பார்க்கும் அவசியம் அவர்களுக்கு இப்போது.

ஹரி அவர்களைப் பார்த்ததும் புன்னகையோடு "அம்மா வெளியே போகுமுன் உங்களை எனக்குக் காவலாய் அனுப்பிவிட்டுப் போயிருக்கிறாளோ?" என்றான்.

அவன் பேச்சே என்றும் அப்படித்தான்.

"அதெல்லாம் ஒன்றுமில்லை ஹரி. நாங்கள்தான் சும்மா உன்னைப் பார்த்துவிட்டுப் போகலாமென்று வந்தோம்" என்றவாறு அனந்தன் அருகில் சென்று அவன் சக்கர நாற்காலியை வராந்தாவுக்குத் தள்ளிக்கொண்டு வந்தான். செயலில் ஒரு புதிய ஸ்பரிசம், பரிதாபம் துடித்தது.

கோமதியும் வந்து எதிரே உட்கார்ந்துகொண்டாள்.

"பாவம், அம்மாவுக்கு ரொம்பக் கவலை என்னைப் பற்றி" என்றான் ஹரி.

அவன் குரலில் நெகிழ்ச்சி இல்லை, பரிவு இல்லை, குத்தல் கூட இல்லை. அவனிடம் ஊனம் ஒன்றுதான் இருந்தது. அது கண்ணைவிட அதிகம் பார்த்து, காதைவிட அதிகம் கேட்டு, அறிவைவிட அதிகம் அறிந்து, உண்மையை எப்போதும் பேசிக்கொண்டிருந்தது. அந்தப் பேச்சில் அவன் உள்ளத்தைக் காண முடியுமா? இருபது வயசுப் பையன். என்னென்ன கனவுகள் முகையவிழ்க்கின்றனவோ, ஊனத்தையும் மீறி? மலை தடுக்கிறதே என்று கதிரொளி பரவாதிருக்க முடியுமா? என்றோ—எப்போதோ—இளம்பிள்ளை வாதம் வந்ததாம், தன் குழந்தைப் பருவத்தில் நடந்த அந்த நிகழ்ச்சியை அவனே கதை கேட்பது போலத்தான் கேட்டிருந்தான். ஆனால் அக்கதையின் தொடர்ச்சி வரி வரியாய், பக்கம் பக்கமாய், காண்டம் காண்டமாய், விரிந்து அவன் வாழ்வை மூடிக்கொண்டிருப்பதோ, அவன் அன்

ருடம் காணும் உண்மை; கணந்தோறும் மூச்சு விடுவது போல் இடையறாது அவன் அனுபவிக்கும் வாஸ்தவ நிலை. இடுப்புக்குக் கீழே விரிந்திருந்த போர்வை, சிதைந்த கால்களை மட்டும் மூடவில்லை, இ த ய த் தை யு ம் தா ன் மூடியிருந்தது.

"உன்னைப்பற்றி என்னப்பா கவலை அ வ ளு க் கு ? நீ ரொம்ப அறிவாளி என்று பெருமைப்பட்டுக் கொண்டிருக்கிறாள்" என்றான் அனந்தன்.

"உன் அம்மாவுக்கு உன்னிடம் எவ்வளவு ஆசை தெரியுமா ஹரி?" என்றாள் கோமதி. கணவனை இழந்த மீனாட்சிக்கு ஹரிஹரன்தான் எல்லாம்.

"தெரியுமே!" ஹரி சிரித்தான்:

"அம்மாவுக்கு என்னிடம் உ யி ர் தா ன், இல்லாமலென்ன? அதனால்தான் இன்று நானென்னமோ வாட்டமாய் இருந்தேனே என்று தவித்து உருகிக்கொண்டிருந்தாள்."

"அது போகட்டும், நீ ஏன் இன்று அப்படி இருந்தாய்? ஏதாவது கவலையா?"

கேட்டவுடனேயே கோமதிக்குச் சட்டென்று கையை நீட்டி அந்த வார்த்தைகளை நிறுத்திவிட வேண்டும்போல் இருந்தது. ஆனால் அவளது அர்த்தமற்ற கேள்வி ஹரியின் மேல் பதிந்ததாகவே தெரியவில்லை அவன் வாசலையே பார்த்துக்கொண்டிருந்தான். பா ர் வை வெறித்திருந்தது. எவ்வளவு வருஷங்களாய் இப்படிப் பார்க்கிறான் காலத்தை? காலம் இவனைத் திரும்பிப் பார்க்காமலேயே ஓடுகிறது. ஒவ்வொரு பருவத்திலும் ஒரு மலரை அதனிடம் எடுத்து வருகிறான். நட்புஎன்றும், கிளர்ச்சி என்றும், இளமைஎன்றும் பல ஆசைப் பூக்களைத் துடிக்கும் கையில் வைத்து நீட்டுகிறான். ஆனால் காலம் அவனுக்காக இல்லை. அதன் மண்ணில் அப்பூக்களின் சுகந்தம் இழைய முடியாமல் அது ஓடிவிடுகிறது — அறிமுகமானவனைத் திரும்பிப் பார்த்து புன்னகையளிக்

காமல் ஓடும் நீச நண்பனைப்போல். நாளடைவில் நீட்டிய கை வெறும் கையாகவே நின்றுவிடுகிறது. நோக்கிய பார்வை உயிரற்று வெறித்துப் பதிகிறது.

"என்னதான் சொல் ஹரி, உன் அம்மாவுக்கு உன்மேல் உயிர்தான்" என்றாள் கோமதி வேகத்துடன்.

"ஆமாம்."

"உனக்காகத் தன் பிராணனை வேண்டுமானாலும் கொடுப்பாள்."

"தெரியும்."

"இந்தத் தாயன்பு எவ்வளவு புனிதம் தெரியுமா?" கோமதிக்கு ஏனோ ஆவேசம் மிகுந்தது. "எவ்வளவு அதிசயமான தன்னலமற்ற பொருள் தெரியுமா அது? உன் அம்மா சிறந்தவள், தெய்வம் மாதிரி. தெரிகிறதா, ஹரி? அவள் தெய்வம் மாதிரி.."

"நான்? என்னைப்பற்றி யாராவது யோசித்தீர்களா?" திடீரென்று அவள்மேல் கண்களைத் திருப்பினான் ஹரி. "ஊனமுள்ள பிள்ளைமேல் அன்பு வைத்து அவள் தெய்வமாய் விளங்கலாம். ஆனால் என் நிலை என்ன? நினைவு தெரியு முன்பே எனக்கு இந்தக் கதி வந்ததே. என்னை ஏன் பிறகு வாழவிட்டாள் அவள்? என்னைப் பற்றி யார் யோசித்தார்கள்? இருபது வருஷமாய் சூனியத்தில் வாழ்கிறேன். என்னிடம் அன்பு வைத்து ஒருவர் தெய்வமாய் விளங்குகிறார்களா இல்லையா என்றா எனக்குக் கவலை?"

"ஹரி!"

"நான் எங்கேயாவது உயிரை விட்டுவிடப் போகிறேனோ என்று அம்மாவுக்கு எப்போதும் பயம். கத்தி, அரிவாள்மணை எதையும் அவள் பீரோக்கள் மேல்தான் வைக்கிறாள். வீட்டில் ஒரு சிறு ஆணிகூட என் கைக்குக் கிடைக்காது. மருந்துகள் எல்லாம் பூட்டிய பெட்டிக்குள். குளிக்கப் போகும்போது வேலையாள் பக்கத்தில் இருக்கிறான். அப்படி என் உயிரைக் காக்கிறாளாம். 'ஆனால், நான் கொஞ்சம்

மேஜையைப் பிடித்துக்கொண்டு முக்கி எம்பினால் சற்று உயர நிலைக்குத் தாவ முடியும். அங்கிருந்து வராந்தா கைப்பிடிச் சுவர்மேல் தாவ முடியும். இது அம்மாவுக்குத் தோன்றவில்லை.”

“ஐயோ, ஹரி!”

“ஆனால், நான் அப்படிச் செய்யமாட்டேன். ஏன் தெரியுமா?” ஹரிஹரனின் பார்வை ஆழத்திலிருந்து பாய்ந்து வந்து அவர்களை அறைந்தது “ஏனென்றால் உயிரோடிருப்பதும் ஒரு வழக்கமாகி விடுகிறது; மூச்சு விடுவதும் ஓர் அப்பியாசமாகி விடுகிறது மனிதன் தன் பழக்க வழக்கங்களுக்கு அடிமையான பிராணி. வாழ ஒன்றுமே இல்லை என்ற போதும் நான் உயிரை விடமுடியாது. ஏனென்றால் இவ்வளவு நாள் உயிரோடு இருந்து பழகிவிட்டேன். இனி என மனம் அந்தக் கைப்பிடிச் சுவரிடம் சென்றாலும்—அது தான் விமோசனம் என்று உணர்ந்தாலும்—அதன் ஆச்ரயத்தையே வேண்டி அழுதுகொண்டிருந்தாலும — என் உடல் பின்னுக்குத்தான் வரும். ஏனென்றால், அதற்கு உயிரை வைத்துக்கொண்டிருப்பதுதான் பழக்கமாகி விட்டது—அந்த உயிா எவ்வளவு பெரிய சுமையாயிருந்தாலும். இந்த நிலையை யாராவது எணணிப பார்த்தீர்களா?”

அவன் பேச்சில் வந்து மோதி விழுந்தன, கோமதியின் விம்மல்கள். உலகமே சரிந்து அவளைச் சுற்றி விழுந்தது. அனந்தன் தலை கவிழ்ந்து நின்றிருந்தான். ஹரியைப் பார்க்கும் திடம் அவனிடமில்லை.

“என்ன செய்வது?” என்ற கேள்வி இப்போது இல்லை. விடை கிடைததுவிட்டது. அடுத்த நாள் லேடி டாக்டர் ஸ்மித்துடைய விடுதியின் வெளி அறையில, இன்னும் சில பெண்களுடன் காத்து அமர்ந்திருந்தாள் கோமதி. உள்ளே டாக்டர் ஒரு பெண்ணைப் பரிசோதித்துக் கொண்டிருந்தாள்.

செய்ய வேண்டியதுதான். சந்தேகமென்ன? ஆபத்துக்கு இடமிருக்கிறது என்றாலே போதாதா? என்றாவது

ஒரு நாள், வருங்காலத்தில், துன்பமே இதயமாய்த் துடிக்கும் ஒரு சூனிய இருள் நேரத்திலே, இன்று அவள் வயிற்றிலிருக்கும் அருமைப் பொருள் 'என்னை ஏன் அவள் வாழவிட்டாள்?' என்று கதறினால், இவளால் சகிக்க முடியுமா? நேற்றுமுதல் கண்களின் விளிம்பில் ஹரியின் துயரம்தான் பார்வையாய்ச் சுழன்றது. சுருண்ட நெஞ்சம் விரியும்போதெல்லாம் அதில் ஹரியின் நிராசையை நதான கண்ணீர்ப் புள்ளிகள் கோலமிட்டன.

ஊனத்தை உலகினுள் கொண்டு வருவதா ?

அவளுக்கு இதுதானே முதல். பின்னால் மற்றவர்கள் பிறப்பார்கள்—வாழ வேண்டும் என்ற உற்சாகமுள்ளவர்களாய் இந்தக் குழந்தை பிறக்கவேண்டாம. வாழ்வின் ஆழத்தினது ஒரு சிறு இன்பத் துளியைக் கண்முன் மின்னலிடச்செய்து, மூழமையின் சுவைக்குக் கட்டியம் கூறி மறைந்த முதல சின்னமாகவே இது நீங்கட்டும்.

இல்லையானல், ஹரியைப் போலல்லவா... ..ஐயோ, வேண்டாம். உயிரே சிறையாவதா? மூச்சின் இழைகளில் தடுமாறி இன்பம் நசித்துப் போவதா? மரணமே கானல் நீராக, அண்ட முடியாத அழகாக மாறிவிடும் கொடுமையில் வாழ்வு ஏமாந்து சிறைப்படும் எல்லைக்கு அப்பால் என்ன இருந்தது? உடல் நடுக்கத்தில் ஒரு நிமிஷம் கோமதியின் கண்கள் மூடித் தலையும் சாய்ந்தது. நெஞ்சில் இருள் வட்டங்கள் சுழன்று வேகமேறிய மயக்கம்.

திடீரென்று அந்த மயக்கத்தில் ஏதோ மோதியது. மெத்தென்று உடல்மேல் விழுந்து அழுத்திய பொருளை இயந்திரம்போல் தாங்கிப் பிடித்துக்கொண்ட கரங்களை அவள் இன்னும் தளர்த்தவில்லை. கண்களைக்கூடத் திறக்காத விநாடித் துண்டம்தான். அதற்குள் இது என்ன உணர்வு? மேனி முழுவதும் சிலிர்த்து எழும் ஓட்டம் ஒன்றினுள் உள்ளமே நீராய்க் கரைந்துவிட்டதுபோல் ஒரு பிரமை. கரும்பில் இனிமையென தனக்குத் தானே விதியாயுள்ள ஏதோ உள் அசைவினால் நெஞ்சில் துளித்துவிட்ட

பன்னீர்த் துளியின் தன்மையில் ஒரு புல்லரிப்பு. கோமதி கண்களைத் திறந்தாள்.

"ஸாரி."

யார் இந்தப் பையன்? எட்டு வயதிருக்கும். என்ன களை யான முகம்! அதன் மோகன முறுவலின் ஒளி அவள் உள்ளத்தில் மட்டுமல்ல, வயிற்றிலும் நிறைந்து, அங்கிருந்த உயிரினுள் உயிர்ப்பது போலிருந்தது.

அவள் பக்கத்தில் உட்கார்ந்திருந்த பெண் சட்டென்று சிறுவனின் கையைப் பற்றினாள்.

"நீ அங்கே இருக்கிறயா அம்மா? நான் பாட்டுக்கு ஓடி வந்து யார் மேலேயோ மோதிண்டுட்டேன் போலிருக்கு· ஸாரி" என்றான் பையன் கோமதியைப் பார்த்து.

அவள் புன்னகை துடித்து நின்றது 'ஐயோ, இந்தப் பையனின் கண்கள் ஏன் இமைக்கவில்லை !'

"ஸாரி" என்றான் பையன் மூன்றும் முறையாக.

"பரவாயில்லையப்பா" கோமதியின் வாயிலிருந்து சொற் கள் எப்படியோ வந்தன. உள்ளம் பதற, அருகிலிருந்த பெண்ணைப் பார்த்தாள்.

"என் மகனம்மா இவன் பெயர் முத்து" தாய் பேசி முடிக்குமுன் மகன் குறுக்கிட்டான், "எனக்குக் கண் தெரி யாது மாமி. அதான் உங்கமேலே முட்டிண்டேன"

கோமதியின் உதடுகள் பதறின. இது என்ன கொடுமை! விதியின் என்ன வஞ்சகம்! இந்தப் பச்சிளங் குழந்தைக்குப் பார்வையளிக்காத அந்த விதிக்குக் கண் உண்டா? பார்க்கக் கூடிய இரு கண்கள் அடைந்திருந்த தான், அந்தக் குழந்தை யின் முன் குற்றவாளி என்பதாக உணர்வு ஓடியது.

"எங்கேயாவது அடி பட்டதா?" மொழி அறியாத அனுதாபத்தையெல்லாம் வைத்துச் சிறுவனைத் தடவித் தடவிக் கொடுத்தாள் கோமதி 'இந்த மலர் மேனியிலா ஊனம்? இந்த இளந் தென்றலுக்கா சிறை? இந்த ஒளி மொட்டிலா இருள்?'

"அதெல்லாம் ஒண்ணும் அடிபடலே. நான் மோதின்ட வேகத்திலே உங்களுக்கு வேணும்னு பட்டிருக்கும்!" முத்து சிரித்தான். முத்துக்கள்தாம் சிரித்தன.

கோமதியின் நெஞ்சம் பாரத்தில் அமிழ்ந்து விசித்துக் கொண்டிருந்தது. தெய்வமே, இது என்ன உலகம்? எங்கும் இத்தகைய காட்சிகளைத்தானு அவள் பார்க்க வேண்டும்? ஹரியின் சித்திரவதை, இதோ இன்னொரு பரிதாபம்.

"இத்தனை நாழி என்னடா பண்ணிண்டிருந்தே முத்து?" என்றாள் தாய்.

"வெளியே சில பசங்கள் இருந்துதம்மா. எல்லோருமாய் உட்கார்ந்து கதை சொலலிண்டிருந்தோம். அதிலே ரகுன்னு ஒரு பையன், எவ்வளவு வேடிக்கையா ஒரு கதை சொனனுன் தெரியுமா?"

இம்முறை முத்துககள் உதிர்ந்தபோது கோமதியின் செவிகள் முதன முறையாக உணர்வு பெற்றன. எப்படிச் சிரிக்கிறுன இவன்! எனன ஒளி, என்ன இனிமை!

"வேடிககைக கதையா?"

"ஆமாமமா!"

கோமதிக்கு வியப்பாயிருந்தது. இவனிடம் கலகலப்பா? "ஏனப்பா, உனககுக் கதை கேட்பதென்றுல் பிடிக்குமா?" என்றாள்.

"ஓ! ரொம்பப் பிடிக்கும். கதை எழுதக்கூட எழுதுவேன், மாமி!" கண்கள் இருந்தால் அவை மட்டுமே உற்சாகத்தில் ஒளிர்ந்திருக்கும். அவை இல்லாத காரணத்தாலோ என்னமோ, முகமும கையும் அதரங்களும் கண்களாயின; கண்களின பொறியாயின; பொறியெல்லாம் சேர்ந்த சோதியும் ஆயின.

"என்ன! கதை.. எழுதுவியா?"

பையன் பொறுமையாக "ஓகோ, எல்லோரைப்போல் சந்தேகம் வந்திருக்கு உங்களுக்கும். எனக்கு எழுதத் தெரியும் மாமி. ஸ்கூலுக்குப் போறேன்!" என்றான்.

அவன் பேச்சு வியப்புண்டாக்கியது என்பது பெரிய விஷயமல்ல. பேசிய தோரணை! குறைக்கு அழவில்லை அவன். அவளது சந்தேகத்தால சங்கோஜமடையவில்லை. இயற்கை யாகவே பேசினன.

"ஓ!" என்ருள் கோமதி.

"அவனைப் போன்றவர்களுக்கான பள்ளிக்கூடத்தில் சேர்த்திருக்கிறேம். முத்து நன்ருகப் படிக்கிறதாக அவன் டீச்சர் கூடச் சொன்னுள்" அவள் விவரித்த தொனியை நெஞ்சால் திரும்பிப் பார்த்தாள் கோமதி முத்துவின் இயல்பான நடத்தைக்கு மூலவித்து எங்கே யிருந்ததென்பது உடனே தெளிவாகிவிட்டது. இவள் எவ்வளவு சாதாரண மாய்ப் பேசுகிருள்! வயது முப்பதுக்குமேல் இருக்குமென்று தோன்றவில்லை. நிறைமாதக்காரி. பொதுப் பரிசீலனைக்கு டாக்டரிடம் வந்திருக்கிருள் போல் இருந்தது.

"நான் பெரியவனுனப்புறம் நாவலெல்லாம் எழுதப் போறேன்!" என்ருன் முத்து ஆவலாக புது மனிதர்களோடு பேசும் தயக்கம் சிறிதும் அவனிடம் இல்லை; சுபாவமே கலகலப்பாய் இருந்தது தன் குறையைப் பற்றி அவன் நினைப்பதாகவே தெரியவில்லையே?

"இப்பவே எழுதமாட்டியா?" என்று சகஜமாகப் பேச முயன்ருள் கோமதி.

"ஊஹூம், இப்போ நேரம் இருக்காது. பாப்பா பொறந்தப்புறம் அதோடேயே விளையாடிண்டிருப்பேனே! அது என்னை அண்ணுன்னு கூப்பிடும், மாமி!"

"அப்படியா?"

"பாப்பா அழகாயிருக்கும், இல்லே?"

"ஆமாம்"

"என் மாதிரியே இருக்கும்னு பாட்டி சொல்ரு. இருக் கட்டும். ஆனு, கண்ணு மாத்திரம் அதுக்கு நன்ஞத் தெரி யணும்."

அவள் உணர்வு வெதும்பியது. முத்துவை உத்வேகத்துடன் அருகில் இழுத்துக் கொண்டாள். ஆனால், அவனிடம் சிறிதும் பதற்றமில்லை. உற்சாகமும் கலகலப்பும் நிறைந்த அச்சிறுவன் பொய்யுலகில் வாழ்ந்து கொண்டிருக்கவில்லை. தான் கண்ணற்றவன் என்பதையும், அதன் சிரமத்தையும் நன்கு உணர்ந்தே இருந்தான். ஆனால் அதை ஓர் உண்மை என ஒப்புக்கொண்டு, மேலே தன் பாட்டில் செல்கிறான். மற்றவர்களை விட தான வித்தியாசமானவன் என்ற எண்ணம் இல்லாமல் பழகுகிறான். வெறுப்போ துக்கமோ மண்டி, அதற்கு அடிமையாகவில்லை. அவனுடைய உற்சாகத்தின் ஓட்டத்தில் குறைகளை நினைத்து அழுதுகொண்டிருக்க நேரம் இல்லை.

அந்த மன நிலையை அவனுக்கு உண்டாக்கியது யார்? கோமதி அவன் தாயைப் பார்த்தாள். அமைதியுடன் அப் பெண் முத்துவிடம் "ஆமாம் முத்து, நீ சொல்ற மாதிரியே பாப்பாவுக்குக் கண் நனறுத் தெரியும்" என்றாள்.

அந்த அமைதியில் ஜயித்து விட்டாளே விதியின் குருட்டுத்தனத்தை!

ஊனமுள்ள குழந்தையைத் தன் அனுதாபத்திலும் உணர்ச்சிப் புயலிலும் கொல்லாத அவள் தன்மை நன்கு புலனாயிற்று. பாவம், மீனாட்சிககுத்தான் மகனுக்கு உதவத் தெரிநதிருக்கவில்லை.

"நீ வர இனனும் நாழியாகுமாம்மா?"

"அப்படித்தான் தோணறது முத்து. உள்ளே இருக்கிற மாமி போனப்புறம டாக்டர் எங்கள் எல்லோரையும் ஒவ்வொருவராயப் பார்க்கணும்."

"அப்போ நான் போய் இன்னும் கொஞ்ச நேரம் கதை கேக்கறேன்!" முத்து கைகளை முன்னால் நீட்டிக் கொண்டே எதிலும் இடித்துக் கொள்ளாமல் அறையைவிட்டு வெளியேறினான்.

கோமதி அப்பெண்ணை மறுபடியும் பார்த்தாள். கண்களில் நீர் சுரந்தது. பிறக்கும் குழந்தை நன்றாகவே பிறக்க

லாம். இப்போதே ஏன் ஊனம் என்று முடிவு கட்டவேண்டும்? அப்படித்தான் இருந்தாலும்...கண்களில் விளிம்பில் இப்போது முத்து நின்றான். ஹரியின் துயருக்காக நெடுமூச்சு விடும் அதே சமயத்தில், முத்து நெஞ்சில் ஆறுதலளித்தான். ஊனத்துள் வெறுமை வராதபடி வளர்க்கும் கை தடுக்க முடியுமென்று இப்போது தெரிந்துவிட்டதே! பின், குறையைக் கண்டு ஏன் பயப்பட வேண்டும்? உலகில் பகல் மட்டுமா இருக்கிறது; பகலோடு இரவும்தான் இருக்கிறது. அந்த இரவில் நிலவும்தான் இருக்கிறது

துணிந்து பார்ப்போமே! அவள் எழுந்தாள்.

"ஏன் போகிறீர்கள்? டாக்டரைப் பார்க்கவில்லையா?" என்றாள் முத்துவின் அன்னை.

"வேண்டாம்" ஒரு நிமிஷம் பேச்சு இல்லை "முத்துவை எனக்கு ரொம்பப் பிடித்திருக்கிறது."

அந்தப் பெண் புன்னகை செய்தாள்.

"உங்கள் பெயரென்ன?" என்றாள் கோமதி திடீரென்று.

"விஜயா!"

"நான் வருகிறேன்." கோமதி அங்கிருந்து திரும்பி நடந்தாள். இப்போது நெஞ்சில் பாரமுமில்லை. பிறப்பது பெண்ணாயிருந்தால் என்ன பெயர் வைகக வேணடுமென்பதைப் பற்றி சந்தேகமுமில்லை.

## மாரியாத்தா

கொத்தமங்கலம் சுப்பு

1. கண்ணாத்தா காத்தமுத்தே—மாரியாத்தா—நீ
பொன்னாத் தந்திடணுமடி—மாரியாத்தா—நீ
என்னாத்தா நீயல்லவோ—மாரியாத்தா—அதைச்
சொன்னாத்தான் சொகங் கிடைக்குமடி—
மாரியாத்தா

2. ஓங்காரக் கூசரியடி—மாரியாத்தா—நான்
உன்னைநம்பிப் போட்டேனடி—மாரியாத்தா
பாங்காகப் பயிர் செழித்து-மாரியாத்தா-இந்தப்
பழனமெல்லாம் சிறக்க வேணும் மாரியாத்தா.

3. ஆத்திலே தண்ணீ வரணும்-மாரியாத்தா - சம்பா
நாத்துப் பசுக்கவேணும் மாரியாத்தா.
நேத்தைக்குச் சாமியா நீ—மாரியாத்தா-எங்க
கோத்திரப் பேரில்லையோ மாரியாத்தா.

4. உன்னையல்லாது தெய்வமில்லே—மாரியாத்தா
-நானும்
திண்ணையிலே தூங்கப் போறேன்-மாரியாத்தா
உன் நிலந்தான் ஓணுமடி-மாரியாத்தா-அதில்
செங்நெல் தரவேணுமடி—மாரியாத்தா.

5. எல்லாமும் சாமியாமோ-மாரியாத்தா-பட்டுக்
குல்லா மழைக்காகுமோ—மாரியாத்தா

வல்லாரை பால் தருமோ-மாரியாத்தா-அது
நல்லாவின் பால் பொருமோ—மாரியாத்தா.

6. மாரி மாரி மாரிவேணும்—மாரியாத்தா-பூ
மாலே சேஞ்சு மதுவெடுக்குவோம-மாரியாத்தா
வேரேயாரும் தெய்வமில்லே மாரியாத்தா உன்னே
வேணமட்டும் கும்பிடுவோம்—மாரியாத்தா.

7. தத்துக்கிளி வெட்டுப்பூச்சி தண்டட்டயாம்—பொழைகள்
தாவாதி இருக்கவேணும—மாரியாத்தா
மத்தப்படிமாடுகன னு கொழுகொழுத்து-உந்தன்
மகிமை வௌளங்க வேணும்—மாரியாததா

8. கொண்டாடி பூசை வைககிறோம்-மாரியாத்தா—எங்களேத்
திண்டாட விட்டுடாதே—மாரியாத்தா
உண்டோடி உனனேப் போலே-மாரியாத்தா—தெய்வம்
கண்டோரார் சொல்லட்டுமே மாரியாத்தா.

9. குட்டிவெட்டிப்பொங்கல் வைக்கிறோம—மாரியாத்தா-புள்ளே
குட்டி தெம்பா வாழவேணும்—மாரியாததா
சட்டியிலே ரெத்தம வைச்சோம்—மாரியாத்தா—பீங்கான்
வட்டியிலே சோறிருக்கணும—மாரியாததா.

10. நாடு செளிக்க வேணும்—மாரியாத்தா—எங்கும்
நல்ல மழை பெய்யவேணும்—மாரியாத்தா
காடு கெளம்ப வேணும்—மாரியாத்தா—கதிர்
கட்டுக் கலங்காண வேணும் மாரியாத்தா.

# பணம் பிழைத்தது

பி. எஸ். ராமையா

நாலைந்து வீடு தள்ளி இருந்த தெரு முனையிலிருந்து ஒரு நாய் ஊளையிட்ட சத்தம் வந்தது. இரவு மணி ஒன்பதுக்கு மேல் இருக்கும். அருணாசல முதலியாரைச் சூழ்ந்திருந்த யாவரையும் அந்த ஊளை ஒரு குலுக்குக் குலுக்கி எடுத்தது. அறையில் மங்கலாக எரிந்துகொண்டிருந்த வெளிச்சத்தில் ஒருவரை ஒருவர் பார்த்துக் கொண்டனர். வாசல் திண்ணையில் இருளில் உட்கார்ந்திருந்தவர்களும், வீட்டினுள் கூடத்தில் கூடிச் சிரமத்துடன் மௌனம் பயின்ற பெண் மக்களும் திடுக்கிட்டுப் பார்த்தனர்.

திண்ணையிலிருந்த ஒருவர் நாயை விரட்ட எழுந்து போனார்.

அருணாசல முதலியார் படுத்திருந்த அறையில் அவருடைய இளைய மகன் ஜகதீசன் அவசரமாக ஜன்னல் கதவுகளை அடைக்க முயன்றான் முதலியார் சிரமத்துடன் தலையைத் திருப்பிக் கையைக் காட்டினார். மூத்தவன் வைத்தியலிங்கமும், மைத்துனர் கந்தசாமி முதலியாரும் கிழவரிடம் நெருங்கினார்கள். வைத்தியலிங்கம், "என்னப்பா வேணும்?" என்றான்.

கிழவர், "ஜன்னலை ஏன் அடைக்கிறான்?" என்றார். அவர் குரல் மிகமிக நைந்து தணிந்து இருந்தது. ஆனாலும், ஜகதீசன் காதுக்கு எட்டியது. "சில்லுன்னு குளுந்த

காத்து வருது" என்றான். கிழவர், "பரவாயில்லே, அடைக்காதே" என்றார். மூடிய ஒரு கதவையும் திறந்து வைத்தான் ஜகதீசன்.

நாயின் ஊளைச் சத்தத்தைக் கிழவர் கேட்கக்கூடாது என்பதுதான் ஜகதீசன் கருத்து. ஆனால், அவர் அதைக் கேட்டு விட்டார் என்பது தெளிவாயிற்று. கவலையுடனும் பயத்துடனும் அவரைப் பார்த்தார்கள், எல்லாரும். கிழவர் புதிய அசதியுடன் கண்ணை மூடிக்கொண்டார்.

நாய் இரண்டாம் முறையாக ஊளையிட்டது. மறு கணம், தன்மேல் வந்து தாக்கிய கல்லின் வேதனை தாங்காமல் வாள் வாளென்று கதறிக்கொண்டு ஓடியது.

அருணாசல முதலியாரின் கண்கள் மூடியே இருந்தன. முகத்தில மரண பயத்தின் வேதனை படர்ந்தது. நாயின் ஊளை, அவர் நெஞ்சில் தயக்கத்துடன் தலைகாட்டிக் கொண்டிருந்த ஆசையையும் நம்பிக்கையையும் தலையில் இடித்து முடுக்கியது. "காலையில் சென்னையிலிருநது மிக மிகப் பெரிய டாக்டர் வருகிறார். அவர் நிச்சயமாக என் ஆயுளை நீடித்துக் கொடுத்து விடுவார" என்று தனககுத்தானே சொல்லிக் கொணடிருந்த மனம், டாகடா வருவதற்குள் அவரைத தொட வரும் காலனை ப பற்றிச் சிந்திக்கத் தொடங்கியது. "இனி நம்பிகைகககு இடமே இல்லை; இனி நம்பிக்கைக்கு இடமே இல்லை" என்ற வார்தைதகள் நெஞ்சிலே வேகமாகச் சுழன்றன.

முதலியார் செனனையிலிருந்து கிராமத்திற்கு வந்து ஒரு மாதம் ஆகிறது. சென்னையிலேயே உடல்நிலை சரியாக இல்லை. எலலேயே அற்றது எனறு தோனறிய அவருடைய உழைப்புச் சகதி தேயும் அறிகுறிகள தெனபட்டன. அடிக்கடி சோர்ந்து உட்கீாாந்தார். அவருக்கே இதெல்லாம் புதுமையாக இருநதன.

"நரையும திரையும் உடலைச் சோந்தவை, மூப்பு மனதலைதச சேர்நதது நம்முடைய சிந்தனையின வேகம்

தான் நம் பருவத்தின் அறிகுறி. நெஞ்சிலே இளமை இருக்கும் வரையில் நமக்கு முதுமை கிடையாது" என்று அவர் எங்கோ படித்திருந்தார். அதையே தமது வாழ்க்கைத் தத்துவமாகவும் கொண்டுவிட்டார். "உடலின் இயல்பான வளர்ச்சியிலே தேய்ந்தும் மாறுதல்கள் தோன்றித்தான் தீரும். ஆனால், என் நெஞ்சிலே முதுமைக்கு இடம் கிடையாது" என்று தாமே சொல்லிக்கொள்வது வழக்கமாகிவிட்டது.

அப்படிப்பட்டவருடைய சிந்தனையோட்டத்திலே திட்டுக்கள் தோன்ற ஆரம்பித்தவுடன் பயந்துவிட்டார். டாக்டரைக் கலந்தார். "வேறு ஒன்றும் இல்லை. அளவுக்கு மிஞ்சிய உழைப்புத்தான் காரணம். உடல் அயருமபோது உள்ளத்தையும் பாதிக்காமல் விடாது. கொஞ்ச நாள் எங்கேயாவது வெளியூரில் போய் ஓய்வெடுத்துக்கொள்ளுங்கள்" என்றார் டாக்டர்.

அருணாசல முதலியார் டாக்டர் யோசனையை ஏற்றுக்கொண்டார். கோடைக்கானல், குற்றாலம், நீலகிரி என்றார்கள் மக்களும் உறவினரும். ஆனால், முதலியார் தம்முடைய சொந்தக் கிராமத்திற்குப் போகத் முடிவு செய்தார்.

கிராமத்தில் அவருடைய மூதாதையர் தேடி வைத்து, தலைமுறை தலைமுறையாகக் கைமாறிவந்த நில புலன்கள் இருந்தன. அவற்றோடு அவர் சம்பாதித்த ஏராளமான பணத்தின் ஒரு பகுதியையும் மண்ணாக மாற்றிச் சேர்த்திருந்தார். தாமே நேரில் போய் ஆறு மாதமாவது நிலங்களையெல்லாம் கவனிக்கவேண்டும் என்று நெடு நாளாக எண்ணம் இருந்தது. ஆனால் சென்னையிலிருந்த வருமானத் தலையூற்றைவிட்டு அப்படி இப்படி நகரவும் மனம் இடம் கொடுக்கவில்லை.

இப்போது டாக்டர் சொன்ன யோசனை அந்த நெடுநாளைய எண்ணத்தை நடத்திக்கொள்ள வழி காட்டியது. ஓய்வெடுத்துக்கொள்ள கிராமத்திற்குப் புறப்பட்டார்.

## 2

அருணுசல முதலியாரின் வரவு கிராமத்தில் ஒரு விழாவாக நிகழ்ந்தது. அந்த வட்டாரத்திலேயே மிகப் பெரிய மிராசுதாரர். சென்னையிலே பரந்த வியாபாரம். லட்சக் கணக்கில் கொண்டு கொடுக்கும் சரக்குகளைத் தான் அவருடைய ஸ்தாபனங்கள் கையாண்டன. முதலி யார் தொட்டது தங்கமாகிறது என்ற நம்பிக்கை கிராம மக்களிடையே, ஏன், நகர மக்களிடையிலுங்கூடப் பரவி யிருந்தது.

ஓரளவுக்கு அது உண்மைதான். முதலியாரின் வர்த் தகத் திறமை நன்ருக முற்றிப் பழுத்திருந்தது. வியா பாரத்தில், வரப்போகும் லாப நஷ்ட முடிவைப்பற்றி முன்கூட்டியே உணரும மனக்குறளி படைத்திருந்தார் அவர். அதன் உதவியால் தங்கமாக்கும் இனங்களைத்தான் தொடுவார். நஷ்டமாகும் வியாபாரத்தில் அவர் இறங் கியதே இல்லை.

முதலியார் தமது இருபத்தைந்தாவது வயதில் சென் னைக்குச் சென்ருர். முப்பது வருஷங்களுக்கு மேலா கின்றன. மேலே மேலே முனேறிக்கொண்டே இருந் தார். வருஷந்தோறும் அவருடைய சொத்து மதிப்பு உயர்ந்துகொணடே இருநதது. வருஷத்திற்கு ஒரு லட்சம் என்று கணக்குப் போட்டதுபோல, அவர் கிராமத்திற்கு வந்தபோது முப்பது லட்ச ரூபாய் மதிப்பாக உயர்ந் திருந்தது.

அவர் ஓய்வெடுத்துக் கொள்வதற்காகவே கிராமத் திற்கு வந்தார். அந்த ஓய்வு நேரத்தைத் தமது நிலச் சொத்துக்களைச் சீர்படுத்துவதில் செலவழிக்க எண்ணிஞர். ஆனல், வந்து சேர்ந்த இரண்டு மூனறு நாட்களிலேயே உடல்நிலை மிகவும் சீர்கேடடைந்துவிட்டது உடனேயே சென்னைக்குத் திருமபி இருக்கலாம். இன்னும் கொஞ்சம் பார்ககலாம எனறு தஙகிஞர். ஊரைவிட்டு அசையவே கூடாது என்று டாக்டர் சொல்லும் நிலைமை வந்துவிட்டது.

சென்னையிலிருந்தே டாக்டர்கள் வந்தார்கள். முதலியார் ஆசையாக வாங்கிய புது 'ப்யூக்' காரும், வைத்தியலிங்கம் தனியாக வாங்கிய 'ஆர்ம்ஸ்ட்ராங் ஸிட்லி' காரும், சென்னைக்கும், கிராமத்துக்கும் அஞ்சல் ஓட்டம் போட்டுக்கொண்டே இருந்தன. "இனி மேல் பயம் இல்லை. இன்னும் ஒரு வாரத்தில் சென்னைக்குப் புறப்பட்டு விடலாம்" என்பார் டாக்டர். அந்த மகிழ்ச்சி இரண்டு நாள் பொங்கிக் கொண்டிருக்கும். மூன்றும் நாள் அவ்வளவும் வடிந்து விடும். "இன்னும் பதினைந்து நாள் வரையில் நீங்கள் அதிகம் பேசக்கூடாது" என்று உத்தரவு இட்டு விடுவார்.

இரண்டு நாளாக நம்பிக்கைக்கு வடிதல் பருவம். சென்னையில் உள்ள பெரிய டாக்டர் ஒருவரையே வர வழைப்பதென்று தீர்மானிக்கப்பட்டது. அவர் காரில் வந்துபோக நேரம் ஆகும் ஆகையால், விமானத்தில், மூன்று மைல் தூரத்தில் உள்ள மைதானத்தில் கொண்டு வந்து இறக்கி, அங்கிருந்து காரில் அழைத்து வருவதென்று தீர்மானிக்கப்பட்டது. நாளைக் காலையில் விமானத்தில் வருகிறார்.

அவர் வந்து சேருவதற்குள் காலன் வந்துவிடுவான் என்பதை அந்த நாய் ஊளையிட்டுச் சொல்லிவிட்டது. முதலியார் மனம் மிகமிக வேகமாகச் சுழன்றது. "நம்பிக்கைக்கு இடம் இல்லை. இனி நம்பிக்கைக்கு இடம் இல்லை!" என்ற எண்ணம் திரும்பத் திரும்ப எழுந்தது.

## 3

முதலியார் வியாபாரத்தில் ஈடுபட்ட ஆரம்ப காலத்தில் நல்ல தெய்வ பக்தர். பின்னும் அவர் நாஸ்திகராக மாறிவிடவில்லை. ஆயினும், அவர் நெஞ்சிலே தெய்வம் என்னும் வார்த்தை உணர்ச்சியுடன் ஒட்டவில்லை. எப்படியோ கொஞ்சம் கொஞ்சமாக அது அவர் உணர்ச்சிகளிலிருந்து விடுபட்டுத் தூர ஒதுங்கி விட்டது.

வீட்டிலே நடக்கும் நாள், கிழமை, பண்டிகை, பூஜைகளில் அவரும் கலந்துகொள்வார். வெளியிலே தம்மை வந்து அணுகும் தான தருமம், தெய்வ சம்பந்தமான காரியங் களுக்குப் பணம் கொடுப்பார். ஆனல், அதிலெல்லாம் அவருடைய நெஞ்சம் ஒட்டியதே இல்லை.

இந்த நிலைமை அவர் தம் நினைவுடன் சிந்தித்து உண் டாக்கிக் கொண்டதல்ல. அவர் உள்ளத்திலே வந்து நிறைந்து கொண்டிருந்த பணம் என்ற சக்தி, கொஞ்சம் கொஞ்சமாக மற்றவற்றை யெல்லாம் வெளியேற்றி விட்டது. அதை அவர் அறியவேயில்லை.

கிராமத்திற்கு வந்து உடல்நிலை கவலைக்கிடமாக ஆனபோது, அவர் மனத்தில் பணத்தை நெட்டித் தள்ளிக் கொண்டு பிற விஷயங்கள் வந்து புக ஆரம்பித்தன. தமக்குப் பின் தமது சொத்துக்களும், வியாபாரமும் என்ன ஆகும் என்பதைப் பற்றிச் சிந்திக்கத் தொடங்கினர். கூடியவரையில் அதற்குத் தகுந்த வழி வகுத்துவிட வேண்டுமென்று எண்ணினர். தம் குமாரர்களை வர வழைத்து அவர்களிடம் பேசினர். மைத்துனர் கந்தசாமி முதலியார், "அதைப் பற்றி எல்லாம் இப்பொழுது ஏன் கவலைப்படுகிறீர்கள்? சென்னையிலிருந்து பெரிய டாக்ட ரையே வரவழைப்போம். இன்னும் ஒரு வாரத்தில் சென் னைக்குப் போய்விடலாம். அதன் பின் வேண்டியதை யோசித்துக் கொள்ளலாம்" என்று சொல்லி விட்டார். அவர் சொன்னது மிகமிக இதமாக இருந்தது. தனக்குப் பின் சொத்துக்களுக்கு வகை செய்துவிட்டுத் தாம் போகும் வழியைப் பற்றிச் சிந்திக்க விரும்பினர் முதலி யார். முதல் விஷயத்திற்கே அவசரம் இல்லை என்று வந்த வுடன், இரண்டாவது அம்சத்தைப்பற்றி யோசிக்காமல் இருப்பதே நல்லது, என்று முடிவு செய்து விட்டார். ஆனல், அந்தத் தடவை உடல் தேறி எழுந்தவுடன், அடுத்த உலகத்தில் தமக்குச் சரியான இடம் பிடித்துக் கொள்வதற்கு வேண்டியதை எல்லாம் செய்வது என்று மாத்திரம் உறுதி செய்துகொண்டார்.

அந்த உறுதியை நிறைவேற்ற அவகாசமே கிடைக்காதென்று சொல்லிவிட்டது நாயினது ஊளை. முதலியார் சிந்தை குழம்பியது. இந்த ஜென்மத்தில் வேண்டிய அளவு தாம தெய்வத்தைத் தொழுது ஆராதித்துப் பணிவதற்கு இடம் கொடுக்காமலே, தமது ஆயுளை முடிக்க முயல்வது அநியாயம் என்று எண்ணினார். அதைப் பகவானிடமும் சொன்னார். "ஒரே ஒரு சந்தர்ப்பம் கொடு, ஸ்வாமி!" என்று கெஞ்சினார்.

"அதற்கு நீ என்ன விலை கேட்டாலும் கொடுக்கிறேன். எல்லாம் நான் தேடிய சொத்து. அதில் எத்தனை லட்சம் வேண்டுமானாலும் நீ காட்டும் இடத்தில் கொட்டுகிறேன்" என்றார். பகவானிடத்திலிருந்து பதில் கிடைக்கவில்லை. அவர் மனமே சொல்கிறது. 'எமன் கிராம எல்லைக்குள் வந்துவிட்டான் என்று நாய் சொல்லுகிறதே. பகவானாலும் கூட அவனைத் திருப்பி அழைக்க முடியாது' என்று ஓடியது சிந்தனை.

அங்கிருந்து ஒரே பாய்ச்சலில் மனம் எமன் சந்நிதிக்குத் தாவிற்று. "ஒரே ஒரு வருஷம் கொடு. அதற்குள் எல்லாவற்றிற்கும் தக்க வழி செய்துவிடுகிறேன். எனக்கும் தெய்வ வழிபாடு செய்ய அது போதும்" என்று விண்ணப்பம் செய்தார் அதற்கும் பதில் இல்லை.

"அவன் வந்துவிட்டான். வெறுங் கையுடன் திரும்ப மாட்டான். ஐயோ! எனக்குப் பதில் வேறு யாராவது அவனுடன் போகச் சம்மதித்தால் ஆம் அவன் வெறுங் கையுடன் போகவேண்டாம் யாராவது அதற்குச் சம்மதித்தால் அவர் குடும்பத்துக்கு இரண்டு லட்ச ரூபாய் எழுதி வைத்துவிடுகிறேன்" என்று ஓடியது சிந்தனை.

கண்களை விழித்தார். எதிரே கந்தசாமி முதலியார், தம் மனைவி மக்கள் எல்லோரும் கவலையுடன் குனிந்து தம் முகத்தையே பார்த்துக்கொண்டிருப்பது தெரிந்தது. கந்தசாமி முதலியார் முகத்தைப் பார்த்து உதட்டை அசைத்தார். குரல் வெளிவரவில்லை. கந்தசாமி முதலியார்

குனிந்து காதை முதலியார் உதடுகளின் அருகே கொண்டு போனார்.

அருணாசல முதலியார், "என் 'செக்' புத்தகம் கொண்டு வரச் சொல்லுங்கள்" என்றார் மறுபடி கண்களை மூடிவிட்டார்.

## 4

ஐந்து நிமிஷம் கழிந்திருக்கலாம்; கிராமத்திலேயே தங்கியிருந்த டாக்டர் வந்து, தமது நாடியைச் சோதித்ததை உணர்ந்தார் முதலியார் டாக்டர் முகத்தில் என்ன குறிகள் தோன்றியிருக்கும்? ஜகதீசன் ஏன் அப்படிப் பதறிய குரலில் ரகசியமாகக் கேட்கிறான்?

டாக்டர் ஊசி குத்தினார். மருந்தின் வேகம் இடது கரத்திலிருந்து தமது இதயத்தை நோக்கி விரைந்ததை உணர்ந்தார். அதோ, அதோ. இதயத்தினுள் புகுந்துவிட்டது. வெளியே புறப்படுகிறது. உடல் முழுவதும் பரவப் புறப்பட்டுவிட்டது.

முதலியாருக்குச் சிறிது தெம்பு வந்தது. டாக்டர் மறுபடியும் நாடியைச் சோதித்தார். பேசுகிறார்: "ஒரு மணி நேரம் வரைக்கும் இப்படியே இருக்கட்டும். எனக்கு வாசலில் ஒரு ஈஸிசேர் போட்டுக் கொடுக்கச் சொல்லுங்கள். மறுபடி ஒரு ஊசி போடவேண்டும்" என்றார்.

கந்தசாமி முதலியார் செக் புத்தகத்துடன் வந்து, "டாக்டர், செக் புத்தகம் கொண்டுவரச் சொன்னாரே" என்றார்.

டாக்டர் "அவராகக் கேட்டால் பார்த்துக் கொள்ளலாம். ஊசி குத்தியவுடன் நாடி பலம் அடைந்திருக்கிறது. அவரை அலட்டினால் மறுபடி தளர்ந்து போகும்" என்று சொல்லிவிட்டு வெளியே போய்விட்டார்.

அருணாசல முதலியார் கண்களை மூடியபடியே இவ்வளவையும் கேள்விக் கண்ணால் கண்டார்.

"ஊசி குத்தியவுடன் நாடி பலமடைந்திருக்கிறது. எனக்கே தெரிகிறதே ... எமன் அருகில் வர இன்னும் ஒரு மணி நேரம் இருக்கிறது. மறுபடி ஓர் ஊசி...இன்னொரு மணி நேரம். இப்படியே காலைவரை ... பெரிய டாக்டர் விமானத்தில் வந்துவிடுவார் ... ஊஹூம், தவறு. ஊசியை நம்பி இருக்கமுடியாது. எமனை எதிர்க்க ஊசிக்கு வலுவுண்டோ? இரண்டு லட்ச ரூபாய் ... எனக்குப் பதில் அவனுடன போகச் சம்மதிக்கிறவர் குடும்பத்துக்கு ஒரே செக். அதில் எழுதுவானேன்! மைத்துனரிடம் சொல்லிவிட்டால் போதும் .."

அருணாசல முதலியாரின் உதடுகள் அசைந்தன. கண்கள் மூடியபடியே இருந்தன. குரல் கேட்கவில்லை. ஜகதீசன் தந்தையிடம் நெருங்கிக் குனிந்து கேட்டான். நிமிர்ந்து தணிவான குரலில், "என்னவோ இரண்டு லட்சம் என்கிறாரே" என்றான் மாமாவிடம். மறுபடி முதலியாரின் உதடுகள் அசையுமென்று ஆவலுடன் கவனித்தார்கள்; அசையவில்லை.

அருணாசல முதலியாரின் உடல் அவர் வசத்திலிருந்து நழுவி நின்றது. அதை இயக்க முடியவில்லை என்பதை உணர்ந்தார்.

ஒரு மணிக்கு ஒன்றாக மறுபடி இரண்டு ஊசிகள் குத்தப்பட்டதை உணர்ந்தார். ஒவ்வொரு தடவையும் மருந்தின் வேகம் உடல் முழுவதும் பரவுவதையும் உணர்ந்தார். ஆனால், உடல் மாத்திரம் வசப்படவில்லை.

இரண்டாம் முறை மருந்தைச் செலுத்திவிட்டு டாக்டர் நாடியைப் பரிசோதித்துவிட்டு, "நாடி இயல்பு நடைக்கு வந்துவிட்டது. இனிமேல் பயமில்லை. இருந்தாலும் நான் வாசலிலேயே இருக்கிறேன்" என்று சொன்னது தெளிவாகக் கேட்டது.

அதன் பிறகு அந்த அறையில் வேறு சத்தமே இல்லை ஒன்றிரண்டு தடவை யாரோ மிகவும் நிதானமாக நடந்து சென்ற காலடி ஓசை கேட்டது, யாரோ குசுகுசுவென்று

சொன்ன, "நீங்கள் போய்த் தூங்குங்கள்; நான் இருக்கிறேன்" என்றதும் கேட்டது.

அப்புறம் நிசப்தம். அப்படி எவ்வளவு நேரம் ஆகி இருக்குமோ தெரியாது. திடீரென்று இரவின் நிசப்தத்தைக் கலக்கிக்கொண்டு, "ஐயையோ! ஐயையோ! வந்து விட்டானே" என்ற கூச்சலொன்று வந்தது. அதை அடுத்த வேறு பல கூச்சல்கள் கேட்டன. அதெல்லாம் முதலியார் காதில் படவேயில்லை.

"வந்துவிட்டான்! வேறு யார்! அவன்தான். பதிலுக்கு ஆள் திட்டம் செய்து விட்டார்களா? சந்தசாமி முதலியாரிடம் சொன்னேனே? இரண்டு லட்சம் கொடுத்து விடலாம், ஆள் அகப்பட்டிருப்பானு? அந்தத் தொகைக்குச் சம்மதிக்காவிட்டால், இன்னும் அதிகம் கேட்டாலும் தயங்கவேண்டாம, கொடுத்து விடுங்கள் என்று சொல்லாமல் போனேனே. அதோ! அது என்ன சத்தம்? காலன் காலடி ஓசையா? வைத்தி! மாமாவைக் கூப்பிடு. ஆள் அகப்பட்டானு? இரண்டு லட்சத்திற்கு ஒரே செக்காகக் கொடுக்கிறேன் என்று சொன்னீர்களா? டாக்டர், நாடி இயல்பிலேயே இருக்கிறதா? ஒரே ஒரு வருஷம் போதும். பதில் ஆள் பேசி வைத்திருக்கிறேன். அவன குடும்பத்துக்கு இரண்டு லட்சம் ரூபாய் கொடுக்கப்போகிறேன்."

முதலியாரின் உள்ளம் காவிரி வெள்ளத்திலே தோன்றும் சுழல் போலச் சுற்றியது. திரும்பத் திரும்ப இரண்டு லட்சம், பதில் ஆள், ஒரு வருஷம் என்று வட்டமிட்டுக் கொண்டே இருந்தது.

## 5

தூரத்தில் எங்கிருந்தோ பலமான இரைச்சல் வந்து அந்தச் சுழலைக் கலைத்துவிட்டது, மனம் தனக்குள்ளேயே சுழல்வதைவிட்டு வெளியிலிருந்து வந்த சப்தங்களைத் தொடர முயன்றது. வீதியில் பலர் ஓடினார்கள். என்ன என்னவோ கூவினார்கள். தம் வீட்டிலும் பலர் நடமாடினார்

கள். தாம் இருந்த அறையிலும் பரபரப்பு நிறைந்து இருந்தது. ஆனால் ஒன்றும் தெளிவாக இல்லை. கண்களைத் திறக்க முயன்றார். உடல் இன்னும் தம் வசத்திற்குள் வரவில்லை என்பதை உணர்ந்தார். தாம் அதைப் பிரிந்து போகும் முன் நேரும் இயற்கையின் ஒரு படியா அது என்று சிந்தித்தார்.

வீதியில் யாரோ பேசிய குரல் கேட்டது. வார்த்தைகள் மிகவும் தெளிவாக ஒலித்தன. முதலியார் மனம் ஆவலுடன் காதின் வழிவந்த குரலைப் பற்றியது.

"முனிரத்தினம் நாயுடு வீட்டுக்குள்ளே திருடர்கள் புகுந்துவிட்டார்கள். நாயுடு ஊரில் இல்லை. அவர் மனைவியும் குழந்தைகளுந்தான். திருடர்கள் உள்ளே நுழைந்து நகைப் பெட்டியைத் தூக்க முயன்றபோது நாயுடு மனைவி விழித்துக்கொண்டு, "ஐயையோ! திருடன் வந்துவிட்டானே!" என்று கூவினாள். திருடர்களில் ஒருவன் கத்தியைக் காட்டி அவளைச் சும்மா இருக்கச் செய்தான் மற்றவர்கள் பெட்டியுடன் வெளியேறி விட்டார்கள்

"அவள் போட்ட கூச்சல் கேட்டு அக்கம் பக்க வீடுகளில் இருந்தவர்கள் எழுந்து ஓடினார்கள். வீட்டு வாசல் கதவு உட்புறம் தாழிட்டிருந்ததால் ஒன்றும் செய்ய இயலவில்லை.

"தெற்கு வீதியிலிருந்த சிலரும் அந்தக் கூச்சலைக் கேட்டு ஓடிவந்தார்கள். நாயுடுவின் அக்காள் வீடு, அவர் வீட்டுக்கு நேர் பின்புறம் இருக்கிறதல்லவா? நாயுடுவின் அக்காள் மகன் வேங்கடசாமி வீட்டுப் பின்புறமாக ஓடிவந்தான்.

"அப்போதுதான் கத்தியைக் காட்டி நின்றவன் சுவரேறிக் குதித்துத் தப்பியோட முயன்றான். வேங்கடசாமி பாய்ந்து அவனைப் பிடித்தான். இருவரும் போராடினார்கள். வேங்கடசாமி போட்ட கூச்சலைக் கேட்டு இன்னும் சிலரும் அந்தப் பக்கம் ஓடிவந்தார்கள். ஆட்கள் வருவதைக் கண்டவுடன் திருடன் வேங்கடசாமியைக்

கத்தியால் குத்திவிட்டு ஓடிவிட்டான். உதவிக்கு வந்தவர் களில் சிலர் திருடனைத் துரத்தினார்கள். ஆனால், அகப்பட வில்லை.

"கத்தி வேங்கடசாமியின் மார்புக்கூட்டின் நடுவில் பாய்ந்து அரை அடி மேல்நோக்கிப் போயிருக்கிறது. ரத்தம் வெள்ளமாக வெளியேறிவிட்டது. பையன் பிழைப்பது கஷ்டம் என்கிறார்கள்" என்று முடித்தது வாசல் குரல்.

அதை அடுத்து யாரோ கேட்டான், "டாக்டர்! பைய னைப் பார்த்தீர்களா? பிழைத்துக்கொள்வானா?" என்று.

டாக்டர், "நான் போவதற்கு முந்தியே உயிர் ஓய்ந்து விட்டது. கத்தி இதயத்தையே கிழித்துவிட்டது" என்றார்.

இன்னொருவர், "இறந்துவிட்டானா! அட, பாவமே! போன மாசந்தான் கலியாணம் நடந்தது. ரொம்ப நல்ல பையன். கெட்டிக்காரன். தைரியசாலி 'போலீஸில் சேர மனுப் போடப்போறேன்' என்றான். இன்ஸ்பெக்டர் பயிற் சிக்குச் சுலபமாகத் தேர்ந்தெடுத்திருப்பார்கள்" என்றார்.

முதலியார் உடலில் புது பலம் ஊறியதை உணர்ந் தார். சிந்தனை புதுவழியில் கும்மாளம் அடித்துக்கொண்டு ஓடியது. "அப்பாடா! நாய் ஊளையிட்டது. எனக்காகவே அல்ல. எமன் வந்தது உண்மைதான். ஆனால், எனக்காக வரவே இல்லை. முனிரத்தினம் நாயுடு வீட்டுக் கொல்லைப் புறத்தில் வந்து நின்றவனைப் பார்த்துத்தான் நாய் ஊளை யிட்டிருக்கிறது. அவன் என்னைப்பற்றி எண்ணியிருக்கவே மாட்டான்" என்றது அவர் மனம்.

கண்களைத் திறக்க முயன்றார். என்ன ஆச்சரியம்! கண் கள் திறந்தன. கையை அசைக்க முடிந்தது. "வைத்தீ!" என்று கூப்பிட்டார். குரல் தெளிவாக ஒலித்தது. இரண்டு பிள்ளைகளும் மைத்துனரும் கட்டிலருகில் வந்துநின்றார்கள்.

ஜகதீசன், "வேர்த்திருக்கிறதே!" என்று சவுக்கத்தால் தந்தையின் நெற்றியைத் துடைத்தான்.

முதலியார் மைத்துனரிடம், "செக்கைக் கிழித்து" போட்டுவிடுங்கள்" என்றார்.

மைத்துனர், "இன்னும் எழுதவேயில்லையே! செக் புத்தகத்தைக் கொண்டுவா என்றீர்கள்..." "என்றார்.

அருணாசல முதலியார் இடைமறித்து, "எழுதவே இல்லையா? புத்தகத்தைக் கொண்டுபோய் வைத்துவிடுங்கள்" என்றார்.

நஷ்டம் வரும் வியாபாரத்தில் அவர் இறங்கியதே இல்லை.

'கோமுகி வேலன்'

# சொத்தைக் கரும்பு

"செஞ்சாலி தலைசாய்க்கும்; மஞ்சள் இஞ்சிச்
செழுங்கிழங்கு நிலம்பிளக்கும்; கமுகம சாலை
அஞ்சாறு செமபவளம உதிர்க்கும; தென்னை
அணிஅணியாய்ச் செவ்விளநீர் அழகு
காட்டும்;
பைஞ்சோலை பாட்டிசைக்கும்; வாழைப் பந்திப்
பசுங்குலைகள் செம்பொன்னாய்ப் பழுத்துத்
தூங்கும்
எஞ்சாது தைப்பொங்கல் வருக என்றே
இன்பூறும் செங்கரும்பைப் பாராய்
பெண்ணே!"

என்றிட்டான் ஏருழவன் எழில்குலுங்கத்
தைப்பொங்கல் நாளைச் செய்தான்.
சென்றிட்ட கோமுகிநீர்ச் செழுந்துறையில்
நீராடிச் சிரித்த மங்கை

"நன்றத்தான் இப்பொங்கல் நாளததான்
இனி அத்தான் நன்னீர் கொண்டு
சென்றத்தான் பொங்கிடுவேன் செழுங்கரும்பின்
பாற்சோறு செய்வேன் அத்தான்"

என்றிட்டாள் சென்றுள் நங்கை
எழில்கொண்டு மகிழ்ந்தான் நம்பி
"நன்றிட்ட விதைக ளெல்லாம்
நாமிட்ட பருவ நீரால்
நின்றிட்ட கரும்பின் சாறுய்
நிலைத்திட்ட வைய மெல்லாம்
இன்றிட்ட பொங்கற் சோற்றில்
இனித்திட்ட" தென்றுன் வள்ளல்.

முத்தரிசிக் கோலத்து முற்றத் தொருபக்கம்
கொத்து மஞ்சள் கட்டிக் கொடிமுல்லைப் பூச்சூட்டிச்
சித்திரத்துப் பானைச் செழுங்கலத்துப் பாலூற்றி
முத்தைப் பழிக்கும் முனைமுறியா நல்லரிசிப்
புத்தமுதம் பொங்கினுள்; புத்தமுதப் பொங்கலுக்குத்
தித்திக்கும் சாறு செழித்திருக்கும் செங்கரும்பே!

என்று பாடிய இன்கவிதை
இடையறுந்து நடைதளரக்
குன்றுபோலக் குமைந்தெழுந்த
கோவையெலாம் தூளாக

"இன்றுவந்த பொங்கலுக்கே என்செய்வேன் பானை
யிலே
ஒன்றரிசி இல்லை'யென்றே ஓலமிட்டாள் என்
மனையாள்
'முத்தைய செட்டி முனைக்கடையில் புள் நறுக்கிக்
கத்தைக் கரும்பிருக்கு; கா'சென்றுன் சின்னப்பயல்
கத்தைக் கரும்பும் கழியென்றேன் அத்தனையும்
சொத்தைக் கரும்பென்றேன் சோர்ந்து.

### சொத்தைக் கரும்பு

கல்லானை தின்னக் கரும்பாகும்;
காமவேள் கைத் தலத்து
வில்லாகும்; ஒற்றியூர் வெண்மணற்
குனறில் விரித்து நின்று
நில்லாத வாழ்வில் நிலையிட்ட
பிள்ளைக்கு நேர்கரும்பாம்;
பொல்லாத ஏழையேன் பொங்கற்
குதவாத பூங் கரும்பே.

# பிரதிவாதி அன்னம்மாள்

டி. என். சுகி சுப்பிரமணியன்

பாத்திரங்கள் :

வக்கீல் வாதிராஜ் :— வாதி பட்சிராஜன் வக்கீல்.

வக்கீல் பிரசன்னம் :— பிரதிவாதி அன்னம்மாளின் வக்கீல்.

நீதிபதி :

கோர்ட்டு சேவகன் :

தமிழ் ஆசிரியர் மயில்வாகனம் பிள்ளை :— சாட்சி.

பட்சிராஜன் :— வாதி.

அன்னம்மாள் :— பிரதிவாதி.

*[அழகே உருவான அன்னம்மையும், ஆஜானுபாகுவான பட்சிராஜனும் எதிர் எதிராக நிற்கிறார்கள். நீதிபதி வந்து அமர்ந்துவிட்டார். கோர்ட்டுச் சேவகன் முறைப்பாக நிற்கிறான். ஒருசில அன்பர்கள் வேடிக்கை பார்க்க கூடியுள்ளார்கள். வக்கீல் பிரசன்னம் எழுந்து பேசத் தொடங்குகிறார்.]*

வக்கீல் பிரசன்னம்: கனம் கோர்ட்டார் அவர்களே! வாதிராஜ் இதுவரை பேசக் கேட்டீர்கள். அவர் பெயர் வாதிராஜ என்ற காரணத்தினால்தானோ என்னவோ தமது வாதி பட்சிராஜன் சார்பாக வழக்கைப் பதிவு செய்து பேசி முடித்தார்.

**வக்கீல் வாதிராஜ்:** *(மெதுவாக கோர்ட்டார் காதில் விழாதபடி) பெரிய பிரசன்னவதனன்! சிலேடை போட்டு விட்டார்.*

*[கூட்டத்துள் சிறிய சிரிப்பலைகள் எழவே]*

**சேவகன்:** *சைலன்ஸ்! சைலன்ஸ்!*

**நீதிபதி:** தொடர்ந்து பேசுங்கள்.

**வக்கீல் பிர:** *வாதியின் தாவா, என்னுடைய கட்சிக்காரி யான குமாரி அன்னம்மை, தன்னை மணம் புரிந்துகொள்ள ஒப்புக் கொண்டாள்; பின்னர் மறுக்கிறாள்; முன் ஒப்பந்தப் படி தன்னை மணந்து கொள்ளும்படி உத்தரவு கேட்கிறார்.*

*[தொலைவில் நிற்கும் பட்சிராஜன், 'அதேதான் விஷயம். பேச்சு மாறினால் விட்டுவிடுவோமா?' என்று பேசுகிறார்.]*

**நீதிபதி:** வக்கீல் உமது கட்சியைப் பேசும் போதோ பிரதி வாதியின் கட்சியைப் பேசும் போதோ நீர் குறுக்கே பேசக்கூடாது. இது எச்சரிக்கை.

**பட்சிராஜன்.** மன்னிக்கணும்; இனி பேசவில்லை.

**நீதிபதி:** *பிரதிவாதியின் சாரபாக உங்கள் 'ஆர்க்கு மென்ட்' என்ன? வாதப்பொருள் யாதோ ?*

**வ. பிரசன்னம்** சொல்லுகிறேன். கனம் கோர்ட்டா ரவர்களே. பிரதிவாதியான எமது கட்சிக்காரியின் சார் பாக இப்பொழுது சில வாதஙகள - விஷயங்கள்-சொல்ல விரும்புகிறேன். எ ம து கட்சிக்காரியாகிய பிரதிவாதி அன்னமமாள, பிரஸ்தாப ஒப்பநதம் பிறந்ததை ஒப்புக் கொளளுகிறாள்.

**நீதிபதி:** குமாரி அ ன் ன ம் மா ள் ! நீங்கள் ஒப்புக் கொணடது உணமைதானா ?

**அன்னம்:** *(தலைகுனிந்தபடியே)* உன்மைதானுங்க.

**நீதிபதி:** உங்களிடம் பிரதிவாதி பட்சிராஜன் என்ன கேட்டார்?

**அன்னம்:** அவர் தம்மைக் கலியானம் செய்து கொள் ளும்படியாகக் கேட்டார். நான் சம்மதம் என்றேன்.

**நீதிபதி:** மேலே சொல்லுங்கள், மிஸ்டர் பிரசன்னம்.

**வ. பிரசன்னம்'** உத்தரவு. பிரதிவாதி அன்னம்மாள் திருமணத்திறகு ஒப்புதல் தந்ததும், பின்னர் ஒப்புதலை மறுத்ததும் உண்மையென்று சொல்லிக் கொள்ள விரும்பு கிறார். காரணம் வெகு முககியமானது. எனது கட்சிக்காரர் அன்னம்மாள் இந்தத் தாவாவை எதிர்ப்பதற்குச் சில பறவைகளே காரணம்

**நீதிபதி** (வெகு சிரத்தையுடன்) ப ற வை க ளா ? என்ன பறவைகள்? பறவைகளிடம் வாதிராஜ் - மன்னிக் கவும, வாதி பட்சிராஜன் கொடுமையுடன் நடப்பவரா? வேட்டைககாரரா?

**வககீல வாதி:** (சட்டெனை எழுந்து பேசுகிறார்) எனது கட்சிககாரா பட்சிராஜன் எநதப் பறவைக்கும் தீங்கு செய் யாதவா. அவர் சனிக்கிழமைதோறும் கருடதரிசனம் செய் பவா. கோவிலுக்குப் போகும்போது கிளிகளுக்குப் பழம் வாங்கிப் போடுவார். தமது வீட்டிலுள்ள குறுணை, நொய் முதலியவற்றை கோழிகளுக்கும் குஞ்சுகளுககும் போடு வார். அவர் இதயம புறுவைப்போல சாநதமயமானது; சமாதானத்தை விரும்புவது, யுவர் ஆனர்.

[பட்சிராஜன் சிரித்து மகிழ்கிறான். மற்றவர்களும் சிரித்து மகிழ்கிறார்கள். அன்னமமாள் மட்டும் 'பொய் பொய்' என்று குமுறுகிறாள் ]

**நீதிபதி:** வக்கீல் பிரசன்னம், உங்கள் வாதங்களைச் சொல்லுங்கள். பட்சிராஜனின் பக்தியையும் இரக்கத் தையும் நாம் எதிர்பார்க்கவில்லை.

**வ. பிரசன்னம்:** க ன ம் கோர்ட்டாரவர்களே! சில பட்சிகள் குறுக்கும் நெடுக்குமாகப் போகுமேயானால், நம் ஆயுள் கோணலும் மாணலுமாகப் போகும். எடுத்த காரி யத்திற்கு சகுனத்தடை என்றும் நம்பப்படுகிறது. இந்த

நம்பிக்கை தொன்று தொட்டு - மண் தோன்றி கல் தோன்ருக் காலந் தொட்டு - மனிதன் மரக்கிளையைவிட்டு இறங்கி நடக்கத் தெரிந்த காலம் தொடங்கி இருந்துவரும் நன்னம்பிக்கை. அப்படி இருக்க, புள்ளினங்களைப் பெண்ணினத்திற்கு உவவை கூறியது வருந்தத்தக்கது. இதனுல் என் கட்சிக்காரி, வாதியை மணம் செய்ய விரும்பவில்லை.

நீதிபதி: காரணம் என்ன?

வ. பிரசன்னம்: வாதியானவர், என் கட்சிக்காரியைப் பார்த்து வாய்க்கு வந்தபடி பேசியிருக்கிருர். அதாவது, 'அன்னமே' என்று பேசினுராம் - என் கட்சிக்காரி சொல்லுகிருர். மறுக்க முடிமா?

[பட்சிராஜன் நின்ற பககமாக கேள்வி போகவே, 'ஆமாம் சொன்னேனெ' என்று தலையாட்டுகிருர்.]

வ. பிரசன்னம்: 'கிளியே' என்றும் பேசினுராம், பட்சிராஜன். 'மயிலே' என்றும் பேசினுராம். வேறுசில நாடுகளில் இதுபோல் பெண் ஒருத்தியைப் பார்த்து ஆண் மகன் சொல்லியிருந்தால், நடப்பது பயங்கர விளைவுகள். மணம் செய்த பின்பு விவாகரத்துக் கேட்பதைவிட, மணத்திற்கு முன்பே மரியாதையுடன் விலகிக் கொள்ள விரும்புகிருர். வந்தபின் காப்பதைவிட வருமுன் தடுப்பது அறிவுடைமை என்பதை நம்புகிறவள் என் கட்சிக்காரி. 'கிளியே, மடமயிலே, அஞ்சுகமே' என்று சொன்னதை ஆட்சேபித்து தாவாவைச் செலவுடன் தள்ளுபடி செய்ய வேண்டுமென்று கோருகிருள்.

நீதிபதி: 'கிளி' என்ருல், அது என்ன?

வ. வாதிராஜ்: யுவரானர், சரியான கேள்வி. என் கட்சிக்காரர் பட்சிராஜனுக்கு இந்த எதிர் வாதம் மிகுந்த ஆச்சரியத்தை உண்டு பண்ணுகிறது. தன் தரப்பில் சாட்சியாக, தனக்கு அறிவூட்டி வளர்த்த ஆசானையே விசாரிப்பதாகத் தெரிவித்துக் கொள்ளுகிருர்.

**வ. பிரசன்னம்:** அறிவூட்டி வளர்த்த அந்த ஆசான், தமது அருமந்த மாணுக்கனை பட்சிராஜனைப் பார்த்து 'கிளியே, மடவன்னமே, அஞ்சுகமே' என்று சொன்னுரா?

[பார்வையாளர் பகுதியில் சிரிப்பு உண்டாகிறது]

**நீதிபதி:** மயில் என்றால் என்ன? வாதி தரப்பு சாட்சி கூண்டிலேறட்டும்.

[கோர்ட் சேவகன் கூப்பிடுகிருன்.]

**சேவகன்:** வாதி த ர ப் பு சாட்சி இ இ இ, மயில் வாகனம் பிள்ளே ஏ ஏ ஏ, மயில் வாகனம் பிள்ளே ஏ ஏ ஏ, மயில் வாகனம் பிள்ளே ஏ ஏ ஏ......

[கோர்ட்டு வாசலில் ருத்திராக்ஷக் கழுத்தோடும், முண்டிதம் செய்த தலேயோடும், காவியுடை அணிந்த கட்டுமஸ்தான உடலுடனும் இருந்த ஒருவர் உள்ளே வருகிருர்.]

**மயில்வாகனம்:** ஈண்டுள்ளேன், ஈண்டுள்ளேன். யாது காரணமோ?

**சேவகன்:** சாட்சிக் கூண்டினுக்குள் வந்து சேருங்கள்.

**மயில்:** ஆண்டு 'சேர்' (நாற்காலி) இல்லாத போது சேருங்கள் என்பது பொருந்தாதது. வந்து நில்லுங்கள் என்பதே சாலப்பொருந்தும்.

[மயில்வாகனம் சாட்சிக் கூ ண் டு க் கு ள் வந்து நிற்கிருர் ]

**வ. வாதிராஜ்:** வாதி பட்சிராஜன் தங்களிடம் படித்த மாணுக்கரா?

**மயில்:** ஆம். 'கற்கக் கசடறக் கற்றபின்-நிற்க, அதற்குத் தக' என்றபடி என்னிடம் பாடம் கேட்டனன். அதையே வாழ்க்கையில் பு கு வா ன் வே ண் டி கையாண்டனன் போலும்.

**நீதிபதி:** கிளி என்றால் என்ன?

மயில்: கிளியெனப்படுவது சிந்தனைதானே, மற்றும் சாரு, சுகம், சுவாகதம், அரியொடு, அவந்திகை, தத்தை, வன்னி, ஏசி, என்மனார் புலவர்.

வக்கீல் வாதி: அதாவது, கிளிக்கு ஏற்பட்டுள்ள வேறு பெயர்கள் சாரு முதல் என்மனார் வரைக்கும்.

மயில்: 'என்மனார்' என்பது கிளியின் பெயர் இல்லை. 'என்று சொல்லுவார்' எனனும் பொருளைக் குறிக்கும். சாரு முதல் ஏசிவரை, எண் பெயர்களை உடையது கிளி.

வக்கீல் பிர: 'ஏசி' என்றாலும் கிளியென்று பெயர் ஆகுமா?

மயில்: ஆகும்.

வககீல் பிர: 'ஏ, ஏசி!' என்று ஒரு பெண்ணை ஒரு ஆடவன் அழைப்பது நியாயமா?

வக்கீல் வாதி: சட்டத்திற்கும் வழக்கிற்கும் புரம்பான வாதத்தை கோர்ட்டார் அனுமதிக்கக கூடாதென்று கேட்டுக் கொள்ளுகிறேன்.

நீதிபதி: தொடர்ந்து சொல்லுங்கள், சாட்சி மயில் வாகனம்.

மயில்: கிளியின் வேறு பெயர்களான 'தத்தை' 'அவந்திகை' போன்ற சொற்களை 'ஒரு பொருள் குறிக்கும் பல பெயர் கிளவிகள்' எனக் குறிப்பிடுவது இலக்கண மரபு.

வக்கீல் பிர: கனம் கோர்ட்டாரவர்களே! கிழவிகள்! கிழவிகளைப் பார்த்துத்தான் கிளியை, தத்தை, சாரு, சுகம், சுவாகதம், அரி என்றெல்லாம கூறலாம் என்பது சாட்சியார் மயில்வாகனத்தின் கூற்று. எனது கட்சிக்காரி அன்னம்மாவைக் கிழவி என்று மறைமுகமாக பரிகாசம செய்யத்தான் 'கிளியே' என்று வாதி பட்சிராஜன் குறிப்பிட்டுள்ளார். பெண்மணிகளின் வயதை சிருஷ்டி ரகசியங்களுக்குள் ஒன்றாகப் போற்றி வந்துள்ள சமுதாயத்துள் வாழும் நாம், இளம் பெண், யுவதி, குமாரி அன்னம்மாவைப்

பார்த்து 'கிழவி' என்று மறைமுகமாகப் பரிகாசம் செய்த ஒருவரை எப்படி மணப்பாள் எனது கட்சிக்காரி?

மயில்: அன்று அன்று, ஐயகோ! கிளவிக்கும் கிழவிக்கும் வேறுபாடு தெரியாத உம்மிடம் யாம் என்ன பகர்வது? பல கிளவிகள் என்றால் பல பெயர்கள என்று கொள்ளுதலே நியாயம்.

நீதிபதி: இங்குள்ள சந்தேகம், கிளிக்கும் பெண்ணிற்கும் என்ன சம்பந்தம்? அதனைச் சொல்லுங்கள்.

மயில்: நடுவரே! கிளி அழகான இனம். பெண் அழகின் இருப்பிடம். கிளியின் தன்மைகளில் சிறப்பான தன்மை—அது பேசும் சற்று அதிகமாகப் பேசும்.

வகீல் பிர. அதிகமாகப் பேசுபவர்களைத தமிழில் என்ன சொல்லுவாாகள்?

மயில: வாயாடி என்பார்கள்.

வக்கீல் பிர: கிளியென்றும் கூறலாமா?

மயில்: கூறியதையே கூறும்போது, 'இது என்ன கிள்ளைப் பேசசு?' எனறு இயம்புவது காணபரமபரை.

வக்கீல் பிர. யுவர் ஆனர்! என் கட்சிக்காரி அனனம்மை மீது வாதி பட்சிராஜன மறைமுகமாக 'வாயாடி' என்று குற்றஞ் சுமத்தியுள்ளார் என்பதற்குச் சாட்சியின் கூற்றே சான்றாகும். தனனை வாதி 'வாயாடி' எனறு அழைககும் போது, அவரைத் திருமணம் செய்துகொள்ள எந்தக் குமரிதான சம்மதம தருவாள்?

வக்கீல் வாதி: ஆசிரியோய்! பெண்ணைப் பார்த்து ஆண்மகன் ஒருவன் 'கிளியே' என்று சொன்னதற்குச் சான்று இருக்கிறதா?

மயில்: இருக்கிறது. கிளியின் பேச்சு, பெண்ணின் பேச்சிற்கும், பெண்ணின் பேச்சு கிளியின் பேச்சிற்கும் உவமை கூறுவது மரபு. கம்பரே கூறுகிறார்.

நீதிபதி: பெண்ணிற்கும் கிளிக்கும் என்ன சம்பந்தம்?

**வக்கீல் பிர:** 'கிளி' என்றால் சொன்னதையே சொல்லும். 'வாயாடி' என்றும் 'ஏசி' என்றும் தம்மை ஏசிக் காட்டியதாக நினைக்கிறார் குமாரி அன்னம்.

**வக்கீல் வாதி:** குயுக்தி வாதமாகக் கொள்வது தவறு. கிளியென்று எனது கட்சிக்காரர், 'இனிமையே, அழகின் உருவமே கண்ணுக்கு இனிமையாகி காது குளிரச் செய்யும், பேசும் மரகதமே' என்று தான் பொருள் கொள்ள வேண்டும்.

**நீதிபதி:** சாட்சியின் சாட்சியத்தைக் கேட்கலாம்.

**மயில்:** ஆயிடை அன்னம் அன்னாள்
அமுதுகுத்து அனைய செய்ய
வாயிடை மழலை இன்சொல்
கிளியினில் குழறிமாழ்கி.

**வக்கீல் வாதி:** இது யாருடைய கவி!

**மயில்:** இது கலவியிற் சிறந்த கம்பன் கவி.

**வக்கீல் வாதி:** கம்பன்—தெய்வ மஹாக்கவி. கம்பனே தனது ராமன, சீதாபிராட்டியைப் பார்த்துச் சொன்ன தாகக் கூறியிருக்கிறான். இதனை கனம் கோர்ட்டாரவர்கள் கவனிக்கவேணடும். சீதையின் பேச்சு கிளியின் பேச்சுக்குச் சமம். இக்கருத்திலேயே, வாதி பட்சிராஜன கூறியுள்ளார் என்பது வெள்ளிடைமலை.

**வக்கீல் பிர:** கம்பன் என்ன சொன்னான் என்பது 'கேள்வியறிவு' ஆகும். கேசுக்கு சம்பந்தமில்லாத ஒரு கவி சொல்லக் கேட்பது சட்டப்படி சாட்சியம் ஆகாது. அது பற்றி இங்கு பேச்சு வேண்டியதும இல்லை. மேலும் கமபன் எனது கட்சிக்காரியைப் பார்ததும் சொல்லவிலலை சாட்சி கூறவந்தவர் 'கிளியினில் குழறி' என்றும் கூறினார். கனம் கோர்ட்டாரவர்கள் கவனிக்கவேணடிய குறிப்பு ஒன்றும் உள்ளது 'குழறி' என்ற பொருள் தொனிக்க எனது கட்சிக்காரி சென்ற விசாரணைகளில் பேசினாரா? இல்லை. நீதிபதி அவர்கள இதனையும் அறிந்திருப்பார் என்பது எனக்கு மகிழ்ச்சி. கிளியுடன் — அன்னம்மாளை உவமை கூறியதே

தவறு என்று தாவா தொடர்ந்து செலவுடன் 'டிகிரி' ஆக்க வேண்டுமென்று வாது செய்யும்போது, 'கிளிபோல குழறி மாழ்கலாம்' என்னும் சாட்சியம் விந்தையினும் விந்தை.

வக்கீல் வாதி: எதிர்க்கட்சி அன்பர் இலக்கிய அறிவுள்ளவர் என்று நம்பிக்கொண்டே நாம் வழக்கை நடத்துகிறோம். ஒரு நாட்டின் பெருமை, ஒரு சமுதாயத்தின் நாகரிகம் கவி ஒருவனிடமே சரண்புகுந்து கிடக்கிறது. அவனே நாட்டின் நல்லோன். அவனே மொழியின் சக்கரவர்த்தி. மக்கள் மன இயல்பை எடுத்துககாட்டுவது இலக்கியம் ஒன்றுதான். இதனை எவரும் மறுக்க முடியாது.

[ஆணித்தரமாக ஓங்கி மேஜைமேல் தட்டிப் பேசி முடிக்கிறார். இத்தனைக்கும் அயராத பிரசன்னம் தமது முகத்தில் புனமுறுவல் தவழ பேசத் தொடங்குகிறார் ]

வக்கீல் பிர யுவரானர். 'கிளியே' என்று சொன்னது தவறு இல்லையென்று மேற்கோள் கொடுக்கப்பட்டது. 'குயிலே' என்னும் சொல் நாகரிகமானதா? அதனைச் சொல்ல வாதிககு உரிமையுண்டா? — இதனை என் கட்சிக் காரி கேட்கிறாள்.

குயில கையாலாகாத பட்சி. கேவலம் அதைப்போய் என் கட்சிககாரிமேல் பழிச் சொலலாகக் கூறுவது மிகவும் பெருத்த அவமானம். குயில் இரவோ பகலோ, சதாசர்வதா மரக்கிளையில் அமர்ந்து கூகூகூவென அலறிக்கொண்டிருக்கும்; இவ்வாறு அலறுவதைத் தவிர வேறு வேலை இருப்பதாகவே தெரியவில்லை. என் கட்சிக்காரிக்கு இத்தகைய அவமானம் ஏற்படுவதைச் சகிக்கமாட்டார். அவருக்குத் தெரிந்த ஒரே பாட்டு, 'கல்லார்க்கும் கற்றவர்க்கும்' (இதனை வக்கீல் பாடிக்காட்டுகிறார்) என்னும் ஒரே பாட்டுத்தான். இந்தப் பாடலையும் நாற்பது ஐம்பது மாணவிகளுடன் பாடிப் பழகியவர். தனியாக எதையும் பாட இயலாதவர். சங்கீத ஞானம் இல்லை என்பதை வாதி, பட்சிராஜன் சுட்டிக்காட்ட விரும்பினரா? இல்லை...

நீதிபதி: (குறுக்கிட்டு) குயில் என்றால் என்ன?

**வக்கீல் வாதி:** குயிலின் குரல் இனிமை வாய்ந்தது. கிளியின் பசுமை கண்ணுக்கும், குயிலின் இனிமை காதுக்கும் தேவாமிர்தம்...

**வக்கீல் பிர:** *(சற்று கோபமாக)* அப்படியானல், என் கட்சிக்காரி அன்னம்மாவை 'கற்ருர்க்கும் கல்லார்க்கும்' பாடலைப் பாடச் சொல்லுகிறேன். கனம் கோர்ட்டாரவர்கள் கேட்டு, பிறகு வாதியின் உள்நோக்கம் என்னவென்று தீர்மானித்துக்கொள்ளலாம். பாட அனுமதி கொடுத்தால், பாடச் சம்மதம் தெரிவிக்கிருர் பிரதிவாதி...

**நீதிபதி:** இப்போது அவசியம் இல்லை.

**வக்கீல் வாதி:** குயில் இனிமையாகப் பாடும் பறவை என்பதை யாரும் ஆட்சேபணை செய்ய முடியாது. மேலும் தன் ஆசிரியர் சொல்லிய பாடத்தை என் கட்சிக்காரர் சரிவரக் கேட்டிருக்கிருர்.

**நீதிபதி:** குயிலுக்கும் பெண்ணுக்கும் என்ன சம்பந்தம் ஆசிரியர் மயில்வாகனம்?

**மயில்:** கலைமகள் என்று நாம் வணங்கும் தெய்வத்தைத் தாங்கள் அறிந்திருப்பீர்கள்.

> **கீதம் பாடும் குயிலின் குரலை**
> **கிளியின் நாவை இருப்பிடம் கொண்டாள்.**

சாட்சாத் கலைமகளின் குரலே குயிலின் குரல.

**வக்கீல் பிர:** என் கட்சிக்காரியை சரஸ்வதிக்கு ஒப்புக் கூறும் நோக்கம் வாதிக்கு இருந்திருந்தால், அவரது அடிப்படை கல்வியறிவை நாம் சந்தேகம் கொள்ளவேண்டியதாகிறது. இதுமட்டுமன்று 'பிற்காலத்தில் உனக்குக் குழந்தை குட்டி வளர்க்கத் தெரியாது; நான் ஆயாக்களை அமர்த்துவேன்' என்பதை மறைமுகமாகப் பேசி, பெண்மைக்கே மாசு கற்பித்துள்ளார்; தாய்மைக்குத் தாழ்வு பேசியிருக்கிருர்.

**அன்னம்:** *(வெட்கத்துடன்)* **உண்மை உண்மை. அது தான் அவரது நோக்கம்.**

வக்கீல் வாதி: என் கட்சிக்காரர் அவ்வாறு சொல்லவில்லை. 'குயிலே' என்றுதான் சொன்னார்.

வக்கீல் பிர: குயிலின் பிறப்புத் தன்மை — அதன் தாய்மை-அவக்கேடு என்பது எனதுஅருமை நண்பர் எதிர்க் கட்சி வக்கிலாருக்குத் தெரியாமற் போனதற்காக வருந்துகிறேன். காக்கையின் கூட்டில்போய் முட்டையிடும் இனத்தைச் சார்ந்தது குயில். தன குஞ்சுகளைத் தனக்கு வளர்க்கப் பிரியமில்லை யென்பதைக் காட்டுகிறது 'குயிலே' என்னும் சொற்றொடர். இவவாறு 'குயிலே' எனக்கூறி அவமானம் செய்வது தாய்மை உணர்சசிக்கே பாதகம் செய்வதாகும். குயிலே எனச் சொன்ன ஒரு சொல்லே பட்சிராஜனை மணக்க விருப்பமில்லை என்பதற்குப் போதுமான காரணம். இதுவும் போதாததற்கு 'மடமயிலே' என்றும் கூறியிருக்கிறார்.

நீதிபதி: மயில் என்றால் என்ன?

மயில்: மயில் பொதுப்பால். ஆண் மயிலுக்கு கலாபம், கலாபி, போத்து என்றும் பெண் மயிலை கேதாரம், சிகண்டி, ஞமலி...

நீதிபதி: பெண்ணிற்கும் மயிலுக்கும் என்ன சம்பந்தம்?

மயில்: பெண்ணும் மயிலும் அழகான உருவங்கள்.

வக்கீல் பிர: மயில் அழகே உருவமாக இருக்கட்டும். ஆனால் கனம் கோர்ட்டாரவர்கள் கவனிக்கவேண்டிய ஒரு குறிப்பு இருக்கிறது. ஆண்மயில்தான் அழகு வாய்ந்தது.

மயில்: ஆண் மயிலுக்குத் தோகையுண்டு, அதைக் கலாபம என்பர். அதன் நடையைப் பெண்களின் நடைக்கு உவமை கூறுவர்.

வக்கீல் வாதி: இதற்கு மேற்கோள் கூற இயலுமா?

மயில்: தெய்வப் புலமை திருவள்ளுவர் கூறியுள்ளார், 'அணங்குகொல்' என்று

**வக்கீல் பிர:** ஆண் மயிலை, பெண்ணினமான என் கட்சிக்காரிக்கு ஒப்பிட்டுச் சொன்னால், அவ்வளவு ரசிக்கக் கூடியதாக இல்லை. இதனை வாதி சிந்தித்திருக்கவேண்டும்.

**நீதிபதி:** 'அணங்குகொல்' மேற்கோள் முழுவதும் என்ன?

**மயில்: அணங்குகொல் ஆய்மயில் கொல்லோ—தனங்குழை**

**மாதர்கொல் மாயும் என்னெஞ்சு.**

— இதன் பொருள் யாதெனில்...

**வக்கீல் பிர:** ஒரு பெண்ணை ஆண மயிலுக்கு உவமை கூறியது தவறு என்று என் கட்சிக்காரி மறுக்கிறார்.

**வக்கீல் வாதி:** நடையைத்தான இங்கு உவமை கூறியுள்ளார் வள்ளுவர். வள்ளுவர் வழியைக் கடைப்பிடிக்கும் எமது கட்சிக்காரர்.

**வக்கீல் பிர:** அந்நாள் ஆடவன் ஒருவனுக்கு, இது பெண்ணு, இல்லை இது மயிலா என்று இனம் தெரியாமல் இருந்தான் என்பதுதான மேற்கோள். மயிலுக்குத் தன் இனம் எது, பிற இனம் எது என்று அறியும் சக்தி இல்லாமல் இருக்கலாம். இருபதாம் நூற்றாண்டில் படித்த வாலிபனுக்கு மயிலுக்கும் மைவிழி மாதருக்கும பேதம் தெரியவில்லை யென்றால் அவர் கணணில கோளாறு இருக்கவேண்டும். என் கட்சிக்காரியை அவமதிக்கவே 'மயிலே' 'மடமயிலே' என்றார்.

**நீதிபதி:** சற்று அமைதி. சாட்சி கூறவந்த மயில் வாகனம் அவர்களே.

**மயில்:** நடுவர் அவர்களே!

**நீதிபதி:** மயிலுக்குத் தன் இனம் அறியும் ஆற்றல் உண்டா இல்லையா? இதை நிரூபிக்க ஏதேனும் மேற்கோள் தர இயலுமா?

**மயில்:** நீங்கள் இதுகாறும் கேட்டுவந்த இலக்கியமே அதற்குச் சான்று. சோலையில் — கோசல நாட்டின் சோலை

யில் உலவிவந்த ஆண் மயில்கள், பெண்களைப் பார்த்ததும், தன்னினமான பெண் மயில்கள் என்று அப்பெண்கள் பின் போனவாம்:

தடங்கொள் சோலைவாய்
மலர்பெய் தாழ்குழல்
வடங்கொள் பூண்இழை
மடந்தை மாரொடும்
தொடர்ந்து போவன
தோகை மஞ்ஞைகள்

வக்கீல் பிர ஆகவே, இதிலிருந்து மயில்களுக்கு கண் பார்வை கம்மியென்று தெரிகிறது! மனித இனத்தை மயிலினமாக, கோசலை நாட்டு மயிலகள் எண்ணியதாக கம்பா கூறலாம் ஆனால் தமிழ் நாட்டில் பிறந்த மனிதன் தமிழ்ப் பெண்ணொருத்தியைப் பார்த்து காட்டு மயிலாக எண்ணுவது அநாகரிகம் அதிலும் அழகான ஆண மயி லுக்கு என கட்சிககாரியை ஒப்புவகை கூறியது இன்னும் வருநதத்தககது.

நீதிபதி வாதியின் பக்கமாக என்ன சொல்லுகிறுர், வககீல் வாதிராஜ் ?

வக்கீல் வாதி: கனம் கோர்ட்டாரவர்களே! என் கட்சிக்காரர் பட்சிராஜன் சொல்லியதில் எவ்விதமான தவறும் இல்லையெனபதை நன்கு தெரிந்துகொண்டீர்கள். ஆகவே, என கட்சிக்காரா பிரதிவாதியை மணந்துகொள் ளச் சித்தமாக இருக்கிறுர். உரிமையும் உண்டெனக் கூறு கிறுர். கறற பாடத்தை காதல் வாய்ப்பு ஏற்பட்டதும் நடநது காட்டியிருக்கிறுா.

வக்கீல் பிர: யுவரானர். மேலே கூறிய எல்லாவற் றையும்விட என் கட்சிக்காரிக்கு மிகுந்த கோபத்தையும், வெறுப்பையும், சினத்தையும், ஆத்திரத்தையும், ஆவேசத் தையும் உண்டு பண்ணிய ஒரு சொல்லை வாதி பயன் படுத் தியது மன்னிக்கவோ மறுக்கவோ முடியாததாகும்.

நீதிபதி: என்ன கூறினுர் வாதி?

பிரதிவாதி அன்னம்மாள்

**வக்கீல் பிர:** *அன்னமே! — இவ்வாறு அழைத்தாராம் வாதி.*

**நீதிபதி:** *(வாதியிடம்) நீர் அன்னமே என்று கூறியதுண்டா?*

**பட்சிராஜன்:** "நீர் அன்னமே" என்று நான் கூறவில்லை. வெறும் "அன்னமே" என்று மட்டும் கூறினேன்.

*[சிறு சலசலப்பு]*

**மயில்:** அன்னத்துடன் 'நீர்' சேரவிலலை!...

*[பலதத சிரிப்பு; சைலன்ஸ், சைலன்ஸ் என்று சேவகன் கத்துகிறுன்.]*

**நீதிபதி:** அன்னத்தின் சிறப்பு என்ன? அதாவது பறவை இனமான அன்னத்தின் சிறப்பு என்ன?

**மயில்:** இலக்கியங்களில் உயிர் வாழும் மகா சிறப்பு வாய்ந்த புள்ளினம். தூய வெண்மை, அழகிய நடை, இவையே அதன் குணங்கள்.

**வக்கீல் பிர:** அதன் குணங்கள் அவ்வளவுதானு?

**மயில்:** பாலையும தண்ணீரையும் கலந்து வைத்தால் தண்ணீரைப் பிரிக்கும் தன்மை அதற்கு உண்டென காவியங்கள் கூறும்.

**வக்கீல் பிர:** (கோபமாக) யுவரானர். இந்தத் தன்மையைத்தான் என் கட்சிக்காரி வன்மையாக எதிர்க்கிறுர். தன்னையும் தன் தொழிலையும் மறைமுகமாக வாதி சுட்டிக் காட்டி ஏளனம் செய்தாரென்பதே அவள் ஆட்சேபனை.

**நீதிபதி:** கோர்ட்டாருக்கு விளங்கும்படியாகச் சொல்லுங்கள்.

**வக்கீல் பிர:** நான் விளக்கமாகச் சொல்லுகிறேன்.

**வக்கீல் வாதி:** விளக்க வேண்டுவதில்லை. எதிர்த்தரப்பு நண்பர் சொல்வதிலிருந்து, என் கட்சிக்காரர் வாதி பட்சிராஜன் இப்பொழுது தாம் செய்த யாவும் தவறு என்று ஒப்புக்கொள்ளுகிறுர். பிரதிவாதி அன்னம்மாள் தன்னை

மணக்க மறுப்பதின் காரணங்கள் அனைத்தும் தனது கற்பனையினால் வந்த தீங்குகள் என்றும் ஒப்புக்கொள்ளுகிறார். பிரதிவாதியின்மீது தாம் வேண்டுமென்றோ மறைமுகமாகவோ எவ்விதமான அவமானத்தையும் சுமத்தவில்லை, ஏளமுனம் செய்யவில்லையென்று பகிரங்கமாக இங்கு ஒப்புக்கொளளுகிறார். கிளியே, மயிலே, குயிலே என்று அழைத்த விதங்களும், பரிமாறிய சொற்களும் இலக்கிய ஜீவராசிகளான புள்ளினங்களுக்குச் சம்பிரதாயமாக ஏற்பட்ட சிறப்புக் குணங்கள் என நம்பி பிரதிவாதிக்குச் சூட்டி, அவளைப் பெருமைப் படுத்துவதாகச் சொன்ன வார்த்தைகள் என்பதை மனப்பூர்வமாக ஒப்புக்கொள்ளுகிறார். வாதியின் சாட்சி வித்வான் மயில்வாகனம் அவர்கள் அன்னப் பறவையைப் பற்றிச் சொன்னதிலிருந்து, தமது வருத்தத்தைத் தெரிவிப்பதுடன், பிரதிவாதியிடம் மன்னிப்புக் கேட்கவும், தாம் ஏளனம் செய்யவில்லையென உறுதி கூறவும் தயாராக இருக்கிறார். வழக்கை வாபஸ் பெற்றுக் கொள்ள விரும்புகிறார்.

**நீதிபதி:** எனக்குக் கண்ணைக் கட்டி காட்டில் விட்டது போலிருக்கிறது. வழக்கை வாபஸ் பெற்றுக்கொள்ளுவதால், பிரதிவாதியின் செலவுடன் வழக்கைத் தள்ளுபடி செய்ய வேண்டியதுதானே?

**வக்கீல் பிர:** யுவரானர், என் கட்சிக்காரி பிரதிவாதி அன்னம்மாள் சார்பாக ஒன்று கூற விரும்புகிறேன். அவள் பெயர் அனனம்மாள். தொழில் பால் வியாபாரம். தான் விற்பனை செய்யும் பாலில் நீர் கலந்து விற்பதை மறைமுகமாக சுட்டிக்காட்டவில்லை என்று வாதி பகிரங்கமாக ஒப்புக்கொண்டுவிட்டார்...

**வக்கீல் வாதி:** ஆமாம், ஒப்புக் கொண்டுவிட்டார்.

**வக்கீல் பிர:** வாதி ஒப்புக்கொண்டு விட்டதால், யுவரானர், வழக்கை டிகிரி செய்ய வேண்டுமென்றும், தள்ளக் கூடாதென்றும் கேட்டுக் கொள்ளுகிறாள். வாதி பட்சிராஜன் கோரியபடி, பிரதிவாதி அன்னம்மாள் அவனை

**மணக்க வேண்டுமென்று கனம் நீதிபதி அவர்கள் உத்தரவு செய்ய வேண்டுமென்று பிரதிவாதியே கேட்டுக் கொள்ளு கிருள்.**

**நீதிபதி:** *(சிரிப்புடன்)* செலவுடன் டிகிரி செய்வதா?

**வக்கீல் வாதி:** *யுவரானர், செலவுகளைப் பற்றி நாங் கள் பார்த்துக்கொள்ளுகிருேம்...*

**வக்கீல் பிர:** *எஸ், யுவரானர்...*

*[பிரதிவாதி அன்னம்மாளும் வாதி பட்சிராஜனும் ஒருவரை ஒருவர் பார்த்து மகிழ, சேவகன், சாட்சி சொல்ல வந்த மயில்வாகனத்தைப் பார்த்து மகிழ் வதுடன் திரை]*

*[குறிப்பு: இந்த நாடகத்தை ஆசிரியர் அனுமதி பெற்றே நடிக்க வேண்டும்.]*

# வாழ்க்கைத் தத்துவங்கள்

கவிமணி
தேசிகவிநாயகம் பிள்ளை

நாமே நமக்குத் துணையானால்
நாடும் பொருளும் நற்புகழும்
தாமே நம்மைத் தேடிவரும்
சற்றும் இதற்கோர் ஐயமுண்டோ?

நெஞ்சிற் கருணை நிறைந்தவர்க்கு
நேயம் கொண்ட நெறியோர்க்கு
விஞ்சும் பொறுமை யுடையவர்க்கு
வெல்லும் படைகள் வேறுளவோ?

உள்ளந் தேறிச் செய்வினையில்
ஊக்கம் பெருக உழைப்போமேல்
பள்ளம் உயர்மே டாகாதோ?
பாறை பொடியாய்ப் போகாதோ?

சாதி சாதி என்றுநிதம்
சண்டை போட்டு மண்டைகளை
மோதி மோதி உடைப்பதொரு
மூடச் செயலென் றுணரீரோ!

வாட்டும் உலகில் வழுத்தரிய
வாழ்க்கைத் துணையாம் மங்கையரை
ஆட்டும் பொம்மை அடிமைகளாய்
ஆக்கி வைப்ப தழகாமோ?

கால நதியின் கதியதனில்
கடவுள் ஆணை காண்பீரேல்
ஞால மீது சுகமெல்லாம்
நாளும் அடைந்து வாழ்வீரே.

## வாசகர் வட்டம்

ஆண்டுதோறும் 6 புத்தகங்களை வெளியிடும் தமிழ்ப் புத்தகச் சங்கம் இது. ரூ. 25 அனுப்பி இச் சங்கத்தில் அங்கத்தினராய் சேருபவர்களுக்கு இந்த 6 நூல்களும் வீடு தேடித் தபாலில் வந்து சேரும். தபால் செலவு இலவசம்.

இப்புத்தகமும், மேல் உறையின் கடைசிப் பக்கத்திலுள்ள 1965-ஆம் ஆண்டு அறிவிப்பும் உங்களுக்குத் திருப்தியளித்தால், கீழுள்ள விண்ணப்பத் தாளை இன்றே பூர்த்தி செய்து, சந்தாத் தொகையுடன் எமக்கு அனுப்பி, "வாசகர் வட்ட"த்தில் அங்கத்தினராய்ச் சேருங்கள்.

### விண்ணபபத் தாள்

புக்வெஞ்சா (BOOKVENTURE)
[ "வாசகர் வட்டம்" பதிப்பாளர் ]
14, தணிகாசலம் செட்டி ரோடு,
**தி. நகா, சென்னை-17.**

*என்னை உங்கள் **வாசகர் வட்டம்** சங்கத்தில் ஓராண்டிற்கு அங்கத்தினராய்ச் சேர்த்துக்கொள்ள வேண்டுகிறேன். நீங்கள் தொடர்ந்து வெளியிடும் 6 புத்தகங்களை நான் ஏற்றுக் கொள்ளவும், பிறகு, விலகிக்கொள்ள விரும்பினால் இரண்டு மாதங்களுக்கு முன்னதாகவே உங்களுக்குத் தெரிவிக்கவும் ஒப்புகிறேன்*

*இத்துடன் மணிபார்டர் மூலம்/போஸ்டல் ஆர்டர் மூலம்/பாங்க் டிராப்ட் மூலம் ஆண்டுச் சந்தா ரூ. 25 (ஆறு மாதச் சந்தா ரூ. 12-50) அனுப்பியிருக்கிறேன*

........... ...........

கையெழுத்து.

தேதி :

பெயர் : ...........

விலாசம் : ..........................

..........................

..........................

# வாசகர் வட்டம்

## 1965 — வெளியீடுகள்

| | | |
|---|---|---|
| ஜனவரி | **"ஸோக்ரதா", "ஆத்ம சிந்தனை"**<br>(இரு நூல்கள்) — ராஜாஜி | 1 |
| மார்ச் | **"புத்ர"** (புது நாவல்)<br>லா. ச. ராமாமிருதம் | 2 |
| மே | **"தமிழா பணபாடும வரலாறும"**<br>க. அ. நீலகண்ட சாஸ்திரி | 3 |
| ஜூலை | **"இன்றைய தமிழ் இலக்கியம்"**<br>பொறுக்கியெடுத்த கதை, கவிதை, கட்டுரை, நாடகம், அடங்கிய தொகுப்பு நூல் | 4 |
| செப். | **"விஞ்ஞானத்தின் புதிய எல்லைகள்"**<br>தென் பாரத விஞ்ஞானிகளின் சிறந்த கட்டுரைகள் | 5 |
| நவம்பர் | **"அமமா வந்தாள்"** (புது நாவல்)<br>தி. ஜானகிராமன் | 6 |


பதிப்பாளர் :

BOOKVENTURE

MADRAS-17